# அழகன் பெருமாள் கதை

## (வரலாற்றுக் கதைப்பாடல்)


பதிப்பாசிரியர்

முனைவர் சூ. நிர்மலா தேவி






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Al̲akan perumāḷ Kat̲ai |
| Author | : | Dr. S. Nirmala Devi M.A.,<br>Dip. in Epigraphy & Archaelogy<br>Dip. in Manuscriptology |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Tharamani<br>Chennai - 600 113 |
| Edition | : | First |
| Publication No. | : | 394 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2001 |
| Paper used | : | 18.6 TNPL Super Printing |
| Size of tbe book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No. of pages | : | x + 198 |
| Price | : | Rs.45/- |
| No. copies | : | 1200 |
| Binding | : | Paper Pack |
| Printed by | : | United Bind Graphics, Chennai - 4.<br>☎ 4984693. 4661807. 6427724 |
| Subject | : | A Historical Folk Ballad on the Pandiya King Al̲akan Perumāḷ |

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

அச்சுக்கலை தமிழர்களுக்கு அறிமுகம் ஆவதற்கு முன்னர் பழந்தமிழர்கள் பனையோலைகளில் நூல்களை எழுதி வைத்தனர். இவ்வோலைகள் இன்றும் சுவடிகளாக நம்மிடம் உள்ளன. பழந்தமிழர் பெருமையைக் காட்டும் இச்சுவடிகள் தமிழகம் மட்டுமன்றி உலகமெங்கும் பரந்து கிடக்கின்றன.

சுவடிகளைப் பாதுகாக்க வேண்டித் தனியார்களும், செல்வந்தர்களும், அரசு நிறுவனங்களும், பல்கலைக் கழகங்களும் ஈடுபட்டன. தென்மாவட்டங்களில் காணப்பட்ட தமிழ்ச் சுவடிகள் திருவனந்தபுரத்திலுள்ள கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் சேகரிப்பட்டன. அங்குள்ள சுவடிகள் சிந்து, கும்மி, தாலாட்டு, வில்லுப்பாட்டு, கதைப்பாடல்கள் ஆகிய நாட்டுப்புற இலக்கிய வகைமையினையும் தன்னகத்தே கொண்டவை ஆகும். பிற சுவடிக் காப்பகங்களை விடவும் இப்பல்கலைக் கழகச் சுவடி நூலகத்தில் நாட்டுப்புற இலக்கியச் சுவடிகள் அதிகமாகும்.

முனைவர் சூ. நிர்மலா தேவி அவர்கள் இந்நூலகத்திலிருந்து அழகன் பெருமாள் கதை எனும் கதைப்பாடலைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்துள்ளார். இந்நிறுவனம் இந்நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது.

நாட்டுப்புறக் கதைப்பாடலைப் பதிப்பிப்பதில் வல்லவரான முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்கள் தமிழுக்கு எனப் பல சுவடிகளை மேலும் பதிப்பிக்க வேண்டும். அவருக்கு என் பாராட்டுக்கள்.

நாட்டார் வழக்காற்றில் அவர் முத்திரை பதிக்க வேண்டும். அவர் மேன்மேலும் புகழ்பெற்று வளர வாழ்த்துகின்றேன்.

இக்கதைப்பாடலுக்குரிய சுவடி கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் உள்ளதாகும். இக்கதைப் பாடலுக்கு இந்நூலகச் சுவடி தவிர்த்து யாதொரு இடத்தும் வேறு பிரதிகள் இல்லை. பதிப்பித்துறை முன்னோடி உ.வே.சாமிநாதையர் அவர்கள், தமக்குக் கிட்டிய ஒரே ஒரு சுவடியான பெருங்கதையை எவ்விதம் சிறப்புறப் பதிப்பித்து வெளியிட்டாரோ அது போலவே இவரும் இச்சுவடியைப் பதிப்பித்துள்ளார்.

நாட்டுப்புறக் கதைப்பாடல்களைச் சிறப்புறப் பதிப்பித்த நாட்டுப்புறவியலின் தந்தை நா. வானமாமலை அவர்கள் தமது ஐவர்

ராசாக்கள் கதையை மதுரை காமராசர் பல்கலைக் கழகம் வழியாக வெளியிட்டார். இக்கதைப்பாடலில் வரும் ஐந்து அரசர்களின் வாழ்க்கையைப் போலவே அழகன் பெருமாள் கதையும் ஐந்து அரசர்களின் வாழ்க்கையைக் கூறுகிறது.

அழகன்பெருமாள் கதை என்னும் இந்நூல் ஒரு வரலாற்றுக் கதைப் பாடலாகும். "தமிழர்கள் வரலாற்றை ஆவணப்படுத்துவதில் ஆர்வமில்லாதவர்கள்" என்பது வரலாற்று அறிஞர்களின் பொதுவான கருத்தாகும். கிடைத்த அதிகமான கதைப் பாடல்களில் வரலாற்றுக் கதைப்பாடல்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவே. இந்நிலையில் வரலாற்றுக் கதைப் பாடலான, இதுகாறும் வெளிவராத 'அழகன் பெருமாள் கதை'யை வெளியிடுவதில் நிறுவனம் மகிழ்ச்சி அடைகிறது.

இக்கதைப் பாடலின் கதைச் சுருக்கம் வருமாறு : குலசேகரப் பெருமாள் என்னும் மன்னன் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வருகிறான். அவனுக்குப் பொன்னின் பெருமாள், தன்மப் பெருமாள் என்னும் இரு புதல்வர்கள் இருந்தனர். பொன்னின் பெருமாள் அவனுடைய தந்தை வயது முதிர்ந்ததின் விளைவாகத் தென்காசியின் ஆட்சிக் கட்டிலில் அமர்ந்தான்.

புலியூரைத் தலைநகராகக் கொண்டு இளையவரான தன்மப் பெருமாள் ஆட்சி செய்து வந்தார்.

குலசேகரப் பெருமாள், வீர பாண்டியன் என்னும் இருவர் பொன்னின் பெருமாளின் புதல்வர்கள் ஆவர். அழகன் பெருமாள், சின்னப் பெருமாள் என்ற சீவல மாறன், சின்னத் தம்பி ஆகிய மூவரும் தன்மப் பெருமாளின் புதல்வர்கள் ஆவர்.

பொன்னின் பெருமாளின் மூத்த மைந்தரான குலசேகரப் பெருமாள் தம் சிறிய தந்தையின் மூன்று புதல்வர்களையும் மன்னர்களுக்குரிய அனைத்துக் கலைகளையும் கற்றுக் கொடுத்து வளர்த்தார். அழகன் பெருமாள், சீவலமாறன் ஆகியோருக்குத் திருமணமும் செய்து வைத்தார். மேலும் புலியூரைத் தலைநகராகக் கொண்டு அப்பகுதியை ஆண்டு வர அனைத்து உதவிகளையும் செய்தார்.

குலசேகரப் பெருமாள் அவருடைய சிறிய தந்தை பெற்ற மூவர் மேலும் அளப்பரிய பற்றுடன் நடப்பதைக் கண்டு, அவருடைய தம்பியான வீர பாண்டியனும் அமைச்சரான ராசகுல தேவரும் பொறாமை கொண்டனர்; அவர்களின் உறவை முறிப்பதற்கு மறைமுகமான சூழ்ச்சிகளில் ஈடுபட்டனர். சின்னப் பெருமாள் என்ற சீவலமாறன், "யானைக்கும் குதிரைக்கும் எப்பொழுதும் அண்ணனிடம் பணம் பெற்றுக் கொண்டிருக்க இயலுமா? நடக்கின்ற கால் ஒரு நாள் இடறுமல்லவா;

நமக்கென்று பசும்பொன் இருந்தால்தான் நமக்கு நல்லது: எனவே 'இளமுறைக் கூறு' கேட்டுப் பெற வேண்டும்" எனக் கூறினான். அதற்கு அழகன் பெருமாளும் இசைந்து, அண்ணன் குலசேகரப் பெருமாளிடமும் அவரின் அமைச்சரிடமும் பக்குவமாக எடுத்துக் கூறு என்று ஆற்றுப்படுத்துகிறார்.

குலசேகரப் பெருமாளின் தம்பியான வீர பாண்டியனும், அமைச்சரான ராசகுல தேவரும் நன்னோக்கத்தில் செயல்பட்ட தன்மப் பெருமாளின் பிள்ளைகளான மூவரையும் சூழ்ச்சியால் வெல்ல நினைக்கின்றனர். அழகன் பெருமாளையும் சீவலமாறனையும் சூழ்ச்சியால் அழிக்க நினைத்த வீரபாண்டியனும், அவரின் அமைச்சரான ராசகுல தேவரும் ஓர் இருட்டறையைக் கட்டினர். அதில் அறுபது மல்யுத்த வீரர்களை இருக்கச் செய்தனர்.

அமைச்சர் ராசகுல தேவர் அழகன் பெருமாளையும் சீவலமாறனையும் அவரின் அண்ணன் குலசேகரப் பெருமாள் அழைப்பதாகப் பொய் சொல்லி அழைத்து, மல்யுத்த வீரர்கள் ஒளிந்திருந்த இருட்டறைக்குள் போகச் சொன்னார். அவரின் பேச்சை நம்பி, கள்ளவாளைத் தவிர பிற ஆயுதங்கள் இல்லாத இருவரும் உள்ளே சென்றனர். மல்யுத்த வீரர்கள் இவ்விருவரையும் கொலை செய்ய முயல, இவர்களும் வீரர்களோடு எதிர்த்து மல்யுத்தம் செய்தனர். இவ்வேளையில் ஒரு வீரன் சீவலமாறனின் தலைமுடியை எட்டிப் பிடித்தான். சீவலமாறனும் மணிமுடி தாங்கிய தன் தலைமுடியை ஒரு சாதாரண வீரன் பிடித்தானே என்று அவமானம் அடைந்து, தன் நாக்கைப் பிடுங்கி உயிர் விடுகிறான்.

மற்றொரு பக்கம் அழகன் பெருமாள் மல்லர்களைக் கொன்று குவிக்க, ஒரு வீரன் மட்டும் பிணக்குவியலில் மறைந்து கொள்கிறான். சீவலமாறன் இறந்து கிடப்பதைக் கண்டு வருந்திய அழகன் பெருமாள் தன் கள்ள வாளால் தன்னைத் தானே குத்தி உயிரை மாய்த்துக் கொள்கிறார்.

குலசேகரப் பெருமாள் ராசகுல தேவரும், வீரபாண்டியனும் செய்த சூழ்ச்சியால் அழகன் பெருமாளும், சீவல மாறனும் இறந்ததை அறிந்து வருந்தினார். அவர்களின் இறப்புக்குக் காரணமான அமைச்சரின் தலையை வெட்டி விட்டு, 'நாட்டாசை கொண்ட நீயே நாட்டை ஆள்க' என வீரபாண்டியனிடம் நாட்டைக் கொடுத்து விட்டு குலசேகரப் பெருமாள் தம்மை மாய்த்துக் கொள்கிறார்.

அண்ணனின் இறப்புக் குறித்து வருந்திய வீர பாண்டியன் தன் பாவம் நீங்கக் காசிக்குச் செல்கிறான். அழன் பெருமாள், சீவலமாறன் ஆகிய இருவரின் மனைவியரும் தீப்பாய்ந்து உயிர் விட்டனர். அழகன்

பெருமாள், சீவலமாறன் ஆகியோரின் தம்பியான சின்னத் தம்பி, அண்ணன்களும் அண்ணிகளும் இறந்தது அறிந்து, தரையில் வாளூன்றி, அதில் பாய்ந்து இறந்து விடுகிறான்.

சின்னத் தம்பியும் இறந்து விடவே தென்காசிக்கு மன்னர் இல்லாமல் போய்விட்டது. ஆகவே வெட்டுமாறன் என்பவன் மாவலிக்கு அரசுப் பட்டம் சூட்டுகிறான். இவ்வாறு இக்கதைப் பாடலின் கதை அமைந்துள்ளது.

பனையோலையில் எழுதப்பட்ட இச்சுவடியினை நிழற்படப் பிரதி எடுத்து அனுப்பிய கேரளப் பல்கலைக்கழகத்தின் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தின் இயக்குநருக்கு நன்றி.

இச்சுவடியைப் பதிப்பித்துள்ள முனைவர் கு. நிர்மலாதேவி அவர்கள் பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் இந்நிறுவனத்தில் இயக்குநராகப் பணியாற்றியபோதே, இந்நிறுவனத்தின் சார்பாகக் கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் உள்ள 5,000 தமிழ்ச் சுவடிகளையும் கண்டு, குறிப்பெடுப்பதற்கான வாய்ப்பினைப் பெற்றவர். அங்குள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து, அதன் முதற்தொகுதியினையும் நிறுவனத்தின் வாயிலாக வெளியிட்டவர்; சுவடித் துறையில் ஆழ்ந்த பயிற்சி மிக்கவர்.

இவர் இதுகாறும் ஒன்பது கதைப்பாடல்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அவை சின்னத்தம்பி கதை, உஜ்ஜைனி மாகாளி கதை, குருக்குளாஞ்சி கதை, வெங்கலராசன் கதை, பலவேச சேர்வைக்காரன் கதை, முத்தாரம்மன் கதை, தடிவீர சுவாமி கதை, வன்னியராயன் கதை, சின்னணைஞ்சான் கதை, இக்கதையில் கிளைக்கதையாய் வரும் அரவமுத்து வீரன் கதை என்பன அவ்வொன்பது கதைப்பாடல்களாகும். பத்தாவதாக இவர் இதுவரையிலும் வெளிவராத அழகன்பெருமாள் கதை எனும் கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர், தமிழ் ஆட்சிமொழி, பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத்துறைச் செயலாளர் திருமிகு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப., அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்டிங் கிராபிக்ஸ்-க்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# நன்றியுரை

1980 - 1984ஆம் ஆண்டுகளில் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் தங்கியிருந்து அங்குள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரிக்கும் நற்பணியை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் எனக்கு அளித்தது.

அட்டவணை தயாரிப்பதற்கென்று 'அழகன் பெருமாள் கதை' என்ற சுவடியைப் படித்துப் பார்க்க நேரிட்டது. அது ஒரு வரலாற்றுக் கதைப்பாடல் என்பது மேலோட்டமாகப் படித்தபோதே தெரிந்தது. சமூகக் கதைப்பாடல்களைப் பதிப்பித்து வெளியிடவேண்டும் என்ற ஆர்வம் காரணமாக வரலாற்றுக் கதைப்பாடலான அழகன் பெருமாள் கதைப் பாடலைப் பதிப்பிக்க வேண்டும் என்ற எண்ணம் எழாமலே இருந்தது.

இந்த வரலாற்றுக் கதைப்பாடலைப் பதிப்பித்து வெளியிட எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தவர் நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கள். சமூகக் கதைப்பாடலினின்றும் மாறுபட்ட வரலாற்றுக் கதைப்பாடலாயிற்றே என்ற தயக்கம் உள்ளுக்குள் இருந்தது. இயககுநர் அவர்கள் வல்லுநர் குழுவில் வைத்து இந்நூலைப் பதிப்பிப்பதற்கு அனுமதி வாங்கி அளித்தார். கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்துக்குக் கடிதம் அனுப்பி, சுவடியின் நிழற்படப் பிரதியையும் (Xerox Copy) பெற்றுத் தந்தார். இவ்வாறு இச்சுவடி பதிப்பிக்கப் பெற்று நூலாக வெளிவர உற்றது அனைத்தையும் செய்து உதவிய இயக்குநர் அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியை முதற்கண் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இச்சுவடியைப் பதிப்பிப்பதற்கும், நூலாக வெளியிடுவதற்கும் அனுமதி அளித்த வல்லுநர் குழுவுக்கு மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பதிப்பிக்க ஏதுவாகச் சுவடியை நிழற்படப் பிரதி எடுத்து அனுப்பிய திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலக இயக்குநர் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியைக் கூறிக் கொள்கின்றேன்.

இந்நூலினை ஒளி அச்சுக் கோர்வை (DTP) செய்தளித்த அலுவலக நண்பர்கள் திரு. சு. கண்ணன், திரு. வி. வாசுதேவன் அவர்களுக்கு உளம் நிறைந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

**சு. நிர்மலா தேவி**

# பொருளடக்கம்

# பதிப்பாசிரியர் முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1980-1986களில் ஆராய்ச்சி உதவியாளராகப் பணியாற்றியபொழுது, திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ள சுமார் 5000 தமிழ்ச் சுவடிகளைப் பார்வையிடும் அரிய வாய்ப்புக் கிட்டியது. அங்குள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரிக்குமாறும், முக்கியமான சுவடிகளைப் படி எடுக்குமாறும் நிறுவனம் பணித்தது. முனைவர் பட்ட ஆய்வுக்கும், அந்நூலகத்தில் உள்ள "முத்தாரம்மன் கதை" என்ற சுவடியை எடுத்து ஆய்வு செய்யும் நல்வாய்ப்பையும் நிறுவனம் நல்கியது. அட்டவணை செய்யும்பொழுது, பல்வேறு அரிய சுவடிகளைப் படித்துப் பார்க்கும் நற்பேறு வாய்த்தது. கூவசாத்திரம், கும்மிப்பாடல்கள், சிந்துப்பாடல்கள், கண்மருத்துவம், மருந்து செய்முறைகள், ஊஞ்சல் இலக்கியம் தொடர்பான பல சுவடிகளையும், மற்றும் பல முக்கியச் சுவடிகளையும் (சுமார் 65 சுவடிகள்) படியெடுக்கும் நற்பணியையும் செய்ய நேர்ந்தது.

## கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகம்

குமரிமாவட்டப் பகுதிகள் சிலவற்றை உள்ளடக்கியிருந்த திருவாங்கூர் சமஸ்தானம் பின்னர், மொழிவாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்ட பொழுது, குமரிப் பகுதியிலிருந்த பல தமிழ்ச் சுவடிகளும் கேரள மாநிலத்துக்குச் சென்றிருக்கின்றன. திருவாங்கூர் சமஸ்தானத்திலிருந்த இச்சுவடிகள் கேரளப் பல்கலைக்கழகம் தோன்றிய பொழுது அதனிடம் ஒப்படைக்கப்பட்டன. இன்று குமரி, நெல்லைப் பகுதிகளில் கிட்டாத அரிய பல சுவடிகள் இந்நூலகத்தில் காணப்படுகின்றன. இங்குள்ளவற்றில் 80 விழுக்காடு சித்த மருத்துவச் சுவடிகள். தமிழகச் சித்த மருத்துவ ஆராய்ச்சிக் கழகங்கள் இச்சுவடிகளைப் பயன்படுத்த முன்வரவேண்டும். இன்று தென் மாவட்டங்களில்தான் அதிகக் கதைப்பாடல் சுவடிகள் கிடைக்கின்றன. இம்மாவட்டத்தைச் சேர்ந்த கதைப்பாடற் சுவடிப் பிரதிகள் பல இந்நூலகத்திற்கும் சென்றுள்ளன. அவ்வாறு சென்று அங்கு அடைக்கலமாகியுள்ளவையே சின்னத்தம்பி கதை, குறுக்குளாஞ்சி கதை, தடிவீரசுவாமி கதை, வன்னியராயன் கதை, அழகன் பெருமாள் கதை போன்ற கதைப்பாடற் சுவடிகளாகும். தென்மாவட்டங்களில்

இச்சுவடிகள் கிடைக்காத நிலையில் இவை இந்நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டு, நமக்குக் கிடைப்பது தமிழர் செய்த தவப்பயன் என்றே கூறவேண்டும்.

## சின்னத்தம்பி கதை

நா. வானமாமலை அவர்கள் தான் நடத்திய 'ஆராய்ச்சி' இதழில் 'தமிழ்க் கதைப்பாடல்களில் சோக முடிவு' என்ற கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார். அதில் 'சின்னத்தம்பி கதை' என்ற நாட்டுப்புறக் கதைப்பாடலைக் குறிப்பிட்டு ஆராய்ச்சிக் குறிப்புகளை எழுதியுள்ளார். ஆனால் இந்தச் சின்னத்தம்பி கதை, சுவடி வடிவிலோ, அச்சு நூல் வடிவிலோ எங்கும் காணக்கிடைக்கவில்லை என்றும் குறிப்பிட்டுள்ளார். கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் சின்னத்தம்பி கதை, சுவடி வடிவில் காணப்பட்டது. கதை வேறுபாடுகளுடன் கூடிய இரு சுவடிப் பிரதிகள் இருந்தன. 1986-ல் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் பணியாற்றியபொழுது, சின்னத்தம்பி கதையின் கையெழுத்துப் பிரதி ஒன்று அங்கு இருந்தது தெரியவந்தது. அந்தக் கையெழுத்துப் பிரதியுடன் கேரளப் பல்கலைக் கழகச் சுவடிப்பிரதிகள் இரண்டையும் ஒப்பிட்டு "The Wandering Voice" என்ற நூலாக வெளியிடும் நல்வாய்ப்பு அமைந்தது. சின்னத்தம்பி கதை சாதீய அடக்குமுறையின் வெளிப்பாட்டை மையப் பொருளாகக் கொண்ட சமூகக் கதைப்பாடலாகும்.

## குறுக்குளாஞ்சி கதை

சாதிவிட்டுச் சாதி காதல் கொள்வதால் விளைந்த சிக்கலைக் கருவாகக் கொண்ட குறுக்குளாஞ்சி கதை என்ற சுவடிப்பிரதி ஒன்றும் கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் காணப்பட்டது. வேறு பிரதி ஏதும் இதுவரையும் தமிழகத்தில் கிடைக்காத, ஒற்றைக்கொரு பிரதியாக இருந்த அந்தச் சுவடிப் பிரதியும் மிகுந்த சிதைவுக்கு ஆளாகிக் கொண்டிருந்தது. அதையும் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மூலமாக 1987-ல் பதிப்பித்து வெளியிடும் நற்பேறு கிட்டியது.

## தடிவீர சுவாமி கதை

தென்மாவட்டங்களில் கிடைக்காத இந்த அரிய கதைப் பாடற் சுவடியும் கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் கிடைத்தது. பள்ளர்குலப் பெண்ணுக்கும் பள்ளர்குலத்துக்குத் துவ வெளுக்கும் துவர வண்ணார் குலத்து ஆண்மகனுக்கும் ஏற்பட்

காதலால் விளைந்த சிக்கலை மையமாகக் கொண்ட இக்கதைப் பாடற் சுவடியும் ஒரே ஒரு பிரதியாக இந்நூலகத்தில் வீற்றிருந்தது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடாக இக்கதைப்பாடற் சுவடியையும் பதிப்பிக்கும் வாய்ப்பு 1996-ல் கிட்டியது.

## வன்னியராயன் கதை

இது காடுகாவல், நாடுகாவலைக் குலத்தொழிலாகக் கொண்ட மறக்குல மகனைப் பற்றிய கதைப்பாடற் சுவடியாகும். இந்நூலகத்திலிருந்த சமூகக் கதைப்பாடற் சுவடியான இதுவும் தடிவீரசுவாமி கதையுடன் இணைத்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மூலமாக வெளியிடப் பெற்றுள்ளது. இவ்வாறு அரிய நான்கு முத்துக்கள் போன்ற சமூகக் கதைப்பாடற் சுவடிகளை அளித்த கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்திலிருந்து, ஐந்தாவது நல்முத்தாக அழகன் பெருமாள் கதைப்பாடல் சுவடி கிடைத்துள்ளது. இது வரலாற்றுக் கதைப்பாடல் சுவடியாகும்.

## அழகன் பெருமாள் கதைப்பாடல்

அரிய வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கிய இக்கதைப் பாடற்சுவடி ஒரே ஒரு பிரதியாக இந்நூலகத்தில் இடம் பெற்றுள்ளது. முன் பதிப்பித்த கதைப்பாடற் சுவடிகளைப் போன்றே, இச்சுவடியின் நிழற்படப்பிரதியும் நிறுவனம் மூலமாகப் பெறப்பட்டுப் பதிப்புக்குப் பயன்படுத்தப்பட்டது. வள்ளியூரில் கோட்டை கட்டி ஆண்ட பிற்காலப் பாண்டியர்களான "ஐவர் ராசாக்கள் கதை" நா. வானமாமலை அவர்களால் பதிப்பிக்கப் பெற்று, மதுரைப் பல்கலைக்கழகம் மூலமாக வெளியிடப் பெற்றது (1974). இந்த அழகன் பெருமாள் கதைப்பாடலும் தென்காசியைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்ட, ஐந்து பிற்காலப் பாண்டியர்களைப் பற்றிக் கூறுவதாக உள்ளது. நமக்கு இதுவரையும் கிடைத்துள்ள வரலாற்றுக் கதைப்பாடல்கள் மிகவும் குறைவு. வரலாற்றுக் குறிப்புகளை உள்ளடக்கிய இத்தகு கதைப்பாடற் சுவடிகள் விரைவில் வெளிக்கொணரப் பெற வேண்டும் என்ற நோக்கில் ஈண்டு பதிப்பிக்கப் பெறுகின்றது.

## சுவடிப் பிரதி, கையெழுத்துப்பிரதி, நிழற்படப்பிரதி

சுவடிகளில் எழுத்தாணி கொண்டு எழுதப்பட்டவைகள் சுவடிப் பிரதிகள் ஆகும். மையால் எழுதப்பட்ட சுவடிகளும் உள்ளன. காகிதம் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் சுவடிகளில் உள்ளவற்றைக் காகிதங்களில் பிரதி செய்து வைக்கும் பழக்கம் வந்தது.

1. சுவடி எழுத்துகளைப் படிப்பது கடினம் எனக் கருதியவர்களுக்கும்,
2. சுவடி நாளடைவில் சிதைவுக்கு ஆட்படும் பொழுது அதைப் பிரதி செய்து வைக்க வேண்டும் என்ற நோக்கிலும்,
3. ஒரு சுவடிக்கு வேறு ஒரு பிரதியும் வேண்டும் என்ற நிலையிலும்

காகிதத்தில் சுவடிச் செய்திகள் பிரதி செய்யப்பட்டன. இவை கையெழுத்துப் பிரதிகள் எனப்பட்டன.

சுவடியில் உள்ள எழுத்து முறையை அவ்வாறே பின்பற்றி எழுதப்பட்ட காகிதப் பிரதிகளும், அச்செழுத்து முறைப்படி மாற்றங்களுடன் பிரதி செய்யப்பட்ட காகிதப் பிரதிகளும் என, இரு வகைப்பட்ட காகிதப் பிரதிகளும் காணப்படுகின்றன.

தொடக்கக் காலகட்டத்தில் சுவடி எழுத்து முறையைப் பின்பற்றி அதே முறையில், அதாவது புள்ளியின்றி ஒற்றைக் கொம்பு, இரட்டைக் கொம்பு வேறுபாடு இன்றி ா-ர, ல-ள-ழ, ர-ற, ண-ன-ந வேறுபாடு இன்றி எழுதப்பட்ட காகிதப் பிரதிகள் உள்ளன. காலப் போக்கில் அச்செழுத்துப் பழக்கம் ஏற்பட்ட பின், படிக்க எளிமையாகும் வண்ணம் அச்செழுத்துப் போன்று வேறுபாடுகள் தெரியுமாறு எழுத்தமைதியுடன் எழுதும் பழக்கம் வந்தது.

அறிவியல் சாதனைகளில் ஒன்றான நிழற்படப்பிரதி எடுக்கும் எந்திரம் வந்தபின், இருந்த இடத்தில் இருந்து கொண்டே குறிப்பிட்ட சுவடியின் நிழற்படப் பிரதி பெற்றுப் பதிப்பிக்கும் வசதி அமைந்துள்ளது. குறிப்பிட்ட ஒரு சுவடியை நிழற்படப்பிரதி எடுக்கும்பொழுது, அது காகிதத்தில் அமைந்து விடுவதால் அதனைக் காகிதப் பிரதி எனத் தவறாகக் கருதலாகாது. காகிதத்தில் கையால் எழுதப்படுபவை மட்டும் கையெழுத்துப் பிரதி. இது காகிதப் பிரதி என்பதனுள் அடங்கும். நிழற்படப் பிரதியில் சுவடியில் உள்ள எழுத்து வடிவங்கள் சிறிதும் மாறாமல் பதிவாகின்றன. கூறப்புகின், சுவடியைப் படிப்பதினும் அதன் நிழற்படப் பிரதியைப் படித்தல் கடினமானது. சுவடியில் தெரியாத எழுத்துகளை எண்ணை பூசி விளக்கித் தெளிவாகப் படிக்க இயலும். நிழற்படப் பிரதியில் அவ்வாறு எதுவும் செய்ய இயலாது. மேலும் சுவடியில் உள்ளதை முன்பே படித்த ஒருவரால் அதன் நிழற்படப் பிரதியை எளிதாகப் படிக்க இயலும். சுவடியை முன்பே முற்றிலும் படித்துப் பார்க்க வாய்ப்பில்லாத ஒருவருக்கு, அதன் நிழற்படப் பிரதியைப் படிப்பதில்,

பல வகையில் சிரமம் ஏற்படும். இந்த வகையில் அழகன் பெருமாள் கதைப்பாடலைச் சுவடியில் முன்பே படித்துப் பார்த்ததால் அதன் நிழற்படப் பிரதியைப் படிப்பது எளிதாக இருந்தது. இது அனுபவம் மூலமாக அறிந்த உண்மையாகும்.

## பதிப்பிக்கக் காரணம்

சுவடிகள் முன்னோர்களின் அனுபவப் பதிவுகள். கடந்த காலச் சமூக, வரலாற்று, சமய, மொழி, கலை, பண்பாட்டுப் படிவங்களைத் தாங்கியுள்ள மாமலைச் சிகரங்கள். ஆதலின் ஒவ்வொரு சுவடியுமே மிகு விரைவில் பதிப்பித்து வெளியிடப்பட வேண்டியவையே. அந்த வகையில் இதுவரையும் வெளிவராத அழகன் பெருமாள் கதைப்பாடல் என்ற சுவடியைப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்ற ஆர்வம் முதற்காரணம் எனக்கூறலாம். தமிழில் கதைப்பாடல்கள் தொகுப்பில் புராண, இதிகாச, சமூகக் கதைப்பாடல்களைவிட வரலாற்றுக் கதைப்பாடல்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக உள்ளது. பொதுவாகவே தமிழருக்கு வரலாற்று உணர்வு குறைவு என்றும், வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த செய்திகளை முறைப்படி தொகுத்து வைக்காததால் தமிழக வரலாறு எழுத இயலாமல் திண்டாடிக் கொண்டிருப்பவர்கள் என்றும் வரலாற்றாசிரியர்கள் குற்றம் சாட்டுகின்றனர். தமிழகப் பிற்காலப் பாண்டியர் வரலாறு கூறும் இச்சுவடிப் பிரதி தமிழர்கள் வரலாற்று உணர்வு மிக்கவர்கள் என்பதற்கும், வரலாற்றுச் செய்திகளைப் பதிவு செய்து வைப்பதில் முன்னிலை வகித்தவர்கள் என்றும் உணர்த்தும் சிறந்த சான்றாக இந்தச் சுவடிப்பிரதி இருந்ததால் பதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. வளையாபதிக்கு ஒரே ஒரு பிரதி மட்டுமே இருந்தது. பின்னர் சென்று உ.வே.சா. அவர்கள் அதைப் பதிப்பிக்கத் தேடிய பொழுது அது காணாமல் போயிருந்தது. கிடைத்த ஒரே ஒரு பெருங்கதைப் பிரதியைக் கொண்டு உ.வே.சா. அவர்களால் பெருங்கதை பதிப்பிக்கப்பட்டது. இவைபோன்று அழகன் பெருமாள் கதை ஒரே ஒரு பிரதியே கிடைத்துள்ளது. வேறு சுவடிப் பிரதியோ, வாய்மொழி வழக்காறுகளோ அகப்படாத நிலையில் இச்சுவடி பதிப்பிக்கப் பெறுகிறது. வேறு பிரதிகள் கிடைத்தால் பதிப்பு மேலும் செம்மையும், திருத்தமும் பெற ஏதுவுண்டு.

## சுவடி - புற அமைதி

6715 என்ற சுவடி எண்ணுடனும் 'அழகன் பெருமாள் கதை' என்ற தலைப்புடனும் இச்சுவடி நூலகத்தில் வீற்றுள்ளது. ஆங்காங்கு சில இடங்களில் பூச்சியரிப்புகள் காணப்படுகின்றன.

ஒவ்வோர் ஓலையும் 39.8x2.8 செ.மீட்டர் நீள, அகலம் கொண்டது. ஒற்றைத் துளை இடப்பட்டு, வெண்பட்டுக் கயிறால் இறுக்கிக் கட்டப்பட்டுள்ளது. இருபுறமும் உறுதியான மரச்சட்டம் கொண்டு காக்கப்பட்டுள்ளது.

## சுவடி - அக அமைதி

சுவடி இரு பகுதிகளாகவும், சில இடங்களில் மூன்று பகுதிகளாகவும் பிரித்துக் கொள்ளப்பட்டு ஒவ்வொரு பகுதியிலும் 7 முதல் 8 வரிகளாக அதாவது பக்கத்துக்கு 14, 16 முதல் 27, 28 வரிகள் வரை எழுதப்பட்டுள்ளன. மொத்த வரிகள் 2485 உள்ளன. 73 ஓலைகளில் 146 பக்கங்களில் இச்சுவடி அமைந்துள்ளது. மெய்யெழுத்துகளுக்குப் புள்ளிகள் உள்ளன. இதனால் மிகப் பிற்காலத்ததாகலாம். சுவடிகளில் புள்ளி வைத்தும் எழுதப்பட்டுள்ளன என்பதற்கும், புள்ளி வைத்து எழுதுவதால் சுவடி கிழியாது; உடையாது; சிதையாது என்பதற்கும் ஒரு சான்றாக இச்சுவடி திகழ்கின்றது, என்றாலும் சுவடிகளில் புள்ளி வைத்து எழுதும் பழக்கம் பிற்காலத்தது என்பதும் இதனால் உறுதிப்படுகின்றது. சுவடி எழுதப்பட்ட காலம், படியெடுத்த காலம் முதலியன சுவடியின் முகப்பிலோ இறுதி ஓலையிலோ, இடையிலோ குறிக்கப்படவில்லை. சுவடியில் ா-ர, ல-ள-ழ, ர-ற, ண-ந-ன என்ற எழுத்துகள் வேறுபாடு இன்றி ஆளப் பட்டுள்ளன. வரியின் இறுதி எழுத்து தனித்து எழுதப்பட்டுள்ளது. சில இடங்களில் 0 என்ற குறியும் ஆளப்பட்டுள்ளது. இவை வரி முடிவுணர்த்தவும், வரி ஒழுங்கை வரிசைப்படுத்தவும், பகுதியை வரையறுக்கவும் துணை செய்து சீர்மைப்படுத்தியுள்ளன. எழுது முறைக்கும் அழகூட்டியுள்ளன.

என்ற முறையில் சுவடி அமைந்துள்ளது.

## பதிப்பில் செய்த சீர்மைகள்

1. நாட்டுப்புறப்பாடல் யாப்பமைதியுடன் உள்ள வரிகளைச் சீர்மைப்படுத்தி எழுதியுள்ளேன். வெண்பா, விருத்தம் போன்ற மரபு யாப்படிப்படையில் அமைந்த பாடல்களும் இச்சுவடியில் இடையிடையே அமைந்துள்ளன. அவற்றையும் யாப்பமைதி மாறாமல் சீர்பிரித்து எழுதியுள்ளேன்.

2. கதைப் போக்கின்படி சிறு தலைப்புகள் தந்துள்ளேன்.

3. வரி எண்கள் இட்டுள்ளேன்.

4. நாட்டுப்புற வழக்குச் சொற்களுக்கும், அருஞ்சொற்களுக்கும் விளக்கம் தேவைப்படும் பிற சொற்களுக்கும் சொல் விளக்கக் குறிப்புகள் எழுதியுள்ளேன். பின்னிணைப்பில் இப்பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது.

## பதிப்பில் செய்த திருத்தங்கள்

1. சுவடியில் சில இடங்களில் கூட்டெழுத்துகள் காணப்பட்டன. அவை படிப்போர்க்கு விளங்கும் வண்ணம் அச்செழுத்து வடிவில் பிரித்து எழுதப்பட்டுள்ளன.

சான்று

சிறுப்பொருள் - சின்னப் பெருமாள்

2. சில இடங்களில் பழைய எழுத்து முறை பின்பற்றப்பட்டிருந்தது. இவையும் தற்கால அச்செழுத்து முறைப்படி மாற்றப்பட்டுள்ளன.

சான்று

ஈட்டி - ஈட்டி

3. சுவடியில் வட்டார வழக்கு உச்சரிப்பின்படி சில சொற்கள் எழுதப்பட்டிருந்தன. தற்போதைய எழுத்து முறைப்படியும், இலக்கண மரபுப்படியும் தவறாகக் கருதப்படும் இவையும் திருத்தப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

சான்று

கேள்க்கிறார் - கேட்கிறார்

கேழ்க்க - கேட்க

4. சில இடங்களில் பூச்சியரிப்பால் எழுத்துச் சிதைவு நிகழ்ந்துள்ளது. ஊகித்து இடமுடியாத நிலையில்.......என்ற குறியிட்டுச் சிதைவுபட்ட இடங்கள் அவை என்பதைப் புலப்படுத்தியுள்ளேன்.

சான்று

"..............கொடை புனையா விளைக ளொக்கும்" வரி:109

5. பூச்சியரிப்பாலும், ஓலை முறிவாலும் நிகழ்ந்துள்ள எழுத்துச் சிதைவுகளைச் சில இடங்களில் ஊகித்து நிரப்பியுள்ளேன். அவ்வெழுத்துகளை ( ) என்ற அடைப்புக்குறிக்குள் அமைத்துள்ளேன்.

சான்று

"கூடு(விட்ட) பாவலர்சொல் வேத்திமைக ளறியேன்"
வரி:110

6. தேவை என்று கருதி இடப்பட்ட எழுத்துகளை [ ] என்ற பகர வடிவ அடைப்புக்குள் அமைத்துள்ளேன்.

சான்று

"புகலநான் துணிந்த [துணி ] வெவரும் பொறுப்பீரே"
வரி:131

7. சில இடங்களில் தவறாக இருமுறை வந்த சொல்லே திரும்பவும் எழுதப்பட்டிருந்தன. அவற்றைத் திருத்தி ஒரு முறை வருமாறு பதிப்பித்துள்ளேன்.

சான்று

சுவடியில் இருந்தது

"இச்சை தணியத்தணிய நச்சுமொழி மொழி பேசி" வரி:91

திருத்திப் பதிப்பித்தது

"இச்சை தணியத்தணிய நச்சுமொழி பேசி"

இதுபோன்றே,

"அது மல்லாமல்லாமல் இராசதள மட்டுஞ் சொல்வான்"
வரி:476

என்றிருந்தது.

"அது(வு)மல்லாமல் இராசதள மட்டுஞ் சொல்வான்"

என்றும்,

"என்ற மொழி மொழி கேட்டவுட னெழுந்துதம்பி சீவலவர்"
வரி:1106

என்றிருந்த வரி,

"என்றமொழி கேட்டவுட னெழுந்துதம்பி சீவலவர்"

என்றும் திருத்திப் பதிப்பித்துள்ளேன்.

8. சுவடியில் எழுதியிருந்தபடி கொடுத்தால் தவறாகப் படிக்க ஏதுவாகும் எழுத்து எனக் கருதுவதைச் சரியான முறைப்படி எழுதியும் பதிப்பித்துள்ளேன்.

**சான்று**

**உளி**னமில்லா - ஊனமில்லா

9. மாறுதல்பட ஆளப்பட்டிருந்த ர-ற, ல-ள-ழ, ண-ந-ன என்ற எழுத்துகளும் முறையாக வருமாறு அமைத்துள்ளேன்.

இவை நீங்கலாக இச்சுவடிப் பதிப்பில் வேறு எத்தகைய மாறுதல்களோ, மாற்றங்களோ செய்யாமல், உள்ளது உள்ளவாறு நாட்டுப்புற வழக்காற்றுத்தன்மை கெடா வண்ணம் திருத்தப் பதிப்பாக இச்சுவடி பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சூ. நிர்மலா தேவி

# ஆராய்ச்சியுரை

அழகன் பெருமாள் கதைப்பாடல் என்ற இந்தச் சுவடி, 'சுவடிகள் மிகச்சிறந்த வரலாற்றுக் களஞ்சியங்கள்' எனக்கட்டியம் கூறுவதாக அமைந்துள்ளது. கிடைத்திருக்கும் இதிகாச, புராண, சமூகக் கதைப்பாடல்களோடு ஒப்பிடும் பொழுது, வரலாற்றுக் கதைப் பாடல்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக உள்ளது. வரலாற்றுத் தொடர்புடைய இப்புதிய 'அழகன் பெருமாள் கதைப்பாடல்' சுவடியினால், வரலாற்றுக் கதைப்பாடல்களின் எண்ணிக்கையில் ஒன்று கூடுதல் ஆகியுள்ளது. அத்துடன் தென்காசியை ஆண்ட பிற்காலப் பாண்டியர்களைப் பற்றிய ஆவணங்களின் பக்கங்கள் இச்சுவடி கிடைத்தமையால் அதிகமாகியுள்ளன என்றும் கூறலாம். தென்காசிப் பாண்டியர் வரலாறு தொடர்புடைய இக்கதைப்பாடற் சுவடியின் கதையை ஆராய்வதற்கு முன் தென்காசியை ஆண்ட பாண்டியர்களைக் குறித்த சில பொதுவான செய்திகளை அறிந்து கொள்ளுதல் நலம் பயக்கும்.

## தென்காசிப் பாண்டியர்கள்

பாண்டிய மன்னர்கள் மதுரையையும் கொற்கையையும் தலைநகர்களாகக் கொண்டு ஆட்சி செய்து வந்தனர் என்பதைச் சங்க நூல்களும், கல்வெட்டுகளும், பிற சாசனங்களும் நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றன. சோழர்கள் ஆதிக்கம் பெற்ற காலத்தில் பாண்டியர்கள் பெருமை குன்றித் தங்கள் தலைநகரைக் கைவிட்டுத் தெற்கே குடிபெயர்ந்து வந்துள்ளனர். அப்போது தென்பாலுள்ள பகுதிகளில் தங்கள் ஆட்சியை நிறுவிக் கொண்டனர். அப்போது இவர்களின் தலைநகர்களாகத் தென்காசி, கரிவலம்வந்தநல்லூர் ஆகியவை அமைந்திருந்தன. இவர்களைத் தென்காசிப் பாண்டியர்கள் என்று வரலாறு குறிக்கின்றது. ஆயினும் இவர்கள் தங்கள் புராதனத் தலைநகரான மதுரையைக் கைவிட்டு விடாமல் பலமுறை போரிட்டுக் கைப்பற்றியுமுள்ளனர். பல சோழ மன்னர்கள் காலத்தில் இவர்கள் மதுரையைக் கைப்பற்றி ஆண்டு வந்தனர் என்பது, பல சோழ மன்னர்கள் பன்முறை மதுரை மீது படையெடுத்துச் சென்று மதுரையிலிருந்து பாண்டியர்களை விரட்டி விட்டதாகத் தங்கள் மெய்க்கீர்த்திகளில் கூறிக்கொள்ளுவதிலிருந்து தெளிவாகின்றது. முதலாம் இராஜேந்திரன் தன்னுடைய இரண்டாவது மகனைச் சுந்தரச் சோழ பாண்டியன் என்ற பட்டப் பெயரோடு, மதுரையை ஆள நியமித்தான் என்பது அவனது சாசனங்களால் விளங்குகின்றது. ஆனால்

அவனுடைய காலத்திற்குப் பிறகு பல சோழ மன்னர்கள் மதுரையைக் கைப்பற்றித் தீக்கிரையாக்கியதாகத் தமது கல்வெட்டுகளில் சொல்லிக் கொள்கிறார்கள். எனவே வலிமை குன்றியபோது, மதுரையை விட்டு வெளியேறிய பாண்டிய மன்னர்கள் தெற்கே சென்று படை திரட்டிக் கொண்டுவந்து, மீண்டும் மீண்டும் தங்கள் தலைநகரான மதுரையைக் கைப்பற்றிக் கொண்டுள்ளார்கள் என்று கருதச் சான்றுகள் உள்ளன.[1]

## தென்காசிப் பாண்டியர் வரலாற்றில் ஐவர் ராசாக்கள்

இந்தியாவில் பல நகரங்கள் பலவகைகளில் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றன. இவற்றுள் புனிதத்தலம் என்ற சிறப்புப் பெற்றிருந்த வடகாசி என்ற தலப்பெயரின் நினைவாகத் தென்பகுதியில் ஒரு ஊருக்குப் பெயரிட்டனர். இதுவே தென்காசி. கல்வியிற் சிறந்த காஞ்சியின் நினைவாக ஆந்திர தேசத்தார் கோதாவரி நாட்டில் உத்தரகாஞ்சி என்று ஓர் ஊருக்குப் பெயரிட்டுள்ளனர். பெருமை வாய்ந்த ஊர்ப்பெயர்களின் வாசியைப் போற்றும் ஆசை இந்நாட்டில் என்றும் நிகழ்ந்துதான் இருக்கின்றது.[2] இந்த வகையில் வடகாசியின் நினைவாகத் தோன்றிய தென்காசி, புனிதத்தலத்தின் மகிமையைப் பறைசாற்றும் பூமியாகத் திகழ்ந்ததுடன் பாண்டிய மன்னர்களின் தலைமைப் பீடமாகவும் விளங்கிய பெருமை படைத்ததாக இருந்திருக்கின்றது.

தென்காசியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பாண்டிய மன்னர் பரம்பரை பற்றிப் பல கதைப்பாடல்கள் எழுந்துள்ளன.

1. வண்ணாத்தி ஒருத்தியின் மீது கொண்ட காதலுக்காகத் தன் தாய்மாமனும், தென்காசிப் பாண்டிய மன்னவனுமாகிய சீவலமாறனை எதிர்த்த சிவனணைஞ்ச பெருமாள் என்ற சின்னணைஞ்சானைப் பற்றிய சமூகக் கதைப்பாடலான சின்ன ணைஞ்சான் கதை[3] என்ற ஒன்று உள்ளது.

2. தென்காசிப் பாண்டிய மன்னர்களான பஞ்சபாண்டியர்கள் எனும் ஐவர் ராசாக்களின் பிறப்பு பற்றிக் கூறும் மாலையம்மை கதை[4]

---

1 ஐவர் ராசாக்கள் கதை பதிப்பு. நா. வானமாமலை, பக்.7-8-ல் காணப்பட்ட குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டது.

2 ஊரும் பேரும், ரா.பி. சேதுப்பிள்ளை, பக்.292

3 பதிப்பு. சு. நிர்மலாதேவி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு.

4 நண்பர் ஒருவர் அனுப்பிய பிரதியில் இக்கதை இருந்ததாக நா. வானமாமலை குறிப்பிட்டுள்ளார். (ஐவர் ராசாக்கள் கதை, பக்.3)

3. குலசேகரப்பாண்டியன், அவனது நான்கு தம்பியர்கள் கதை கூறும் ஐவர் ராசாக்கள் அல்லது பஞ்ச பாண்டியர் கதை[5]

4. ஐவர் ராசாக்களுக்கும் கன்னட மன்னனுக்கும் நடந்த போரை விவரிக்கும் 'கன்னடியன் படைப்போர்[6]

5. கன்னட மன்னன் வெங்கலராசனுக்கும், ஐவர் ராசாக்களுக்கு உதவி புரிந்த கயத்தாற்று வெட்டும் பெருமாளுக்கும் நடந்த போரைப் பற்றிய வெட்டும்பெருமாள் கதை[7]

6. ஐவர் ராசாக்களின் மூத்தவனான குலசேகர பாண்டியனின் காதலியான உலக முழுதுடையாளின் வரலாற்றையும், அவள் செய்த திருப்பணிகளையும் விளக்கும் உலக முழுதுடையாள் கதை[8]

7. வள்ளியூர்க் கோட்டையைப் பிடிக்கக் கன்னட மன்னனுக்கு வழி கூறிய இடைச்சி செல்லி கதை[9]

8. மன்னன் தன் பிரதிநிதியை அமர்த்தி விட்டு மதுரை சென்று விட்டதால் நாட்டில் நடந்த சீர்கேடுகளைக் கூறும் வீணாதி வீணன் கதை[10]

போன்ற பல கதைப்பாடல்கள் தென்காசிப் பாண்டியர் வரலாறு இயம்புவனவாகும்.

தென்காசியை ஐவர் ராசாக்கள் எனற ஐந்து பாண்டிய மன்னர்கள் ஆண்டனர் என்பதற்குக் கதைப்பாடல்கள் மட்டுமல்லாமல் கல்வெட்டு, மற்றும் பிற சாசனச் சான்றுகளும் உள்ளதை ஐவர் ராசாக்கள் கதையைப் பதிப்பித்த நா. வானமாமலை அவர்கள் விளக்கிக் காட்டியுள்ளார். இவர்களுடைய சாசனங்களில் விஜய நகர ஆட்சிக்கு உட்பட்ட சிற்றரசர்களாகத் தங்களைக் காட்டிக் கொள்ளவில்லை. நாயக்கர், மற்றும் சுல்தானிய ஆட்சிக்கு உட்படாத

---

5 நா.வானமாமலை அவர்கள் பதிப்பித்துள்ளார்.

6 தனிப்பிரதியாக இது கிடைக்கவில்லை. ஐவர் ராசாக்கள் கதையின் ஒரு பகுதியாக அமைந்து நா.வா. அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

7 "இக்கதை சாதி வரலாற்று நூல்கள் சிலவற்றில் காணப்படினும் அச்சு நூலாகவோ, ஏட்டுப் பிரதியாகவோ இதுவரை எங்கும் அகப்படவில்லை", ஐவர் ராசாக்கள் கதை, பக்.6.

8 தனிப்பிரதி இதுவரையும் கிடைக்கவில்லை

9 தனிப்பிரதி கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் உள்ளது. சுவடி எண். 8016

10 தனியாக நா. வானமாமலை பதிப்பித்துள்ளார். நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1967.

சுதந்திர மன்னர்களாக ஆண்டு வந்திருக்கின்றனர். கி.பி.1370 முதல் கி.பி. 1422 வரையும் ஐந்து பாண்டிய மன்னர்கள் தென்காசியிலிருந்து தென்பாண்டி நாடு முழுவதையும் ஆண்டு வந்த செய்தி அவர்களுடைய சாசனங்களிலிருந்து புலனாகின்றது. இவர்களுடைய எல்லையாகத் தெற்கே கோட்டாறும், வடகிழக்கே திருப்பத்தூரும், வடமேற்கே கரிவலம்வந்த நல்லூரும், மேற்கே குற்றாலமும் இருந்ததை இவ்விடங்களில் கிடைக்கும் சாசனங்களே உறுதி செய்கின்றன. இவர்கள் பழங்காலப் பாண்டியர்களின் பட்டங்களான கோமாறன் ஜடிலவர்மன், ஜடாவர்மன் என்பவற்றை மாறி மாறிச் சூட்டிக் கொண்டனர். இதனையும் இவர்கள் சாசனங்கள் காட்டுகின்றன. இவர்கள் ஒருவருக்குப் பின் ஒருவர் ஆண்டனரா? இருவர், மூவர் ஒரே காலத்தில் இராஜ்யத்தைப் பிரிவு செய்து கொண்டு ஆண்டனரா? என்பது புரியாத புதிராக உள்ளதாக நா.வா. அவர்கள் குறிப்பிடுகிறார்.[11]

'ஐந்து மன்னர்கள்' என்ற பொருளில் முதன்முதலில் முதலாம் குலோத்துங்கச் சோழன் சாசனமொன்றில் பாண்டியர்கள் குறிப்பிடப்படுகிறார்கள். ஐந்து பாண்டிய மன்னர்களை ஒரு போரில் வென்றதாக அச்சாசனத்தில் கூறப்பட்டுள்ளது. இது குறித்து கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் ஐந்து பாண்டியர்களுக்குள் நாட்டைப் பாகுபாடு செய்து கொண்டு, அவர்களுள் ஒருவனைத் தலைவனாகவும், முடிமன்னனாகவும் ஒப்புக் கொண்டு நாட்டைப் பரிபாலனம் செய்து வந்த முறை பலகாலமாக வழக்கத்திலிருந்தது" என்று கூறுகிறார்.[12]

வள்ளியூர்க் கோட்டையைக் கைபற்ற நடந்த போரைப் பற்றி ஐவர் ராசாக்கள் கதை கூறுகின்றது.

இந்த ஐவர் ராசாக்களின் பெயர்களாகக் குலசேகரப் பாண்டியன், முத்தும் பெருமாள், முகிலம் பெருமாள், முடிசூடும் பெருமாள், பாண்டியப் பெருமாள் என அமைந்திருந்ததாகத் தெரிகின்றது.[13]

இதற்கு முன்னரும் ஒரு குலசேகர பாண்டியனும் நான்கு சகோதரர்களும் தென்காசியை ஆண்டமை தெரிகின்றது. இவர்கள் கோமாறன், ஜடிலவர்மன், ஜடாவர்மன் என்ற பட்டங்களை மாறிமாறிச் சூட்டிக் கொண்டமை முன்னமே குறிப்பிடப்பட்டது.

---

11 ஐவர் ராசாக்கள் கதை, பக். 13-14

12 மேற்படி, பக். 8

13 ஐவர் ராசாக்கள் கதை, பக்.17

1. ஜடிலவர்மன் குலசேகர பாண்டியதேவர்
2. கோமாறன் வீரபாண்டியதேவர்
3. கோமாறன் ஜடாவர்மன் பராக்கிரம பாண்டியதேவர்
4. ஜடாவர்மன் விக்ரம பாண்டிய தேவர்

என்ற சகோதரர் பெயர்களும், மூத்தவன் குலசேகர பாண்டியன் எனவும் நா. வா. குறிப்பிட்டுள்ளார்.[14]

இவ்வாறமைந்த இருவேறு ஐவர்ராசாக்கள் குலசேகர பாண்டியன் என்ற இருவேறுபட்டவர்களின் தலைமையுடன் கீழ்த் தென்காசியில் ஆட்சி புரிந்தமையை ஐவர் ராசாக்கள் பதிப்பின் ஆராய்ச்சியுரை தெளிவுபடுத்துகிறது.[15]

அழகன் பெருமாள் கதை மற்றொரு ஐவர் ராசாக்கள் கதையைப் பேசுகின்றது. இந்த ஐவரிலும் மூத்தவன் குலசேகரப் பெருமாளாகவே உள்ளான். ஆனால் இவர்களில் முன்னிருவர் பெரிய தந்தை பிள்ளைகளாகவும். பின் மூவர் சிறியதந்தை பிள்ளைகளாகவும் உள்ளனர். பரம்பரை பரம்பரையாகத் 'தாத்தா பெயரைப் பேரனுக்குச் சூட்டுதல்' என்ற வழக்கத்தின் காரணமாக அடுத்தடுத்து வரும் பரம்பரையினருக்கு ஒரே பெயர்கள் அமைவது வரலாற்றுக் குழப்பத்தையும், ஆட்சியாண்டுக் குழப்பத்தையும் தருகின்றது. முதலாம் இராஜேந்திரன், இரண்டாம் இராஜேந்திரன் என்றும், முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன் என்றும் அமைத்து வரலாற்றாசிரியர்கள் இக்குழப்பத்தைப் போக்கியுள்ளனர். இது போன்று தென்காசியை ஆண்ட பாண்டிய மன்னர் பரம்பரையையும் முதல், இரண்டாம், மூன்றாம் குலசேகர பாண்டியர்கள் என மூன்று தலைமுறைகள் ஆண்டிருந்தமை ஐவர் ராசாக்கள் கதை, அழகன் பெருமாள் கதைப் பாடல்களால் உறுதியாகின்றது. முதல் இரு பரம்பரையின் காலம் கி.பி.1340 முதல் 1545 வரை இருக்கலாம் எனக் காலத்தை வரையறை செய்துள்ளார். நா.வா. அவர்கள்.

1. கதைப்பாடல் சான்றுகள்
2. செவிவழிச் செய்திகள்
3. கல்வெட்டுகள்

---

14 மேற்படி, பக். 14
15 மேற்படி, பக். 14-20

4. தூண்களிலுள்ள சிற்ப அமைப்புகள்

5. சித்திரங்கள்

6. அப்பகுதிகளில் வழங்கி வரும் நாட்டுப்பாடல்கள்

7. பிற சாசனச் சான்றுகள்.

போன்ற சான்றாதாரங்களைக் கொண்டு காலத்தை நிறுவியுள்ளார்.

ஐவர் ராசாக்கள் கதையில் வரும் ஐந்து பாண்டிய மன்னர்களைப் போன்று, அழகன் பெருமாள் கதையிலும் ஐந்து பாண்டிய மன்னர்கள் கூறப்படுகின்றனர். இவர்களிலும் மூத்தவன் குலசேகரப் பெருமாளாகவே உள்ளான். இவன் உடன் பிறந்தவன் வீரபாண்டியன். சிறிய தந்தையர் பிள்ளைகளாக அழகன் பெருமாள், சீவலமாறன் எனும் சின்னப்பெருமாள், சின்னத்தம்பி என்பவர்கள் அமைந்துள்ளனர். சிறிய தந்தை பிள்ளைகள், தாங்கள் ஆள்வதற்கெனத் தனி நாடும், கோட்டை கொத்தளங்களும், படை பரிவாரங்களும், கருவூலத்தில் பாதியும் அடங்கிய “இளமுறைக் கூறு' கேட்டலால் விளைந்த சிக்கலைக் கதை விவரிக்கின்றது. கதையின் சுருக்கத்தை அறிந்து கொள்ளல் கதை ஆய்வுக்குப் பயன்படும் என்ற நோக்கில் கதையின் வரலாறு கீழே தரப்படுகின்றது.

## கதைச் சுருக்கம்

கதைப்பாடல் ஆசிரியரே கதைப்பாடலில் 60 முதல் 107 ஆம் வரிகள் வரை கதைப்பாடலின் சுருக்கத்தைக் கூறியுள்ளார். இதனினும் சற்று விளக்கமாகக் கதை வரலாற்றை இனிக் காணலாம்.

தென்காசியிலிருந்து ஆட்சி செய்த குலசேகரப் பெருமாள் என்பவருக்குப் பொன்னின் பெருமாள், தன்மப்பெருமாள் என்ற இரு ஆண் மக்கள் இருந்தனர். மூத்தவர் பொன்னின் பெருமாள், தன் தந்தை மூப்படைந்த சமயத்தில் தென்காசி ஆட்சிப்பீடத்தில் அமருகிறார். இளையவர் தன்மப்பெருமாள் புலியூரில் இருந்து ஆட்சி செய்து வருகின்றார். பொன்னின் பெருமாளுக்குக் குலசேகரப் பெருமாள், வீர பாண்டியன் என்ற இரு புதல்வர்கள். தன்மப்பெருமாளுக்கு அழகன் பெருமாள், சீவலமாறன், சின்னத்தம்பி என்ற மூன்று புதல்வர்கள். இவர்களின் பரம்பரை வழி கீழ்க் காணுமாறு அமைகிறது.




பொன்னின் பெருமாளின் மைந்தன் குலசேகரப் பெருமாள் தென்காசி ஆட்சிப்பொறுப்பை ஏற்ற பொழுது, தன் சிறிய தந்தையாரின் மூன்று புதல்வர்களையும் வளர்த்து ஆளாக்கும் பொறுப்பை மனமுவந்து ஏற்றுக் கொள்கிறார். கல்விப்பயிற்சி, ஆயுதப் பயிற்சி, யானையேற்றம், குதிரையேற்றம், சிலம்ப வரிசை, மற்போர், விற்போர் என அனைத்து வீரப்பயிற்சிகளும் அளித்துக் கண்ணின் மணி போன்று தம்பியரை வளர்த்து ஆளாக்குகிறார். ஆடை, அணிமணிகள் பூட்டி அலங்கரித்து, அவர்கள் இருந்து அரசாளப் புலியூரையும் ஒதுக்கித் தருகிறார். இளநங்கையரைத் தம்பியர் அழகன் பெருமாள், சீவலமாறனுக்கு மணம் முடித்து வைத்து இல்லற வாழ்க்கையையும் ஏற்படுத்தித் தருகிறார்.

சிறிய தந்தையர் புதல்வர்கள் மேல் குலசேகரப் பெருமாள் காட்டிய அன்பும், அக்கறையும் மற்றும் வீரப்பயிற்சிகளில் தன்னிகரற்றவர்களாக அவர்கள் திகழ்ந்ததும், உடன்பிறந்தான் வீரபாண்டியனையும் மந்திரி இராசகுல தேவனையும் பொறாமையும் எரிச்சலும் கொள்ள வைக்கின்றன. தாயாதி குலசேகரர் தென்காசியிலும், அழகன் பெருமாளும், தம்பியரும் புலியூரிலுமாக ஆண்டு வருகின்றனர். அப்போது சின்னப் பெருமாள் என்ற சீவலமாறன் "யானைக்கும், குதிரைக்கும் எப்போதும் அண்ணரிடம் பணம் பெற்றுக் கொண்டிருக்க இயலுமா? நடக்கின்ற கால் ஒரு நாள் இடறுமல்லவா! நமக்கென்று பசும்பொன் இருந்தால் தான் நமக்கு நல்லது. எனவே இளமுறைக் கூறு கேட்டுப் பெறவேண்டும்" என்று எடுத்துக் கூறுகின்றான். உடன் அழகன் பெருமாளும் 'நல்லதல்லோ தம்பி நீ சொன்ன காரியம்' என்று புகழ்ந்து, "தேசம் முழுதாளும் அண்ணர் நம்முடைய இளமுறைத் தேசத்தை மட்டுமாவது நமக்கு உரிமையுடையதாக ஆக்கினால் போதும். நீ சென்று அண்ணரின் உற்ற மந்திரியிடம்

இதனை எடுத்துக் கூறி அண்ணாிடம் பக்குவமாக உரைக்கக்கூறு" என அனுப்புகிறார். அனைத்தையும் கேட்டுக் கொண்ட மந்திரி, அழகன் பெருமாள், தம்பியருக்கெதிராக வாக்கிலொன்றும், மனதிலொன்றுமாக மன்னாிடம் உரைக்கிறான். மன்னன் குலசேகரனோ, 'மெத்தப்பகைவர் அவருடன் கூடுவார். அவ்வாறு நேர்ந்தால் இளமுறைத் தேசம் மட்டுமல்ல. தென்காசியும் கைவிட்டுப் போய்விடும்' என்று பின் விளைவுகளையும் சிந்தித்துப் பேசுகிறார். தம்பியரும் சிறு பிள்ளைகளல்லவே? இளமுறைக்கூறு கொடுத்து விடலாம் என்கிறார்.

மன்னன் குலசேகரனின் கருத்தறிந்த இராசகுலதேவனும், வீரபாண்டியனும் கூடிப்பேசி ஆலோசிக்கின்றனர். 'அழகன் பெருமாளும், தம்பியரும் இளமுறைக் கூறு பெறுவது உறுதி. அதன்பின் தங்களின் பெருவலிமையால் தென்காசி ஆட்சியையும் அவர்கள் கைப்பற்றுவர். நம்மை வெட்டித் துரத்தி விடுவர். அதற்கு முன் அவர்களை வஞ்சனையால் வெல்ல வேண்டும்' என்று திட்டம் செய்து பிரிகின்றனர்.

இவர்களின் சதியை ஒற்றன் மூலம் அறிந்த அழகன் பெருமாள், தம்பியர் தப்ப எண்ணித் துலுக்கன் குறிச்சியில் அடைக்கலம் புகுகின்றனர். இதனை அறிந்த இராசகுலதேவன் குலசேகரனிடம் துலுக்கன் குறிச்சியாருடன் சேர்ந்து அழகன் பெருமாள் சதித்திட்டம் தீட்டுகிறான் என்றும், ஆள்வதற்கென விட்டுக்கொடுத்த புலியூரை அண்ணனுக்கு அறிவிக்காமல் அவர்கள் விட்டகன்றார்கள் என்று அவர்கள் செயலை அவர்களுக்கெதிராகத் திருப்பிக் குலசேகரரை நம்பவைக்கிறான். எனவே அவர்களை அடக்கப் படை கொண்டு செல்ல அனுமதி கேட்கின்றனர் இராசகுலனும், வீரபாண்டியனும். குழப்பமான மனநிலையோடு, 'உங்களுக்கு ஒத்ததைச் செய்யுங்கள்' எனக் குலசேகரர் கூற, அழகன் பெருமாள், தம்பியரைப் பிடிக்கப் படை புறப்படுகின்றது. வீரசிகாமணியில் பாளையம் இறங்கி இருக்கின்றனர்.

ஒற்றர் மூலம் செய்தியறிந்த அழகன்பெருமாளும், தம்பியரும், எதிரிட்டுப் பொரக் கோட்டையும், போதிய படையுமில்லாத நிலையில் தந்திரத்தினால் வெல்லவேண்டும் எனக்கருதிச் சாய்மலை செல்கின்றனர். வீரசிகாமணியில் பாளையமிறங்கியுள்ள படையின் எண்ணிக்கை, உள்காவல், இராமுழிப்பு ஆகியவற்றை அறிந்து கொள்ள ஒற்றன் ஒருவனை அனுப்புகின்றனர். தொழுநோயால் பீடிக்கப்பட்டவனைப் போல் மாறுவேடம் பூண்டு சென்ற ஒற்றன், உள்காவலும் இராமுழிப்பும் இல்லை என்பதை மற்றொருவன் மூலம் சொல்லியனுப்ப, படையினர் அனைவரும் அயர்ந்து தூங்கும் நள்ளிரவில் சீவலமாறன் சென்று போரிட்டுப் புறமுதுகிட்டு ஓடவைக்கின்றார். அவர்கள்

கொண்டு வந்த பரிகளையும், யானைகளையும், ஆயுதங்களையும் கைப்பற்றி ஓடஓட விரட்டியடிக்கின்றார்.

தோல்வியுற்ற இராசகுலனும், வீரபாண்டியனும் வீரத்தால் அவர்களை வெல்ல இயலாது என்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்கின்றனர். என்றாலும் தோல்வியை ஒப்புக் கொள்ளாமல், மன்னவன் குலசேகரரிடம் சென்று 'எதிர்த்துப் பொருதால் உன்னிரு பிரியமான தம்பியரும் இறந்துவிடுவர். அதனால்தான் தோல்வி கண்டவர் போல் ஓடி வந்துவிட்டோம்' என்று மாறிப்பேசி நடிக்கின்றனர். ஆயினும் உண்மையை உணர்ந்து கொண்ட குலசேகரர், 'என் தம்பியரின் வீரத்தின்முன் உங்கள் வீரம் எடுபடவில்லையே' என ஏளனம் பேசி, 'நேருக்கு நேர் மோதுதல் இன்றி, அடுத்துக் கெடுக்க நிற்பதே உங்கள் வழக்கம்' எனக் கடிந்துரைக்கிறார்.

சினம் கொண்ட குலசேகரரைச் சமாதான வார்த்தைகள் மூலம் குளிர்விக்க எண்ணிய இராசகுலன், 'தம்பியரை இங்கு அழைத்து வருவது என் பொறுப்பு' என்று இயம்பி அழைத்து வரக் கிளம்புகிறான்.

தோற்றோடிய இராசகுலன் தலை கவிழ்ந்த கோலத்தோடு வாயிலில் வந்து நிற்பதாகக் காவலன் சொன்னதைக் கேட்ட சீவலமாறன் கடுங்கோபங் கொள்கிறார். 'அவனை வெட்டிக் கொல்ல வேண்டும்' என்று ஆவேசம் கொள்கிறார். அழகன் பெருமாளோ 'அண்ணரின் மந்திரியைக் கொல்லல் அறமாகாது' என்று கூறி, 'வந்த மந்திரியின் வார்த்தைகளைக் கேட்டு முடிவெடுக்கலாம்' என்று இயம்பி, மந்திரி இராசகுலனை உள்ளே வரவழைக்கிறார். தங்களைப் படைதிரட்டிப் பிடிக்க வந்ததற்காக அழகன் பெருமாள் தன் ஆதங்கத்தை வெளியிடுகிறார். இராசகுலனோ 'முன்பு படைகொண்டு வந்தது, மன்னர் குலசேகரனின் கட்டளைப்படி இளமுறைக் கூறு அளிக்க மரியாதையுடன் அழைக்கவே' என்று பொய் கூறுகிறான். தற்போது வந்ததும் 'அண்ணரின் ஆணைப்படி, அழைத்துப் போகவே' என உரைக்கிறான்.

'உன்னை நம்பி வந்தால் உயிர்க்கிறுதி வந்து விடும்' என்று வர மறுத்துரைக்கிறார் சீவலவர். அழகன் பெருமாளோ 'அண்ணரின் அழைப்பை ஏற்றுச் செல்லலே முறை' என்று சொல்லி மந்திரியுடன் கிளம்பித் தென்காசி வருகின்றனர்.

தம்பியரைக் கண்ட குலசேகரர் மார்புறத் தழுவி மகிழ்ச்சி கொள்கிறார். மந்திரி இராசகுலனோ, பேய்க்குதிரையை அடக்குதல், இரும்புக் கம்பியை உட்செலுத்திய நாராச வாழையை வெட்டுதல்

என்பவற்றுள் தந்திரமாக அழகன் பெருமாள, சீவலமாறனை ஈடுபடுத்தி அன்னாரின் இனமானத்துக்கும், வீரத்துக்கும் இழுக்கு ஏற்படுத்தி, அவர்களுக்கு மரணத்தை அறிமுகப்படுத்தத் துடிக்கிறான். குலசேகரரின் விருப்பத்திற்கு மாறாகவும், எதிர்பாராமலும் நடந்த இந்த வீரவலிமைப் போட்டிகளிலும் தம்பிமார் வெற்றிவாகை சூடி, வீரத்தில் தங்களை வெல்ல யாராலும் இயலாது என நிரூபிக்கின்றனர்.

இராசகுலதேவன் பின்னுமொரு யுக்தி செய்கிறான். 'ஒவ்வொரு நாள் மாலை தோறும் அண்ணரைக் கண்டு செல்ல வரும் தம்பியருக்குக் கையில் வாளெதற்கு? வென்றி வடிவாளுடன் மூத்தவர் இருக்கையில் இளையவர் வாளுடன் வந்து வணங்குதல் எதற்கு? கட்டியல் மட்டும் போதாதா? எனக் குலசேகரரிடம் கூற, 'அதுவும் நியாயமே' என, அளப்பறிய அன்பு கொண்ட அண்ணரிடம் வரும்போது, உடைவாளுடன் வரல் வேண்டாம். கட்டியல் மட்டும் போதும் எனத் தம்பியரிடம் குலசேகரர் உரைக்க, அவர் எண்ணப்படி நடக்கின்றனர் தம்பியர்.

'அண்ணரைக் காணவரும்போது ஆயுதமின்றி வருதல்' என்ற வழக்கத்தை இவ்வாறு தந்திரமுடனும், முன்யோசனையுடனும் செய்து முடித்த இராசகுலனும், வீரபாண்டியனும், உயிருள்ள வரை தம்பியரை அரசாள விடலாகாது என்று உறுதி கொள்கின்றனர். ஆயுதம் இல்லாத போது அவர்களை அழிக்கத் திட்டம் தீட்டுகின்றனர்.

யானையைப் பிடிக்கக் குழிவெட்டித் தழைகளால் மூடிப் பள்ளமே தெரியாதவாறு அமைத்து, யானையை விழச்செய்து பிடித்தல் போன்று, ஒரு இலங்கம் அமைக்கின்றனர். அவ்வீட்டினுள் மற்றொரு இருட்டறை ஒன்று கட்டி அது இருப்பதே வெளியில் தெரியாதவாறு அமைக்கின்றனர். அந்த இருட்டறையினுள் அறுபது மல்லர்களை இருக்குமாறு செய்து, அவர்களுக்குப் பொன்னும், பொருளும், விருந்தும் அளித்துத் தங்கியிருக்கச் செய்கின்றனர். புலியூர் சென்று 'அண்ணர் அழைக்கிறார். சீமையினும், படை பரிவாரத்திலும், கருவூலத்திலும் செம்பாதி தர விரும்பி அழைக்கிறார்' எனத் தந்திரமாய்க் கூறுகிறான் இராசகுலன். தீக்கனவு கண்டதாகத் திருத்தேவி உரைத்ததையும், உயிர்க்கு இறுதி வரும் எனப் பாலூர்க் கணியான் சோதிடப்பலன் சொன்னதையும், தீச்சகுனங்களையும் புறந்தள்ளிவிட்டு, 'அழைத்த மன்னரின் ஆணைப்படி நடத்தலே கடன்' என்பதைச் சிரமேற் கொண்டு, வஞ்ச மனத்தன் இராசகுலனுடன் புறப்பட்டு வருகின்றனர் அழகனும், சீவலமாறனும். அவர்களை இலங்கக் கட்டுவாசலுக்கு அழைத்து வந்த இராசகுலனும், வீரபாண்டியனும் 'முன்னோர் வைத்த வைப்புச் செப்புமுண்டு. அதனால் மற்ற யாரும் உட்புகலாகாது.

உடன்வந்தோரை வெளியில் நிறுத்திவிட்டு நீங்கள் இருவர் மட்டும் உள்ளே வரவேண்டும்' என அழைத்துச் சங்கிலி, சரப்பளிகள் உள்ள அணிகலச் செப்பைக் காட்டுகின்றனர். சீவலவர் கோபங் கொண்டு 'அணிகலன்களையும் சொத்துக்களையும் தேசத்தில் செம்பாதி கேட்கவும் நாங்கள் வரவில்லை. இருக்கும் தலத்தில் வாசம் பண்ணி இருந்து, பிழைக்கத்தக்க சீமை பற்றிக் கேட்கவே வந்தோம்' என்று கூறுகிறார். உடன் இராசகுலன், இது உங்களுக்கு, இது எங்களுக்கு என்று இடப்பெயர்களை அடுக்குகிறான். 'அண்ணர் கூறியபடி கூறு, பின்னஞ் சொல்ல வேண்டாம்' என்று சின்னப் பெருமாள் சினக்க, 'வல்லபடி பேசி அண்ணருட சீமை எல்லாங் கட்டி ஆளும்' எனக்கூறி 'இன்று முடித்திடுவேன் நான் அன்று சொன்ன வார்த்தை' என்று 'சீமை பகிர்ந்து தருவேன்' என்று அன்று உங்களிடம் கூறியபடி தந்தேன் என்ற பொருள் படவும், முன்னர்க் கூறியபடி இவர்கள் உயிரை முடித்திடுக என மல்லருக்குப் பொருள்படும் படியாகவும், இவ்வாறு இருபொருள்பட இயம்பி, 'இதோ வந்தோம்' என்று வீரபாண்டியனுடன் அறையை விட்டு வெளியேறிச் சங்கிலியிட்டுப் பூட்டி விடுகின்றான் இராசகுலன்.

தந்திரம் காரணமாக, அறைக்குள் ஆயுதமின்றிச் சிறைப் பட்டதை அழகனும், தம்பியும் அறிகின்றனர்; வருந்துகின்றனர். 'உடைவாளையிழந்து புத்தியுமற்றோம்' என்று சின்னப் பெருமாள் வருந்துகிறார். அண்ணரைக் காண வரும்போது கொண்டுவரும் கட்டியலுக்குள் இருக்கும் கள்ள வாள் ஒன்றே தற்போது கையிலிருக்கும் ஆயுதம். அறுபது மல்லர்களும் 'கூகூ' வென்ற கூக்குரலுடன் இருட்டறையிலிருந்து பாய்ந்து வருகின்றனர். சின்னப் பெருமாளும் அழகனும் மற்போர் செய்து பல வீரர்களை மடியச் செய்கின்றனர். ஒரு மல்லன் சின்னப் பெருமாளின் தலைமுடியை எட்டிப் பிடித்திடவே, 'தீண்டத்தகாதவன் தீண்டினன் முடியெனக்' கனன்று இனி உயிருடன் இருக்கலாது என முடிவெடுக்கிறார் சீவலவர். அடி நாக்குக்குள் கைகொடுத்து நாவைப் பிடுங்கி உயிர்துறக்கிறார் சின்னப் பெருமாள். சண்டையிட்டுக் கொண்டே இதனைக் கடைக் கண்ணாற் கண்ணுறுகிறார் அழகன் பெருமாள். தம்பி இறந்ததைக் கண்ணுற்ற அழகன் பெருமாள் சிறு கள்ள வாளால் அனைத்து மல்லர்களையும் கொன்று குவிக்கிறார். பிணக்குவியலிடையே உயிருடன் உள்ள ஒரு மல்லன், ஒளிந்துகொண்டு நடப்பதைப் பார்க்கிறான். உயிர் துறந்த தம்பியை மடிமீது எடுத்து வைத்துக் கொண்டு கதறிப் புலம்பியழுகிறார் அழகன். துக்கம் தாளாமல், தம்பி சொன்னதை முன்பே கேளாமல் இவ்வாறு வந்து தம்பி உயிர் துறப்பதற்குத் தானும் ஒரு காரணமாகிவிட்டோம் என்ற குற்ற உணர்வு

உறுத்துகின்றது. தம்பி இல்லாத உலகில் தான் மட்டும் இனி உயிருடன் வாழ்வதில்லை என்று முடிவெடுக்கிறார் அழகன். உடன் கள்ள வாளைத் தரையில் ஊன்றி அதில் பாய்ந்து தன் உயிரை மாய்த்துக் கொள்கிறார்.

இராசகுலனும், வீரபாண்டியனும் இலங்கக் கட்டுக் கதவைத் திறந்து உள்ளே வந்து பார்க்கின்றனர். அனைவரும் மடிந்து கிடப்பதைக் கண்ணுறுகின்றனர். அப்போது பிணக்குவியலிடையே கிடந்த ஒரு மல்லன் எழுந்து வந்து இராசகுலனிடம் நடந்தது அனைத்தையும் உரைக்கிறான். அழகன் பெருமாளும், சின்னப் பெருமாளும் மல்லரால் இறக்கவில்லை என்பதையும், தற்கொலை செய்து இறந்ததையும் கூறுகிறான். இராசகுலனும் உடலில் எவ்வித வடுவுமில்லாத நிலையில் அழகன் பெருமாள், சீவலவர் பிணத்தைப் பார்க்கிறான். மல்லன் சொல்லின் உண்மையைத் தேறுகிறான். அறிந்த செய்திகளைப் பிறர் அறியக் கூறலாகாது என மல்லனை எச்சரித்து விட்டு, இறந்த மல்லர்களைப் புதைக்க ஏற்பாடு செய்கிறான் இராசகுலன்.

நடந்த அனைத்தையும் அறிந்த ஒற்றன் ஒருவன் ஓடிச் சென்று, சாய்மலை சென்று சேதியுரைக்கிறான். சாய்மலை நாட்டார் ஓலையில் செய்தியை எழுதிக் கயத்தாற்று வெட்டுமாறனுக்கு அனுப்புகின்றனர். உண்மையறிந்த வெட்டுமாறன் படைகொண்டு தென்காசி நோக்கி வருகிறான். சாய்மலை நாட்டாரும் உடன் வருகின்றனர். முன்னே ஒரு தூதனையும் தென்காசி நோக்கி அனுப்புகின்றனர். தூதன் குலசேகரனிடம் படை வரும் செய்தியுரைக் கிறான். 'எப்படை வந்தாலென்ன என்தம்பியர் அழகன் பெருமாளும், சீவலமாறனும் வென்று வாகை சூடுவர். அன்னாரை உடன் அழையுங்கள்' எனக் கூறிநின்ற குலசேகரனிடம், தூதன் நடந்த கபட நாடகத்தை உரைத்து, தம்பியர் மாண்டதை அறிவிக்கிறான். குலசேகரர் துயரம் தாங்காமல் பொங்கிப் புலம்பியழுகிறார்.

இராசகுலனை அழைத்து 'உண்மையைக்கூறு' எனக் கடுமொழிகளை வீசுகிறார் குலசேகரர். இராசகுலனோ தம்பியரால் உயிரிழக்க இருந்தீர். வீரபாண்டியன் அன்னார் உயிரைப் பறித்தார் என வஞ்சகம் பேசுகிறான். சினந்த குலசேகரர் தலை துண்டாகுமாறு இராசகுலனை வெட்டிச் சாய்க்கிறார். 'நாட்டாசை கொண்ட நீயே ஆள்க' என வீரபாண்டியனை நோக்கிக் கூறித் தன்னுயிரை மாய்த்துக் கொள்கிறார். மனம் வெதும்பிய வீரபாண்டியன் காசிக்குச் சென்று கங்கை நீராடிப் பாவம் தொலைக்கப் புறப்பட்டு விடுகிறான்.

செய்தியறிந்து அழகன், சீவலவர் தேவியரும், சின்னத்தம்பியும் வந்து படுகளம் காணுகின்றனர். வெட்டு மாறனும், பிறரும் அடக்கம் செய்யவும், தேவியர் உடன்கட்டை ஏறவும் ஏற்பாடுகள் செய்கின்றனர். எரி மூழ்கித் தேவியரும் மடிகின்றனர். துயரம் தாளாத சின்னத்தம்பி வாளூன்றிப் பாய்ந்து மடிகின்றார். அழகன் பெருமாளின் ஒட்டக்காரனும், கட்டியக்காரனும் உடன் மடிகின்றனர். இறந்த சின்னத்தம்பியை நல்லடக்கம் செய்துவிட்டு, மன்னரற்ற தென்காசிக்கு மாவுலியைப் பட்டம் சூட்டி ஆட்சிப் பொறுப்பில் இருத்துகிறான் வெட்டுமாறன் எனக் கதை முடிவு பெறுகிறது.

## கதைப்பாடற் காலம்

குறிப்பிட்ட இந்தச் சுவடியில் சுவடி எழுதப்பட்ட காலம் சுவடியின் முதலிலோ, இறுதியிலோ குறிப்பிடப்படவில்லை. இது மூலப் பிரதி இல்லை. 'படியே' என்பது சுவடியிலேயே சுட்டப் பட்டுள்ளது.

"வழுதிகுல னழகம்பெருமாள் கதையை யின்னிலமேல்
வாழ்கநன்றாய்
எழுதிவைத்தோர் பொருள்விரித்துப் பாடினபே ரினிதூழி
வாழிதானே" (19-20)

என்பதால் மூலக்கதை முன்னோன் ஒருவனால் எழுதப்பட்டுப் பின்னர் படிப்படியாகக் காலந்தோறும் கதையும், பொருளும் விரித்து எழுதப்பட்டு வந்து, இப்பிரதி தோன்றியுள்ளது என்று இப்பிரதியை எழுதிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். எனவே குறிப்பிட்ட இப்பிரதி எக்காலத்தில் எழுதப்பட்டது என்பதும், இப்பிரதியில் உள்ள மூலக் கதை எழுதப்பட்ட காலம் எது என்பதும், கதை நிகழ்ச்சிகள் நடந்த காலம் எது என்பதும் இப்பிரதியை ஆதாரமாகக் கொண்டு தெளிவாக வரையறுத்துக் கூற இயலாத நிலை உள்ளது.

ஆனால் கதைக்கரு, கதை நிகழ்ச்சிகள், கதைப் பாத்திரங்கள், கதைப் போக்குகள் ஆகியவற்றின் அடிப்படையில் இக்கதைப்பாடற் காலத்தை ஒருவாறாகக் கணிக்கலாம்.

கதையில் வரும் ஐந்து மன்னர்களும் பாண்டியர் வம்சா வழியினர் என்பது கதைப்பாடலில் பல இடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது.

"வழுதிகுல னழகம் பெருமாள்" (19)

"தென்னவன் கொற்கைநகர் மன்னவன் பெருமாள்" (22)

"தென்னவர்கள் கதைபாட முன்னுதவி புரிவாய்" (36)

"சந்திரகுல வடிவழகன் தம்பிசின்னப் பெருமாள்" (47)

"தென்ன னழகம் பெருமாள்" (55)

"கொற்கைத் தென்னவன்" (சீவலவரைக் குறிப்பதாக) (774)

"சந்திரகுல மன்னவர்" (அழகன் பெருமாள், தம்பியரைக் குறிப்பதாக) (1095)

"சந்திர குல சின்னப் பெருமாளையும்" (2077)

"மீனக்கொடி மன்னவர் மேனிக்கொரு வடுவுங் காணார்" (அழகன்பெருமாள், சின்னப்பெருமாளைக் குறிப்பதாக) (1991)

மேலும் பாண்டியர் பரம்பரைச் சிறப்பும் கூறி (156-171) அத்தகு பெருமை மிகு பரம்பரையில் வந்தவர்கள் இவர்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதனால் பிற்காலப் பாண்டியர்கள் வரலாறு கூறும் கதைப் பாடல் இது என்பதில் சிறிதளவும் ஐயம் எழவில்லை. ஆனால் இந்த 'ஐவர் ராசாக்கள்' தென்காசியைத் தலைமைப் பீடமாகக் கொண்டு ஆண்ட காலம் எது என்பதை வரையறுப்பதில் சிரமம் உள்ளது. ஏற்கெனவே ஒரு 'ஐவர் ராசாக்கள்' கதையைப் பதிப்பித்த நா.வா. அவர்கள் அதன் காலத்தை வரையறுத்துள்ளார். அழகன் பெருமாள் கதையில் வரும் ஐவரும் அன்னாருக்கு முந்தையவர்களா? பிந்தையவர்களா? என்பதை நிறுவி விட்டால் இக்கதை குறிப்பிடும் மன்னவர் ஆட்சிக்காலத்தை வரையறுத்திட இயலும். ஐவர் ராசாக்கள் தென்காசியில் இருந்து ஆண்ட காலமாக கி.பி. 12-15ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலத்தைக் குறிப்பிட்டுள்ளார் நா.வா.

வள்ளியூர்க் கோட்டை கட்டிய ஆண்டாகச் சுவடி குறிப்பிடுவது, குலசேகரனின் பட்டத்தரசி, உலகமுழுதுடையாள் செய்த தானங்களை அறிவிக்கும் சாசனங்கள், பிற வரலாற்றுச் சான்றுகளை வைத்து இவ்வாறு காலம் கணித்துள்ளார். இதே கால கட்டத்துக்குள் அல்லது இக்காலக் கட்டத்தின் அணித்தேயான முன், பின் காலக் கட்டத்தில் அழகன் பெருமாள் கதை குறிப்பிடும் நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கலாம்.

'அண்ணன் தம்பியர் பலர் இருக்கும்பொழுது தங்களுக்குள் ஒருவனைத் தலைவனாகவும் முடிமன்னனாகவும் ஏற்றுக் கொண்டு

அவனுக்குக் கட்டுப்பட்டு மற்றையவர் ஆட்சி நடத்திய வழக்கம் தமிழகத்தில் இருந்திருக்கிறது' என்று கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிட்டிருப்பது முன்னரே சுட்டிக் காட்டப்பட்டது. ஐந்து பாண்டிய மன்னர்களை வென்றதாகக் குலோத்துங்கச் சோழனின் சாசனம் குறிப்பிட்டிருப்பது குறித்து சாஸ்திரியார் அவர்கள் இவ்வாறு கருத்துத் தெரிவித்துள்ளார்.

ஒருவனுக்குக் கட்டுப்பட்டு மற்றையோர் நாட்டைத் தங்களுக்குள் பிரித்துக் கொண்டு ஆண்ட முறைக்கு மாறாக, இந்த அழகன் பெருமாள் கதைப்பாடலில் தங்களுக்கே உரிமையுடைதாகத் தாங்கள் ஆளும் பகுதியை இளமுறைக் கூறாக விட்டுத் தர வேண்டும் என்று கேட்பதும், அதனால் விளைந்த சிக்கலுமே கதைக்கருவாக அமைந்துள்ளது. எனவே முந்தைய வழக்கத்துக்கு மாறாகத் தங்களுக் கெனத் தனி நாடு கோரும் இப்போக்கு வளர்ந்துள்ளமையை இக்கதைப்பாடல் காட்டுவதால் இந்நிலை பிற்காலத்ததாகலாம் எனக் கருத இடமுள்ளது, எனவே ஐவர் ராசாக்கள் கதை குறிப்பிடும் குலசேகர பாண்டியன் போன்ற ஐவர் வமிசத்தில் வந்த மற்றும், ஐவரை இந்த அழகன் பெருமாள் கதை காட்டுகிறது எனலாம். மேலும் ஐவர் ராசாக்கள் கதையில் போன்று இவர்கள் உடன்பிறந்த வர்களாக இல்லாமல், பெரிய தந்தை, சிறிய தந்தை பிள்ளைகளாகிய தாயாதிகளாக அமைந்துள்ளதும் இவ்வாறு தனிநாடு உரிமை கேட்டதற்குக் காரணமாக அமைந்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. கயத்தாற்று வெட்டுமாறன், குலசேகரருக்குப் பெண் கொடுத்தவர் என ஐவர் ராசாக்கள் கதை காட்டுகிறது. அழகன் பெருமாள் கதையிலும் கயத்தாற்று வெட்டுமாறன் என ஒருவர் குறிப்பிடப்படுகிறார். குலசேகரரின் பகைவராகவும், அழகன் பெருமாளின் ஆதரவாளராகவும் இவர் காட்டப்படுகிறார். முந்தைய வெட்டுமாறனின் வழிவந்தவராக இவர் இருக்கலாம் எனக்கருதலாம். எவ்வாறாயினும் ஐவர் ராசாக்கள் வழிவந்த மற்றுமொரு ஐந்து பாண்டிய மன்னர்களின் வரலாறு கூறுவது இக்கதைப்பாடல் எனத் தெளியலாம்.

கதை நிகழ்ச்சிகள் காலந்தோறும் பின்னப்பட்டு வந்துள்ளதால் மூலக் கதையுடன் பின்னிணைப்புகளும், முன்னிணைப்புகளும், இடைச் செருகல்களும் இணைந்திருக்க வாய்ப்புள்ளமையின், கதையின் பிற நிகழ்ச்சிகளை அகச் சான்றாகக் கொண்டு காலம் கணிப்பது சரியானதாக இருக்கும் எனத் தோன்றவில்லை.

குறிப்பிட்ட இக்கதைப் பிரதி மிகப் பிற்காலத்ததாக இருக்க வேண்டும். சுவடி எழுது முறைப்படி மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி வைப்பதில்லை. ஒற்றைக் கொம்பு, இரட்டைக் கொம்பு வேறுபாடு

காட்டப்படுவதில்லை. ஆனால் இந்தச் சுவடியில் மெய்யெழுத்து களுக்குப் புள்ளி காணப்படுகின்றது. ெ, ே - என்ற எழுத்துகளும் வேறுபாட்டுடன் எழுதப்பட்டுள்ளன. 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இக்குறிப்பிட்ட சுவடிப் பிரதி எழுதப்பட்டிருக்கலாம். மூலக்கதை பிற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்துக்குட்பட்ட 15-16ஆம் நூற்றாண்டாகலாம்.

## கதைப்பாடல் ஆசிரியர்

அழகன் பெருமாள், சீவல மாறனுக்குச் சிலம்ப வித்தை கற்றுக் கொடுத்தவரின் மகனான தோப்பில் அணஞ்ச பெருமாள் என்பவர் இந்த அழகன் பெருமாள் கதைப்பாடலைப் பாடியவர் என்பது தெரிகின்றது. பணிக்கன் மாவுதித்தோன் என்பவரது குமாரன் இவர் என்பதும் தெரிகின்றது. இவர் கதையின் மூல ஆசிரியராக இருத்தல் வேண்டும். கதைத் தலைவர்களுக்குச் சிலம்ப வித்தை கற்றுக் கொடுத்த ஆசானின் மைந்தனே கதைப்பாடல் ஆசிரியர் என்பதால் இவ்வாறு கருத இடமுள்ளது. இப்பாடலாசிரியர் 'மாந்தை நாராயணன் என்பவரின் மைந்தன் அழகிய நம்பி கவிராசன் என்பவரின் அருளால் இக்கதைப் பாடலைப் பாடினார் என்பதால் தோப்பில் அணஞ்சபெருமாளின் குருவாக அழகியநம்பி கவிராசர் இருக்கவேண்டும் எனக் கருத இயலுகின்றது. தோப்பில் என்பது இல்லப்பெயராகும். இது கன்னியாகுமரி மாவட்ட வழக்கப்படி இயற்பெயர் முன் இணைந்து வந்துள்ளது.

"சின்னப் பெருமாளுட னழகன்றனைச் சேவித்திருந்த
சிலம்பத் தொழில் பயித்திவிற்ற பணிக்கன் மாவுதித்தோன்
பணிக்கன் குமாரன் தோப்பி லணஞ்ச பெருமாள்சொல்
பால னழகன் துணைவன் நாகுத்தன் மந்தன்
கணக்கதிய வளமைதிகழ் செந்தில்நகர் முருகன்
கஞ்சமலர் தாள்பரவுந் தம்பி சீவலவன்
மணத்தமல்லித் துடர்மார்பன் மாந்தை நாராயணன்
மைந்த னழகிய நம்பி கவிராச னருளால்
இணைத்தமலை புயத்தழகன் சீவலவர் கதையை
எவரு மகிழ்ந்திடக் காவியம் பாடினானே" (138-147)

எனக் கதைப்பாடல் வரிகள் கதைப்பாடல் ஆசிரியரின் வரலாற்றை விளக்குகின்றன. மூலக் கதைப்பாடலின் ஆசிரியரே தோப்பில் அணஞ்ச பெருமாள் என்பதும், கிடைத்துள்ள இக்குறிப்பிட்ட சுவடிப் பிரதியைப் படி எடுத்தவர் யார் என்பதும் தெரியவில்லை என்பது மனங்கொள்ளத் தக்கது.

## கதைப்பாடலில் காணப்படும் வரலாற்றுக் குறிப்புகள்

### ஐவர் ராசாக்கள் கதையினின்றும் வேறான கதை

ஐவர் ராசாக்கள் கதை குறிப்பிடும் ஐந்து மன்னர்களின் பெயர்களாகக் குலசேகரப் பெருமாள், முத்தும் பெருமாள், முகிலம் பெருமாள், முடிசூடும் பெருமாள், பாண்டியப் பெருமாள் என்பன அமைந்திருந்ததாக அக்கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. வள்ளியூரில் கோட்டை கட்டி இவர்கள் ஆட்சி செலுத்தி வந்தனர். இவர்களுக்கு முன்னரும் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு ஐவர் ராசாக்கள் ஐந்துபேர் ஆண்டிருந்ததும் அவர்கள் பழங்காலப் பாண்டியர் பட்டங் களைப் பெயர்களோடு சூட்டிக் கொண்டிருந்ததும் முன்னரே குறிப்பிடப்பட்டது. இவர்கள் அனைவரும் உடன்பிறந்தவர்களெனத் தெரிகின்றது. இந்த அழகன் பெருமாள் கதைப்பாடலில் குலசேகரப் பெருமாள், வீரபாண்டியன் என்பவர்கள் உடன்பிறந்தவர்களாகவும், அழகன் பெருமாள், சீவலமாறன், சின்னத்தம்பி என்ற மூவரும் மற்றொரு தந்தைக்குப் பிறந்த உடன் பிறந்தாராகவும் காட்டப் பட்டுள்ளனர். முந்தைய ஐவர் ராசாக்கள் உடன் பிறந்தவர்களாக இருக்க, இவர்கள் ஐவரும் பெரிய தந்தை, சிறிய தந்தை பிள்ளைகளாக உள்ளமையின் முந்தையவர்களிலிருந்தும் இவர்கள் வேறானவர்கள் என்று தெரிகின்றது. இவர்களின் பெயர் மாறுபாடும் இவர்கள் முன்னையவர் களினின்றும் வேறானவர்கள் என்பதை உறுதிப்படுத்துகின்றது.

ஐவர் ராசாக்கள் கதை குலசேகரனுக்குப் பெண் கொடுத்த மாமனாகக் கயத்தாற்றிலிருந்து ஆண்ட வெட்டுமாறன் என்ற ஒருவனைக் குறிப்பிடுகின்றது.[16] இந்த அழகன் பெருமாள் கதையும் கயத்தாற்றில் வெட்டுமாறன் இருந்தான் எனக் குறிப்பிடுகின்றது. இந்த வெட்டுமாறன் அழகன் பெருமாளுக்கு வேண்டியவனாகக் கதை காட்டுவதால் இவன் முந்தைய வெட்டுமாறனல்ல என்பது புலப்படுகின்றது. 'வழி வழி தாத்தா பெயரைப் பேரனுக்கு வைத்தல்' என்ற மரபு வழக்கப்படி வெட்டுமாறன் என்ற பெயர் சூட்டப்பட்டு வந்திருக்கலாம்.

கதை நிகழ்ச்சிகள், பாத்திரப் பெயர்கள், பாத்திரப் படைப்புகள், கதைத் தொடக்க, முடிவுகள் ஆகியவற்றை வைத்துப் பார்க்கும் பொழுது இது ஐவர் ராசாக்கள் கதையினின்றும் முற்றிலும் வேறுபட்ட, ஆனால் அதே போன்ற மற்றுமொரு ஐவர் ராசாக்கள் தொடர்பான கதை என்பதைத் தெளிவாக அறியலாம்.

---

16 ஐவர் ராசாக்கள் கதை, பக். 6.

## கதைப்பாடல் காட்டும் ஆட்சி முறை

### இளமுறைக்கூறு

தன் தந்தை இருந்து ஆட்சி செலுத்திய தென்காசியைக் குலசேகரன் அடுத்து இருந்து ஆட்சி செய்கிறான். சிறிய தந்தையின் பிள்ளைகளான அழகன் பெருமாள், சீவலமாறன், சின்னத்தம்பி என்ற மூவரும் சிறு பிள்ளைகளாக இருந்ததால், தாயும் தந்தையுமாகித் தானே அவர்களை வளர்த்து ஆளாக்கி விட்ட பின், முன்னிருவருக்கு மணமும் முடித்து வைத்து, சிறியதந்தை ஆண்ட புலியூரை ஆளுமாறு அவர்களை அனுப்பி வைக்கிறான். இதன் மூலம் பரம்பரையாக ஆண்ட பகுதிகளை அந்தந்தப் பரம்பரையே ஆளும் முறை வழக்கிலிருந்தமை தெரிகின்றது.இவ்வாறு இருவேறுபட்டவர்கள் இருவேறு இடங்களிலிருந்து ஆட்சி செய்தாலும் முன்னவனுக்கு அதாவது குலசேகரன் என்ற ஒரு முடி மன்னனுக்குக் கட்டுப்பட்டே பின்னையோர் ஆட்சியிலிருந்தனர் என்பதும், அவர்களுக்கென்று தனிக் கோட்டை, கொத்தளங்களோ, பெரும் படை, பரிவாரங்களோ, கருவூல அமைப்புகளோ கிடையாது என்பதும் இக்கதைப் பாடல் மூலமாகத் தெரிய வருகின்றது.

> "இருக்கு முறைப்படி சொன்னவடிவழகன் சிலகன்னியரை
> இருவருங் கைப்பிடித்திட மனமியத்தி
> செருக்குப் புலியூரில் தம்பியரை யிருத்தி
> தென்காசி தன்னில் குலசேகர ரிருந்தார்" (220-223)

எனத் தம்பியரைப் புலியூரில் ஆட்சி செய்யுமாறு விடுத்தது, கதைப் பாடலில் மேற்கண்டவாறு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

நாம் தற்போது ஆளும் தேசத்தையே நமக்கு உரிமையாக்கி இளமுறைக் கூறாகக் கொடுக்குமாறு அண்ணரிடம் கேட்கலாம் எனக் கூறும் சீவலமாறனின் கூற்றாகக் கதைப்பாடல்,

> "இருக்கும் படைக்கும் யானைக்கும் குதிரைக்கும்
> எப்போதும் அண்ணர் பணங்கொடுப் பாரோ
> செருக்கும் பசும்பொன் றனக்கென் றிருந்தால்
> சீமையும் வாண்மையும் ஆண்மையும் நடக்கும்
> நடக்கின்ற காலிடறு மென்பதறி யீரோ" (236-240)

எனக் காட்டுகிறது. உடன் அழகன் பெருமாளும்,

> "நல்லதல்லோ தம்பி நீசொன்ன காரியம்
> நம்முடைய இளமுறைத் தேசமே போதும்

தேசமுழு தாண்ட அண்ணாவி குலசேகரர்
திருவுள மறிந்த மந்திரியுடனே சொல்லி
நேசமுடன் வாவென்று" (246-250)

தம்பி சீவலவரையே அனுப்பி வைக்கிறார் அழகன் பெருமாள்.

இருந்து ஆண்டு வரும் புலியூருடன் கருவை நல்லூரையும் தமக்கு உரிமையாக்குமாறு அழகன் பெருமாள் கேட்டார் என்பது இரு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"உத்தா ரிளமுறைத் தேசந் தங்களுக்கென்றே
ஓங்கு கருவைநல்லூர்ச் சீமை கேட்கிறார்
கொற்ற முடையவர்க் கெப்படித் தானென்று
கொடுத்தால் நாளையுந் தொடுப்பார் சொம்பகிரென்பார்
(302-305)

என மந்திரி இராசகுலதேவன் குலசேகரனிடம் கூறுவதாக உள்ளது. இத்துடன்,

"கரையேறி யெப்படியு மிளமுறைக் கூறுமக்கு
கருவை நல்லூர் வாங்கிடுவோ மரசர்திருவாணை" (445-446)

என்று துலுக்கன் குறிச்சிக் கரையாளர் கூறுவதாகவும் உள்ளது. குலசேகரர் கருவைநல்லூரை இளமுறைக் கூறாக விட்டுக் கொடுத்ததையும் கதைப்பாடல் காட்டுகின்றது.

"இருந்தார் குலசேகர பெருமாள்
ஏற்றக் கருவைநல்லூரும் விட்டார் (1368-1369)

என்பதாகும். கருவைநல்லூர் என்று கதைப்பாடல் குறிப்பிடும் கரிவலம் வந்த நல்லூர் என்ற ஊர் தென்காசியைப் போன்று, பிற்காலப் பாண்டியர் வந்து தங்கிய முக்கிய இடமாக இருந்த சிறப்புப் பெற்றது என்பதை ஐவர் ராசாக்கள் கதை தெரிவிக்கிறது.[17]

இளமுறைக் கூறாக ஊர்களை உரிமையாக விட்டுத் தருமாறு கேட்பவர்கள், பின் படிப்படியாக,

"அடுத்த குதிரையும் யானையும் பங்கென்பார்
அல்லால் கருவேல மெல்லார்க்கும் பொதுவென்பார்
பொதுவென்பார் சொம்பகிராதே விட்டாக்கால்
போச்சு தடியேற்கு மூச்சேது கடவாது" (308-311)

17 ஐவர் ராசாக்கள் கதை, பக்.7.

என்று மந்திரி இராசகுலன் அடுத்து இவையெல்லாம் நடக்க வாய்ப்புள் ளதை எடுத்தோதுகின்றான். 'தம்பியர் சிறுபிள்ளைகள் அல்லவே! அவர்களுக்கு 'இளமுறைக் கூறு' கொடுத்துவிடலாம்' (316-317) என்று குலசேகரர் கூறிய போது, 'உடன் பிறந்தான் வீரபாண்டியனுக்கல்லவோ இளமுறைக்கூறு தரவேண்டும் அடுத்தவர்களுக்கென்றால் அடுக்குமோ' என்றும் மந்திரி கூறுகிறான்(330-331). இதன் மூலம் இளமுறைக் கூறு என்ற ஒன்று இளையவர்களுக்குக் கொடுக்கும் முறையாக இருந்தது என்பதும், இருந்து ஆண்டு கொள்ளலாமே தவிர, தங்களுக்கே உரிமையுடையதாக அப்பகுதிகளை ஆக்கிக் கொள்ள இயலாது என்பதும், அரசர்களுக்குரிய மற்ற அமைப்புகளோ, சிறப்புகளோ இவர்களுக்குக் கிடையாது என்பதும், தேசத்தின் ஒரு பகுதியை உரிமையாக்கிக் கேட்கும் குரலும் அவ்வப்போது எழுந்துள்ளது என்பதையும் இக்கதைப்பாடல் தெரியப்படுத்துகின்றது. குலசேகரர் இளமுறைக் கூறு தர ஒப்புக் கொண்டதையும் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

"திருந்த யிளமுறைக் கூறுமக்கு
தேசம் பகுந்துபின் தருவோ மென்றார்" (1370-1371)

என்கிறது. ஆனால் இராசகுலனின் தந்திரத்தால் அழகன் பெருமாளும் அவர் தம்பியும் மரணத்தைச் சந்திக்க நேரிடுகின்றது.

## குலசேகரரின் அமைச்சர் பெருமக்கள்

குலசேகரரின் அரசவையில் ஏழு அமைச்சர்கள் இருந்திருக் கின்றனர். இவர்களின் ஆலோசனைப்படி ஆட்சி நடந்திருக்கின்றது.

"அல்லிமலர் வல்லிவுணர் வில்லவ ராயனும்
வில்லவ ராயனுங் காளிங்க ராயனும்
மிக்காக மந்திரி ராசகுல தேவன்
பல்லவ ராயனுஞ் செய்துங்க ராயனும்
பண்புடைய சீவல கண்டிய ராயனும்
கண்டகாரியஞ் சொல்லு மந்திரிக ளாகவே" (227-232)

என மந்திரிகளின் பட்டியல் அமைந்துள்ளது. இந்த ஏழு அமைச்சர்களில் ஒரு தீய அமைச்சனாக இராசகுலன் இருந்துள்ளான்.

மற்றோரிடத்திலும் மந்திரிமார்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"மந்திரி வில்லவ ராயன் காளிங்கன்
மந்தன் செய்துங்கன் சீவல கண்டியன்
தந்திரஞ் சொன்ன ராசகுல தேவன்" (515-517)

என உள்ளது.

### அழகன் பெருமாளின் அமைச்சர்

புலியூரிலிருந்து அரசாண்ட அழகன் பெருமாள் தன் தம்பி சீவலமாறனை அமைச்சராக ஆக்கியிருந்தமை,

**"மந்திரி சின்னப்பெருமாள் திருமுகத்தை நோக்கி"** (1642)

என்ற வரிகளால் புலனாகின்றது.

### தளகர்த்தன்

குலசேகரா் தன் திருத்தம்பி வீரபாண்டியனைத் தளகர்த்தனாக அமா்த்தியிருந்தது கதைப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"தானுந் தளகத்தன் வீர பாண்டியனுந்தான்"** (518)

என அமைந்துள்ளது.

### குலசேகரரின் ஆதரவாளர்கள்

அரசராக இருப்பவர்களுக்கு அவர்களின் ஆட்சிக்குட்பட்ட சிற்றரசர்கள் ஆதரவாளர்களாக இருப்பதுண்டு. போா் என்று வரும் பொழுது இவா்கள் படை உதவி செய்வதுண்டு. இதுபோன்று சிற்றரசைக் காப்பாற்றப் பேரரசும் படை கொண்டு செல்வதுண்டு. அடங்கி நடக்கும் சிற்றரசுகள் அல்லாதவரும் ஓா் அரசருக்கு ஆதரவாக நடப்பதுண்டு. இது போன்று எதிராளிகளான எதிர் அணியினரும் இருப்பதுண்டு.

குலசேகரரின் படை, அழகன் பெருமாளைச் சிறைப் பிடிக்கச் சென்றபோது கீழ்க்காணுபவர்கள் படையுடன் சென்றதாகக் கூறப்படுவது இவா்கள் குலசேகரருக்குப் படை உதவி செய்த ஆதர வாளா்கள் எனக்கருத இடம் தருவதாக உள்ளது.

பாடல் வரிகள் வருமாறு:

"போகலுற்றாா் ஒருமித்துப் பிறப்பட்டாா்
பொன்னும் பாண்டியும் நாட்டுக்கு வாச்சானும்
மேக மொத்தவன் செங்கோட்டைப் புலியும்
வெட்டும் வன்னிய னிரட்டைக் குடையானும்
ரெட்டைக் குடையானும், தாலிக்கு வேலியும்
வெத்திப்போா் செய்யுங் கொத்தக் கோழிமாரும்
முரட்டு வன்னிய னாண்டு கொண்டானும்போா்
மீண்டுங் குண்டையங் கோட்டு மறவரும்
மறவ ருக்கிரங் கோட்டையி லுள்ளோரும்

வலையருங் குலசேகர தேவனும்
குறவரு மந்த சேத்துர்த் திருவனும்" (503-513)

எனப் பட்டியல் நீள்கிறது.

போர் நடந்தபொழுது இந்த ஆதரவாளர்களுள் மடிந்தோரையும், ஓடி ஒளிந்தோரையும் கீழ்க்காணுமாறு கதைப்பாடல் விவரிக்கின்றது.

"கோட்டைக்குள் புகுந்தபடை நாட்டுக்கு வாச்சானை வெட்டி
கொத்தளத்தில் கிடந்த கொத்திக் கோழியாரைக் குத்தி" (894-895)

"குலிலி முழக்கங் கேட்டு வலைய ரொதுங்கியோட
கொண்டையன் கோட்டைமறவர் தொண்டுதொண்டே யேறிவிழ"
(919-920)

"காலிற் கடுமைகொண்ட தாலிக்கு வேலியோட" (922)

"விரட்டிச்சில பேர்குத்த ரெட்டைக்குடையா னோட
பால்குளத் தாருமந்த முல்லைப்பெருந் தாளியாரும்
பறக்கச் செங்கோட்டைப்புலி உறக்கப் பிராந்திலோட" (923-925)

"தாண்டும்பரி தன்னைக்குத்தி ஆண்டுகொண்டானைத் துரத்தி
(936)

எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

## அழகன் பெருமாளின் ஆதரவாளர்கள்

அழகன் பெருமாளுக்கு ஆதரவாக இருந்தவர்களையும் கதைப் பாடல் சுட்டிக் காட்டுகின்றது.

இளமுறைக்கூறு அழகன் பெருமாளுக்குத் தரலாகாது என்று இராசகுல தேவன் அரசர் பெருமான் குலசேகரரிடம் கூறியபொழுது குலசேகரர், இன்னின்னவர்களெல்லாம் அழகன் பெருமாளுக்கு ஆதரவாகத் திரளுவர். அன்னாரின் ஆதரவோடு போர் என்ற ஒன்று நடந்துவிட்டால் இளமுறைக் கூறுடன் இந்தத் தென்காசி ஆட்சியுங் கூடப் பறிபோய்விடும் என்று தன் எதிர்கால அச்சத்தை வெளிப்படுத்துகின்றார். இந்த வகையில் அழகன் பெருமாளின் ஆதரவாளர்களாக இருந்தவர்களைக் கதைப்பாடல் கீழ்க்காணுமாறு அடையாளங் காட்டுகின்றது. இவர்கள் அனைவரும் குலசேகரரின் பகைவர்கள் என்பதும் இதனால் தெளிவாகின்றது.

"மெத்தப் பகைவ ரவருடன் கூடுவார்
வீர மார்த்தாண்டன் கரந்தையி லிருக்கிறான்
இருக்கிறான் மங்கைப் பதிதன்னில் செய்துங்கன்
இவனல்லால் வஞ்சிநாடனுங் கூடுவான்
வெருக்குள்வார் முண்டன் தும்பிச்சி யுடனந்த
வெட்டு மாறனுங் கயற்றாற்றி லிருக்கிறான்
வெட்டு மாறனு மிருக்கிறான் கயற்றாற்றில்
கயத்தில் போய்விழுந்த கடுமுதலை போல
கடுக யிவருந்தா னவருடன் கூடுவார்
செயித்துக் கொள்வார் தம்பிமா ரிளமுறை
தேச மல்லாமல் தென்காசியு மென்றான்" (340-350)

போர் நடைபெற்ற பொழுது அழகன் பெருமாளுக்கு ஆதரவாகக் களமிறங்கியிருந்தவர்களையும் இவர்களின் ஆதரவாளர்களாகக் கருதலாம். இந்த வகையில் புறங்காட்டாப்புலி, உக்கிரங் கோட்டையார் போன்றோர் அழகன் பெருமாளுக்கு ஆதரவானவர்கள் எனத் தெரிகின்றது.

"ஆட்டுக்கிடை யென்றபுறங் காட்டாப்புலி வந்தெதிர்த்தான்
தாண்டும்பரி தன்னைக்குத்தி ஆண்டுகொண்டானைத் துரத்தி
சரங்கொண் டறுத்திடு முக்கிறங்கோட்டையார் படையும்"

என்ற பாடல் வரிகள் காணத்தக்கன.

அழகன்பெருமாள், சீவலவர் மரணத்தின் போது, தழுவியழுத புறங்காட்டாப் புலியையும், சாய்மலை நாட்டார், தும்பிச்சி, மாவுலியையும் காண்கிறோம். (2409, 2270) தஞ்சமடையத் துலுக்கன் குறிச்சிக்குப் புறப்பட்ட அழகன் பெருமாளுடன் புறப்பட்ட புறங்காட்டாப் புலியையும் கதைப்பாடல் காட்டுவதால்(391) இவன் புலியூரிலேயே உடனிருந்தவன் எனக்கருத வாய்ப்புள்ளது.

கயத்தாற்று வெட்டுமாறன் அழகன்பெருமாளுக்கு மிக ஆதரவானவனாக உள்ள நண்பனாகத் திகழ்ந்தவன் எனக் கதைப் பாடல் காட்டுகின்றது.

போருக்கெழுந்த அண்ணன் அழகன் பெருமாளைத் தடுத்து நிறுத்தித் தம்பி சீவலவர் 'தானே பகை முடித்து மீள்வதாய்ப் புறப்பட்டபோது, அண்ணரிடம் கூறும் வார்த்தைகளாக,

"படைமுகத்தி லெனக்கவசம் வந்தாலும் ஒமக்கு
பன்னுதமிழ் மாறன் முன்னுதவி யுண்டு"

எனக் கூறுவது நோக்கத்தக்கது.

மேலும் சாய்மலை நாட்டாரிடம் சீவலவர்,

"தூசிப்படை கைகலந்து மோசம்வந்து தென்றால்
பணையாம லண்ணரையுந் தேவிமார் தனையும்
பதிக்கி வெட்டு மாறனிடத் தொதிக்கிவிடும்" (855-857)

எனக் கூறுவதும் கருதத்தக்கது. இதுபோன்றே அழகன் பெருமாளும், சீவலமாறனும் வஞ்சகமாகக் கொல்லப்பட்டார்கள் என்ற செய்தியைக் கேள்விப்பட்டவுடன் வெட்டுமாறன் படைகொண்டு வருவதும், தேவியர் உடன்கட்டையேற ஏற்பாடுகள் செய்து இறுதிச் சடங்குகளை நடத்தி வைப்பதும், சின்னத்தம்பியை அடக்கஞ் செய்வதும், தென்காசியைக் கைப்பற்றுவதும் தென்காசியை ஆளுமாறு மாவுலிக்குப் பட்டம் கட்டி வைப்பதுமான பல நிகழ்வுகளில் வெட்டுமாறன் ஆதரவுடன் பங்கேற்பதும், பணியாற்றுவதும் காட்டப்பட்டுள்ளது.

"என்றவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு
இமைக்குமுன் வெட்டு மாறனு மறிய
சென்றுசொல்லு மென்றா ரோலையு மாளும்
சீக்கிரத்தி லனுப்பினா ருடனே
உடனே வெட்டுமாறனும் படையும்
ஓடினார் தென்காசியை நாடி" (2083-2088)

என்று அழகன் பெருமாளுக்கு உற்றதை அறிந்த,

"பார்த்துரை வெட்டு மாறனுந்தான்
பாத்துப் பின்னிருப்ப தென்னவென்று
ஆர முலையாரை மன்னருடன்
அடக்க வேணுமென்றே துணிந்தான்" (2414-2417)

என்று தேவியர் உடன்கட்டையேற ஏற்பாடுகள் செய்தமையும்,

"திருமார் பழுந்தவே வெட்டு மாறன்
சின்னத் தம்பியைத் தானெடுத்து
அணைத்துக் கண்ணீர் மஞ்சன மாட்டி
அரசர் முறையால் நல்லடக்கஞ் செய்து" (2464-2467)

என்று சின்னத்தம்பியை அடக்கஞ் செய்ததும்,

"குவிந்திடும் படையுடன் வெட்டு மாறன்
கொண்டா னுடனே தென்காசி நாட்டில்" (2195-2196)

என்று தென்காசியைக் கைப்பற்றியமை பற்றியும்,

"காசிப் பதியாள மாவுலியை
கட்டினான் பட்டம் வெட்டு மாறன்" (2470-2471)

என்று மாவுலிக்குப் பட்டம் கட்டியமையும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## மாவுலிக்குத் தென்காசிப் பட்டம்

குலசேகரன், சின்னத்தம்பி என்ற அனைவரும் மடிந்து விட, வீரபாண்டியனும் புனித நீராடிப் பாவந் தொலைக்கக் காசிக்குச் சென்றுவிடத் தென்காசியைக் கைப்பற்றிய வெட்டுமாறன், தென்காசி மன்னவனாக மாவுலிக்குப் பட்டம் கட்டியதாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது (2470-2471). அழகன் பெருமாளின் ஆதரவாளர்கள் பலர் இருக்க, வெட்டுமாறன் இந்த மாவுலிக்கு ஏன் தென்காசியை ஆளும் உரிமையை நல்கினான் என்ற கேள்வி எழுகின்றது. இந்த மாவுலி பற்றிக் கதைப்பாடலில் நான்கு இடங்களில் குறிப்புகள் காணப்படுகின்றன.

அழகன் பெருமாள், சீவலமாறனின் மரணத்தைக் கேள்வியுற்றதும் வெட்டுமாறனுடன் படைகொண்டு வந்த மாவுலியைக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

"மவுலியும் வெட்டுமாறனும் படைவாரான்
படுமத களிற்றானையும் படையும்
பாய்பரிகளு மொருபுடை நெருங்கவே
நடையோட்டமா யோடியே வந்தார்" (2094-2097

என விவரிக்கப்பட்டுள்ளது.

இலங்கத்தில் மரணமுற்றுக் கிடந்த அழகன் பெருமாள், சீவல மாறனைக் கண்டு கலங்கிய மாவெலியைக் கதைப்பாடல் காட்டுகின்றது. (2269-2272)

அண்ணன்மார் மடிந்ததை அறிந்த சின்னத்தம்பி வெட்டு மாறனுடன் மாவுலியையும் கட்டிக்கொண்டு கதறியழுததாகக் குறிப்பிடும் இடத்திலும் மாவுலி இடம் பெற்றுள்ளான்.

"கட்டுவான் வெட்டு மாறனுடன்
காணெனிச் சொல்லு மன்னரெங்கே என்பான்
இட்டமுட னின்ற மாவுலியை
இருகை யாரவே தழுவிக் கொண்டான்" (2405-2408)

என உள்ளது.

"காசிப் பதியாள மாவுலியை
கட்டினான் பட்டம் வெட்டு மாறன்" (2470-2471)

என மாவுலிக்குத் தென்காசிப் பட்டம் சூட்டி வைத்தது குறிக்கப் பட்டுள்ளது. மாவுலி, மவுலி, மாவெலி எனக் குறிக்கப்பெறும் இப்பெயர் மாபலி, மகாபலி என்ற பெயரின் பேச்சு வழக்கு வடிவமாகலாம். இவனைப் பற்றிய குறிப்பு வரும் நான்கு இடங்களிலும் இவன் குலசேகரருக்கோ, அழகன் பெருமாளுக்கோ உறவினனாகக் காட்டப்படவில்லை. அழகன் பெருமாளின் ஆதரவாளனாக மட்டுமே காட்டப்பட்டுள்ளான். வெட்டுமாறனுக்கு நெருங்கியவனாக இருக்கலாம். இதனால் மாறன் இவனுக்குத் தென்காசியை ஆளும் உரிமையை நல்கியிருக்கலாம்.

## துலுக்கன் குறிச்சித் தும்பிச்சி

துலுக்கன் குறிச்சிப் பகுதி, தும்பிச்சி என்பவனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்ததாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. இராசகுலனும் வீரபாண்டியனும் சேர்ந்து சதி செய்வதைத் தென்காசியிலிருக்கும் அழகன் பெருமாளின் ஒற்றன் ஒருவன் அழகன் பெருமாளிடம் தெரிவித்து விட, தப்பஎண்ணும் அழகன் பெருமாள், தம்பியர், தேவியருடன் துலுக்கன் குறிச்சியில் தஞ்சமடைவதாகக் கதைப்பாடல் காட்டுகின்றது. (421-452) இதனை இராசகுலன் அரசர் குலசேகரரிடம் குறிப்பிடும்பொழுது, 'நமது பகைவனாகிய தும்பிச்சி மீது நம்பிக்கை வைத்து, உம் தம்பியர்கள் துலுக்கன் குறிச்சியில் தஞ்சமடைந்து விட்டனரே' என ஏசிப் பேசுகிறான்.

"இருகண்ணின் மணிபோல் வளத்தவரென்று எண்ணாமல்
மண்ணின்மே லாசைபடைத் தும்மைக்கொல்லத் துணிந்தால்
சொல்லும் வாயேது நம்புமோதாயாதித் தம்பிமார்தன்னை
தம்பிமார் தும்பிச்சிநம்பிக்கை கொண்டல்லோ போனார்
அதுவு மல்லாமல் இராசதளமட்டுஞ் சொல்வார்
பண்பில் பகைவருடன் கூடப்பாத் திருந்தோமே" (472-477)

என்கிறான். இந்தத் தும்பிச்சி குலசேகரரின் பகைவன் என்பது முன்பே சுட்டப்பட்டது.(344)

## சாய்மலையூர்

இராசகுலனும், வீரபாண்டியனும் படைதிரட்டிக் கொண்டு தம்மைப் பிடிக்க வருவதை அறிந்த அழகன் பெருமாளும், தம்பியரும், தாம் அடைக்கலமாகத் தங்கியிருந்த துலுக்கன் குறிச்சியில் எதிரிட்டுப் பொருமாறு கோட்டைப் பாதுகாப்பு வசதிகள் இல்லாததால்,

சாய்மலையூர் சென்றதாகக் கதைப்பாடல் கூறுகின்றது. இந்தச் சாய் மலையில் கோட்டை அமைப்புகள் இருந்ததும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது.

துலுக்கன் குறிச்சியில் கோட்டைப் பாதுகாப்புகள் இல்லை என்பது கீழ்க் காணும் வரிகளால் தெளிவாகின்றது.

"உத்தெதிர்த்த மந்திரியுங் கொத்தவீர பாண்டியனும்
ஒட்டிப்பொரும் வேளையி லெதிரிட்டுப்பொரக் கோட்டையில்லை
மத்துமோ ருதவில்லை சேவுகர் நூற்றன்பதுபேர்" (575-577)

என்று அழகன் பெருமாள் கூறுவது துலுக்கன் குறிச்சியில் இருந்து கொண்டு கூறுவதாகும். இதனால் துலுக்கன் குறிச்சியில் கோட்டை அமைப்புகள் இல்லை என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

சாய்மலையில் கோட்டை இருந்தமை கீழ்க்காணும் வரிகளால் புலனாகின்றது.

"வல்லத்தானோ நமக்குச் சாய்மலையில் கோட்டை
மட்டித்தாரை நாழிகையில் தட்டித் தகர்த்திடலாம்" (603-604)

என்று சாய்மலைக் கோட்டை பற்றி இராசகுலன் ஏளனமாகக் கூறுவதும்,

"தெருநாலுஞ் சுத்தியந்தச் சாய்மலையூர்
நெடுங் கோட்டை வாசல் வந்தான்" (639-640)

என்று ஒற்றன் கடந்த, சாய்மலைக் கோட்டை பற்றியும் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. படையுடன் வந்த இராசகுலன், வீரபாண்டியனைத் தகுந்த இடத்திலிருந்து எதிர்க்கவே, அழகன் பெருமாள் சாய்மலைக் கோட்டை வந்து அடைக்கலம் ஆகின்றான். இறுதியில் கோட்டை உதவியின்றித் தந்திரத்தினால் இராசகுலன், வீரபாண்டியனை விரட்டி யடித்தாகக் கதை அமைந்துள்ளது.

அடைக்கலமாக வந்த அழகன் பெருமாள், தம்பியர், தேவியர், படைகளைச் சாய்மலைக் குடியானவர் அன்போடு பாதுகாத்ததையும் கதைப்பாடல் விவரிக்கின்றது.

"பரிவான தேவிமாரும் பரிகலமு மொதிக்கி
வடிவழக னுடன்தம்பி சீவலவர் சொல்ல
மன்னவர்முன் சாய்மலையில் வந்தா ரழகனும்
மலையாமல் சாய்மலையில் குடியான பேர்கூடி
வரிசைதவ றாதபடி அரிசிஉலுப்பை கட்டி

கலையாலுயர் கந்தமிழழகன் பெருமாள் தன்னையும்
கண்டுதெண்ட னிட்டுநிற்க நன்றென மகிழ்ந்து சொல்வார்"
(584-590)

எனச் சாய்மலைக் குடியானவரின் ஆதரிப்பு விளக்கப்பட்டுள்ளது.

## ஒற்றர் அமைப்புகள்

அரசமைப்பில் முக்கிய இடம் பெறும் ஒற்றர்களின் பணி பற்றிய விவரங்கள் இக்கதைப்பாடலில் இடம் பெற்றுள்ளன. புலியூரில் இருந்து ஆண்டு வந்த அழகன் பெருமாளின் ஒற்றர்கள் தென்காசியில் இருந்ததையும், தென்காசியில் நடைபெறும் சதிவேலைகளை உடனுக் குடன் இவர்கள் அழகன் பெருமாளிடம் தெரிவித்து எச்சரிக்கை செய்தனர் என்பதையும் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

இராசகுலனும், வீரபாண்டியனும் ஒருவருக்கொருவர் சம்மதித்து அழகன் பெருமாள், சீவலமாறனுக்கு எதிராகச் சதி செய்ய நினைத் ததை அரசர் பெருமான் குலசேகரரே அறியாதிருந்த பொழுது, தென்காசியிலிருந்த அழகன் பெருமாளின் ஒற்றன் ஒருவன் அறிந்து, உடன் அழகன் பெருமாளுக்குச் செய்தி தெரிவிப்பதைக் கதைப்பாடல் சுட்டுகிறது. ஒற்று அறிபவர்களே ஓடிச் செய்தி கூறும் ஓட்டர்களாக (ஓடுபவர்கள்) (Runner) இருந்ததும் புலனாகின்றது.

"ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்" (குறள்:588)

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்கக் கிடைத்த செய்தியை அரசர்கள் மற்றோர் ஒற்று கொண்டு உறுதிப்படுத்திக் கொள்வதும் குறிக்கப்பட்டுள்ளது.

"சத்தியஞ் செய்திரு பேருங் கூடியே
சம்ம தித்துச் சதிக்கத் துணிந்ததை
உத்தியா லறிந்தோர் சொல்லக் கேட்டுமோர்
ஓட்ட னோடிப் புலியூரில் சொன்னான்
ஓட்ட னோடிப் புரியூரில் சொல்ல
உறுதி கேட்டா ரழகனுந் தம்பியும்
கேட்ட போது மனது கலங்கியே
கேடு சூழ்ந்துதென் றெண்ணி யிருந்தனர்" (367-374)

என அமைந்துள்ளது.

அழகன் பெருமாள் தம்பியரைப் பிடிக்கப் படைதிரட்டிக் கொண்டு வந்து வீரசிகாமணியில் இராசகுலன் பாளையமிறங்கியிருந் ததையும் ஒரு ஒற்றர் மூலம் அறிகின்றனர் தம்பியர் (559-562).

இதேபோன்று அழகன் பெருமாள், சீவலமாறனை இராசகுலன் இலங்கக் கட்டுக்குள் கொன்று புதைத்ததையும் ஓர் ஒட்டன் அறிந்து சாய்மலை நாட்டாரிடம் ஓடிச் சென்று உண்மை உரைத்ததையும் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. காற்றும் புகா இடத்துள்ளும் நுழைந்து யாரும் அறியாத இரகசியத்தை அறிந்து இந்த ஒற்றர்கள் உளவுச் செய்தியைக் கூறியது புலனாகின்றது.

"அறியார் குலசேகரப் பெருமாள்
அழகனையுந் தம்பியுங் கொடுபோய்
குறியாக குவாரிலங்கத்தி லடைத்தே
கொன்றதுவு மந்திரி புதைத்ததுவும்
புதைத்தன ரதை மறைத்தனர் போனார்
புதைத்ததையு மோரோட்ட னறிந்து
இதைச் சொல்லு வேனெனக் கடிந்தோடினான்" (2067-2073)

என உள்ளது.

பாளையமிறங்கியுள்ள படை முகத்தும் சென்று, துணிச்சலாக ஒற்றறிந்து, போரில் அரசருக்கு உதவி புரியும் பணியையும் இந்த ஒற்றர்கள் சிறப்பாக ஆற்றுகின்றவர்கள் என்பதைக் கதைப்பாடல் மூலம் அறிய இயலுகின்றது. இடத்துக்கும், சூழலுக்கும் ஏற்ப ஏற்ற உருவமாற்றம் செய்து கொள்ளும் சிறந்த ஒப்பனைக் கலை வல்லுநராகவும், கண்டாரையும், கேட்டோரையும் வயப்படுத்தும் நடிப் பாற்றல் மிக்கோராகவும் இவ்வொற்றர்கள் திகழ்ந்தமையையும் இக்கதைப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

இராசகுலனும், வீரபாண்டியனும் அழகன் பெருமாள், தம்பியரைப் பிடிக்கப் படைகொண்டு வந்து வீரசிகாமணியில் பாளையமிறங்கி இருக்கின்றனர். அப்போது வாவுபரி முப்பதும் படைச் சேவகர் நூற்றைம்பது பேரையும் மட்டுமே கொண்ட சிறிய படையை வைத்து வெல்ல வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்படுகிறார் அழகன் பெருமாள். அப்போது எதிரிப்படையின் அளவு, அரண் வசதிகள், உள்காவல், இராமுழிப்பு ஆகியவற்றை வேவு பார்த்து அறிந்து வர ஒரு ஒற்றனை அனுப்புகிறார். பெருவியாதியால் அவதிப் படுபவனைப் போன்று வேடமிட்டுச் சென்று அனைத்து நிலவரத்தையும் ஒற்றறிந்து, உள்ளாள் ஒருவனிடம் செய்திகூறி அனுப்புகிறான் அவ்வொற்றன். எதிரிப்படை அயர்ந்த உறக்கத்தில் அழ்ந்திருந்தபோது, அவர்களை ஓட ஓடத்துரத்தி அவர்கள் கொண்டு வந்த சேனைகளையும் ஆயுதங்களையும் கைப்பற்றி வெற்றி ஈட்டுகிறார் சீவலமாறன். முன்பே ஒற்றனின் ஒத்துழைப்புக்குத் தகுந்த நரிக் கொம்புப் பரிசும் அழகன் பெருமாளால் நல்கப்பட்டு விடுகின்றது. (607-1008)

புலியூரில் இருந்த அழகன் பெருமாளின் ஒற்றன் தென்காசியில் நடக்கும் செய்திகளை அழகன் பெருமாளுக்குத் தெரிவித்தது போலப் புலியூரில் நடக்கும் செய்திகளை அறிந்து சொல்லக் குலசேகரரின் ஒற்றர்கள் புலியூரில் இருந்ததும் தெரிகின்றது. இராசகுலனும், வீரபாண்டியனும் அழகன் பெருமாளுக்கு எதிராகச் சதி செய்ய நினைத்ததை அறிந்த அழகன் பெருமாள் தப்ப எண்ணித் துலுக்கன் குறிச்சியில் அடைக்கலமாகின்றார். புலியூரை விட்டு, குலசேகரருக்கு எதிரானவர்களான துலுக்கன் குறிச்சியாரை அழகன் பெருமாள் சென்றடைந்தது உண்மையா என்பதை ஒற்றறிந்தே இராசகுலன் உறுதிப்படுத்திக் கொண்டமை கதைப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

> "இருந்தா ரழகன் பெருமாளுடன் தம்பிமாரும்
> இந்தராத்திரி போனார் துலுக்கன்குறிச்சி விடிய
> பொருந்தாதவர் போனகாரியஞ் சும்மா போமோ
> என்றுபூதலத்தோர் சொல்லிக்கொள்வதை மந்திரி கேட்டான்
> கேட்டான் ராசகுலதேவன் போனது மெய்யோ
> என்றுகேட்டு நின்றாரை விசாரியுங்கோவென்று சொன்னான்
> ஒட்டன் விசாரித்துவந்து மெய்தானென்று சொல்ல" (453-459)

என அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. கதைப்பாடல்களில் ஒற்றன் என்பதே பேச்சு வழக்கில் ஒட்டன் எனக் குறிக்கப்படுகிறது என்று ஐவர் ராசாக்கள் கதைப்பதிப்பின் அடிக்குறிப்பில் (அடிக்குறிப்பு எண் 412) நா. வானமாமலை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். சுவடியில் 'ஓ' என்பதும் 'ஒ' என்றுதான் எழுதப்பெறும். எனவே ஓட்டன் என்பதை ஒட்டன் என்றே நா. வானமாமலை அவர்கள் கொண்டு ஒற்றன் என்பதே பேச்சு வழக்கில் ஒட்டன் ஆகியுள்ளது எனக் கருத்துத் தெரிவித்திருக்கலாம்.

## படை, பரிவார அமைப்புகள்

நாட்டையாண்ட குலசேகரப் பெருமாளின் படை, பரிவாரப் பெருக்க நிலைகளும், இவரது பொறுப்பின் கீழ்ப் புலியூரிலிருந்து ஆட்சி செய்து வந்த அழகன் பெருமாளின் படை, பரிவாரச் சுருக்க நிலைகளையும் கதைப்பாடல் தெளிவாக வேறு பிரித்துக் காட்டுகின்றது.

அழகன் பெருமாளையும், தம்பியரையும் பிடித்து வரப் புறப்பட்ட குலசேகரரின் படையின் தன்மை கீழ்க்காணுமாறு விவரிக்கப் பட்டுள்ளது. "இணங்கி எங்களுடன் வந்தால் அழைத்து வருகிறோம். இல்லை எனில் கட்டியும் வெட்டியும் கைப்பிடியாய்க் கொண்டு வருகிறோம்" என்று கூறும் மந்திரி இராசகுலன் மதயானைகள் ஐம்பதும், குதிரைகள் மூவாயிரமும், மற்றும் காலாட்படைகளையும்

அனுப்புமாறு குலசேகரரிடம் கோருகின்றான். (491-492) இணங்கி வரவில்லையெனில் அவர்களிடமுள்ள குதிரைகள் முப்பதுடன் அந்த வேந்தரையும் கைப்பிடியாய் இங்கு கொண்டு வருகிறோம் (494-495) என்கிறான். அழகன் பெருமாளிடம் இருந்தவை முப்பது குதிரைகளும் நூற்றைம்பது காலாட்படையும் மட்டுமே என்பது பின்னும் சில இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"மத்துமோ ருதவியில்லை சேவுகர் நூற்றைம்பது பேர்
வந்துபரி முப்பதுதான் தந்திரமாய் வெல்லவேணும்" (577-578)

என்ற அழகன் பெருமாள் கூற்றும்,

"வாவுபரி முப்பது சேவுகர்நூத் தன்பதுபெயர்
வந்துநம்மோ டெதிர்த்திடிலென் வல்லமையைப் பாரும்"
(601-602)

என்ற இராசகுலன் கூற்றும் இதனை வலுப்படுத்துகின்றன.

குலசேகரரின் படையுடன் அவருக்கு ஆதரவாக இருந்தவர்களும் (503-513) உடன்சென்றது குலசேகரரின் ஆதரவாளர்கள் என்ற தலைப்பில் முன்னரே குறிப்பிடப்பட்டது.

இராசகுலன், வீரபாண்டியன் கொண்டு சென்ற படையை முறியடித்து வெற்றி முழக்கோடு திரும்பிய சீவலவர் படையில் சீனரோடு, கர்நாடர், ஈழர், மருடர், கேகயர், அந்தியர் ஆகியோர் இருந்ததாக உள்ளது (981) பல நாட்டாரும் படையில் சேர்ந்து பணியாற்றியதை இது உணர்த்துகிறது எனலாம்.

### படையினர் கொண்டு சென்ற ஆயுத வரிசைகள்

படைகள் கொண்டு சென்ற ஆயுதங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. போர்க்களத்தில் பயன்படுத்தப்பட்ட ஆயுதங்களின் பட்டியலை இக்கதைப்பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

"ஒக்க வாக்கிய வில்லுங் குழலுங்கை
உண்டையும் வெடியும் படை வாணமும்
சக்கரமுங் கைவாளும் பரிசையும்
தண்டும் வேலுங் கைக்குந்தமு மீட்டியும்
ஈட்டியும் வில்லும் பூட்டு கட்டாரியும்
ஏந்து வல்லயக் காரரு முன்செல்ல" (535-540)

வில், குழல், கை உண்டை, வெடி, வாணம், சக்கரம், வாள், பரிசை, தண்டு, வேல், குந்தம், ஈட்டி, வில், கட்டாரி என்ற ஆயுதங்கள் போரின்போது பயன்படுத்தப்பட்டமை தெரிகின்றது.

"துப்பாக்கிக் குழலெடுப்பார் கையில் திரிபிடிப்பார்
தூரநின் றதட்டிக் குத்தும் நேரிசங் கையெடுப்பார்
எடுப்பார் கைவில்லு மம்புஞ் சக்கரமு.......லும்
ஈட்டிய கைக்குந்தமுமுன் னீட்டிய கை(வா)ளும்" (868-871)

சீவலவர் படையினர் வைத்திருந்தமை தெரிகின்றது. பட்டையம், கிரிசு, பூட்டுப்பத்திரம் என்ற ஆயுத வகைகளும் வழக்கிலிருந்தன. (966-967)

## படை முகத்து ஒலித்த இசைக்கருவிகள்

படைகள் இசைக்கருவிகள் முழங்கச் சென்றமையையும் கதைப் பாடல் விவரிக்கின்றது. இந்த இசைக்கருவிகளின் முழக்கம் படைவீரர்களுக்கு வீர எழுச்சி ஊட்டவும், படை வருவதை எதிரிப்படையினருக்கு அறிவிக்கவும், அவர்களை அச்சுறுத்தவும் பயன்படுத்தப்பட்டது எனக் கருதலாம். தமிழரின் இசைக்கலை நுணுக்கத்தையும், மேன்மையையும் உச்சத்தையும் பறை சாற்றுவதாக இந்த இசைக்கருவிகளின் பட்டியல் கதைப்பாடலில் குறிக்கப் பட்டுள்ளது எனலாம்.

தம்பட்டம், டம்மானம், டமிக்கி மேளம், கிடிபிடி, திண்டிமம், படகம், துடி, மல்லாரி, பேரி, தடாரி, முரசு, தவில்சின்னம், வீரணம், தொண்டகம், திமிரி, பம்பை ஆகிய பதினெட்டு வகையான இசைக்கருவிகள் முழங்கப் படை திரண்டு வந்த காட்சி விவரிக்கப் பட்டுள்ளது. (521-527) இந்த இசைக்கருவிகள் இடியேறென முழங்கியதாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. இவை அனைத்தும் தோற்கருவி வகையைச் சேர்ந்தவை. அடித்து முழக்கப்படும் வகையின. நெடுந் தொலைவுக்குக் கேட்கும் அளவு ஒலி எழுப்ப வல்லன.

இந்தத் தோற்கருவிகளின் முழக்கத்தோடு ஊது கருவிகளும் ஒலிக்கப்பட்டன என்று கூறப்பட்டுள்ளது.

"முழங்கும் பூரிகை நாககுரஞ் சங்கு
முடுகு சின்னம் நவுரி கொம்பெக்காளம்
உளம்புங் கார்கட லார்த்தெழுந்தாப் போலே
ஊதும் வாச்சிய மொக்க முழங்கவே" (531-534)

எனக் கடலலை ஆர்த்தெழுந்தாற் போன்று இசைக்கருவிகள் முழங்கப் படை சென்றதாகக் காட்டப்பட்டுள்ளது. இசைக்கருவிகளை ஒலிப்பவர்கள் படையுடன் கூடவே சென்ற வழக்கம் கடைபிடிக்கப் பட்டமை இதன் மூலம் உறுதிப்படுகின்றது.

போர் முகத்து வெற்றி பெற்றவுடன் மீளும் சீவலவர், இசைக்கருவிகள் முழங்க ஊர் திரும்பியதைக் கதைப்பாடல் கீழ்க்காணுமாறு விவரிக்கின்றது.

"ஆனைமேலி டம்மானம் வானிடியேறு போலே முழங்கவே
அதிரு மத்தளமுரசு கொக்கரிதிமிரி பம்பை முழங்கவே
கானவீணை மல்லாரிபேரி தடாரி பேரிகை சங்கநீள்
கனகதப்பொடு நவுரிசல்லரி துடி முரடொலி பம்பையே" (977-980)

என உள்ளது.

## பாளையமிறங்கியிருந்த இடத்துக் காட்சிகள்

எதிரிகளை முறியடிக்கச் செல்லும் படை, கடந்து செல்லும் வழியில் பாசறை அமைத்துத் தங்குதலும் போர் நடைபெறும் இடத்துக்கருகில் போர் முடிவுறும் வரையில் தங்குவதும் சங்க இலக்கியத்திலேயே காணக்கூடிய காட்சிகளாகும். முல்லைப் பாட்டு, நெடுநல்வாடை ஆகியன இத்தகு காட்சிகளை விரிவாகப் பேசுகின்றன.

அழகன் பெருமாளைப் பிடிக்கச் செல்லும் குலசேகரரின் படை, துலுக்கன் குறிச்சியில் அழகன் பெருமாள் அடைக்கலம் புகுந்திருப்பதை அறிந்து வீர சிகாமணிக் கோட்டையில் பாளையமிறங்கி இருக்கின்றனர். பாசறைக் காட்சிகள் முல்லைப்பாட்டில் விவரிக்கப்பட்டிருப்பது போன்று, இக்கதைப் பாடலிலும் தங்கியுள்ள இடத்தில் படையினர் செய்த செயல்கள் விளக்கப்பட்டுள்ளமை, நடந்த காட்சிகளைக் கண் முன் படைத்துக் காட்டுவனவாக உள்ளன. (712-735)

"மற்போர் செய்வார் குதிப்பார் - சிலர்
மல்லுக் கெமக்கெதி ரில்லை யென்பார்" (712-713)

"உண்டை தெறிப்பார் நிதான மென்பார்" (733)

என்றும் உள்ள வரிகள் போர்ப்பயிற்சி, ஆயுதப் பயிற்சிகளைப் பாளையமிறங்கி இருக்கும் இடத்திலும் விடாமல் வீரர்கள் மேற் கொண்டிருந்தனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

அடிப் பாய்ந்திடுங் குதிரை - குளுப்
பாட்டிடுவார் தண்ணீர் காட்டிடுவார்
இடிபோல் முழங்கி நிற்கும் - மதை
யானையை விட்டுத் தண்ணீர் காட்டிடுவார்" (726-729)

என்றும் உள்ள காட்சிகள், தம்முடன் வந்த குதிரைப்படை, யானைப் படைகளைச் செம்மையாக அவ்வீரர்கள் கவனித்துக் கொண்டமையை வெளிப்படுத்துகின்றன.

அன்றாடத் தேவைகளை அவ்வீரர்கள் அவர்களே நிறை வேற்றிக் கொண்டமையை,

"போவார் விறகெடுப்பார் - கூடிப்
பொங்கி யுண்பார்
தீபாவளி வந்தது போல் - எண்ணை
தேய்த்துக் கொள்வார் வெந்நீர் வார்த்துக்கொள்வார்
கொள்வா ரரிசி கறி - சிலர்
கூடி நிற்பார்" (718-723)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

பொழுது போக்குகளையும் மேற்கொண்டு தங்கள் அயர்வைப் போக்கி, புத்துணர்ச்சியும் புத்தெழுச்சியும் பெற்றனர் என்பதை,

"ஈட்டியும் பட்டையமுங் குழலும்
வல்லைய முங்கிடக்க - தங்கள்
வங்கணக் காரரு மாய்ப்போவார்" (715-717)

"இல்லாத சூதாடுவார்" (714)

"கவி பாடி நிற்பார்" (723)

"நின்று கிளியாந்தட்டு மறிப்பார்" (731)

"தானா வெனப் படிப்பார் - பெண்கள்
தம்மோ டிருந்து விளையாடுவார்"

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன.

கிராமப்புறங்களில் இன்றும் ஒரு விளையாட்டாகக் 'கிளியாந்தட்டு' சிறார்களால் ஆடப்படுகின்றது. இவ்விளையாட்டின் காலப்பழமை இதனால் புலப்படுகின்றது.

பெண்களும் படை பரிவாரங்களுடன் வந்து உடன் தங்கியிருந்தமையும் இதனால் தெரிகின்றது.

பாசறையில் பெண்களும் உடன் இருந்ததை,

"எண்ணைக்குடம் போலிருந்த பெண்ணைப்போட்
டோடுவாரும்" (900)

என்ற போர்க்களக்காட்சி வரி புலப்படுத்துகின்றது.

**கூலிப்படை மல்லர்கள்**

படையில் சேர்ந்து நேரடியாக எதிரிப்படையுடன் போர் தொடுத்து வெற்றி ஈட்டப் போராடும் வீரர்கள் இருந்த அதே கால கட்டத்தில், பணம் பெற்றுக் கொண்டு கபடத்தனமாக ஆட்களைக் கொலை செய்யும் இன்றைய கூலிப்படையினர் போன்ற அமைப்புகள் இக்கதை நிகழ்ச்சிகள் நடைபெற்ற அந்தக்கால கட்டத்திலும் இருந்தனர் என்பது இக்கதைப் பாடலால் தெளிவாகின்றது.

அழகன் பெருமாளையும், சீவலமாறனையும் இலங்கக் கட்டுக்குள் அடைத்து வைத்து ஆயுதங்கள் இன்றி அவர்கள் இருக்கும் அந்த நிலையில், அவர்களைக் கொன்று விடவேண்டும் என்று திட்டம் தீட்டிய இராசகுலன், வீரபாண்டியன் ஆகியோர் அறுபது மல்லர்களைப் பயன்படுத்தித் தம் திட்டத்தைச் செயல்படுத்தியமையைக் கதைப்பாடல் தெரிவிக்கின்றது.

"காட்டானைக்குக் கொப்பம் வெட்டினாப் போலே ஒருஇலங்கம்
கட்டினா ரிருட்டறை வீடொன்று கட்டினா ரதற்குள்ளே
உள்ளாகிய மல்லர் அறுபது பேரையு மழைத்தே
அவர்க்கூ ரும்பிளிக்கை பொன்னும் ரோகத்தினி லளித்தே
வின்ளாதையு மெனவே உண்மை பகர்ந்து விருந்திட்டார்
விட்டா ரிருட்டறையிலவர் கட்டாகவே யிருக்க
இருக்குமிடம் தெரியா தொருத்தருக்கு மெனயிருத்தி" (1541-1546)

என அமைந்துள்ளது. தந்திரமாக அழகன்பெருமாளும், சீவலமாறனும் அறையினுள் அடைக்கப்பட்டபின் இருட்டறையினின்று வெளிப்பட்ட அறுபது மல்லர்களும் பாய்ந்து அவர்களைக் கொல்லப் போராடியதையும், மடிந்ததையும் கதைப்பாடல் விளக்குகின்றது (1837-1900).

இந்த மல்லர்கள் மடிந்தாலும் இவர்கள் பரம்பரை வாழும் படியாக ஒவ்வொருவருக்கும் ஊர்களையும் உரிமையாக்கியிருந்தமையைக் கதைப்பாடல் சுட்டுகின்றது. இதனால் மல்லர்கள் தம் உயிரைப் பற்றிய எக்கவலையுமின்றிக் களத்திலிறங்கி மற்போரிட்டு மடிகின்றனர்.

"நில்லடா மல்லரே நாயெனை வெட்டியா ளும்மை - இன்று
நிட்டூர மாகவே விட்டவனார் சொல்வீர்
வெல்லவே சொல்லி விருந்திட்டுச் சந்தனம் பூசி - ஊரும்
விட்டும்மைக் கொல்லவே விட்டவன் மந்திரி யென்றான்" (1811-1814)

என்ற வரிகளில் மல்லர்கள் ஊர்களைக் கூலியாகப் பெற்றமை குறிக்கப்பட்டுள்ளது.

## உயிர்க் காப்பாளர்கள்

அரசன் உயிர் நீத்தால் அவனுடனேயே அவன் தேவிமார்கள் உடன்கட்டையேறல் அக்காலக்கட்டச் சமுதாய வழக்கமாயிருந்தது. ஆனால் ஒட்டக்காரர்களும், ஒற்றர்களும், கட்டியக்காரர்களும் கூட, உடன் உயிர் துறந்ததைக் கதைப்பாடல்கள் தெரிவிக்கின்றன. அரவமுத்து வீரன் கதை,[18] சிதம்பர நாடார் கதைகளில்[19] இத்தகு காட்சிகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. தம்முயிர் கொண்டுத் தம் தலைவனுயிர் தேடல்போன்று தலைவனுடனேயே உயிர் நீத்த இவர்கள் மெய்க்காப்பாளர்கள் போன்றும் செயல்பட்டிருக்கக் கூடும்.

அழகன் பெருமாளும், சீவலமாறனும் உயிர் நீத்ததை அறிந்த ஒட்டக்காரன், கட்டியக்காரனும் உடன் இறந்ததை இக்கதைப்பாடல் தெரிவிக்கின்றது.

"ஒன்றி யகலநின்ற ஒட்டக் காரன்
ஊட்டி தெறிக்கவே பாய்ந்திறந்தான்
இறையும் பிறையுங் கட்டியக்காரன்
ஏற்றும் சமுதாட்டில் பாய்ந்திறந்தான்
முறையா யிறந்தார்க ளெல்லாரும்
மூற்ற அழகனார் தம்முடனே" (2448-2453)

என உள்ளது.

## வீரமே வினையானது

வீரத்தின் விளைபொருட்களாக நாட்டைக் காக்கும் மன்னர்கள் திகழவேண்டிய தேவை இருந்தது. இந்த வீரமே இவர்களைக் காக்கும் படைக் கருவியாக அமைந்திருந்தது. ஆனால் இதுவே சிலபோழ்து, இவர்களைக் கொல்லும் கொலைக் கருவியாகவும் மாறியிருக்கிறது. அழகன் பெருமாள், சீவல மாறன் பெற்றிருந்த தன்னேரிலாத வீரப்பண்பே அவர்களை ஒழித்துக் கட்டவேண்டும் என்ற எண்ணத்தை எதிரிகளுக்குத் தூண்டியிருக்கின்றது.

தன் சிறிய தந்தை பிள்ளைகளான அழகன் பெருமாள், சீவலமாறனை அரசாளத் தகுதி படைத்தவர்களாக ஆக்குவதற்கான அனைத்துப் பயிற்சிகளையும் அளித்து வளர்த்தார் குலசேகரப் பெருமாள். சிலம்பப் போரைப் பணிக்கர் சொன்னவாறு கற்றனர்.

---

18 சின்னணைஞ்சான் கதை & அரவமுத்துவீரன் கதை, பதிப்பாசிரியர், சூ. நிர்மலாதேவி, 1998.

19 பதிப்பாசிரியர், சு. தங்கதுரை, 1982.

'ஆயுதங்களைக் கையாள்வதில் யார் இவர்களுக்கு நிகர்?' என்னுமாறு சிறப்பாகத் தேர்ச்சி பெற்றனர். 'மல்லுக்கும், வில்லுக்கும் வல்லவர்கள்' எனத் திகழ்ந்தனர். குதிரையேற்றம், யானையேற்றத்தையும் முறைப்படி கற்றனர். இவர்களின் வீரத்தையும், வல்லமையையும் கண்டு குலசேகரர் உளம் மகிழ்ந்து, உத்த புயத்தோடு அணைத்துத் தழுவி மகிழ்கிறார். பக்கத்தில் வைத்துக்குளிர்ந்த மொழி பேசி மகிழ்கிறார். கத்தத் துரோகி ராசகுல தேவனோ இதனைக் கண்டு பொறாமற் தலைகவிழ்கிறான்.

அழகனுந் தம்பியும் இளமுறைக் கூறு கேட்பதைக் குலசேகரரிடம் கூறிய இராசகுலன், தம்பியரும் 'சிறுபிள்ளைகளல்லவே கொடுத்து விடலாம்' என்று குலசேகரர் கூறியதும் தடுப்பதற்கு ஆன முயற்சிகள் அனைத்தையும் செய்கின்றான். குலசேகரர் எதிர் வருவதை எல்லாம் எடுத்துரைத்து இளமுறைக் கூறு தந்து விடவேண்டும் என்று முடிவாகக் கூறியதும், இராசகுலன், வீரபாண்டியன் ஆகிய இருவரும் தனித்துக் கூடிப்பேசிச் சதிசெய்து அன்னாரைத் தீர்த்துக் கட்ட உறுதி செய்து கொள்கின்றனர். தம்முடைய மிகுவீரத்தால் எப்படியும் இளமுறைக் கூறை அழகன் பெருமாளும், தம்பியும் பெற்றுவிடுவர். அத்துடன் நில்லாமல் தென்காசிச் சீமையையும் வசப்படுத்தி, நம்மையும் துரத்தி விடுவர் என உறுதியாக நம்புகின்றனர் இராசகுலனும் வீரபாண்டியனும். தேசமிழந்து, உயிரையும் இழந்து விடுவோம் என்ற அச்சவுணர்வே, வீரத்துடன் வீரமாக மோதிப் பார்க்க இயலாமல் சதி செய்யத் தூண்டுகின்றது. அழகன் பெருமாள், சீவலமாறனின் மிகு வீரமே சரிநிகர் சமமாக நின்று களத்தில் நின்று பொருதிப் பார்த்து வெற்றிக் கனியை ஈட்ட இயலாமல் தனியறைக்குள் அடைத்து வைத்துக் கொல்லத் தூண்டுகின்றது.

"நேச மான அழகனுந் தம்பியும்
நிச்செய மிளமுறைக் கூறு கட்டுவார்
கட்டுவார் பின்னைத் தென்காசிச் சீமையும்
கட்டி நம்மையும் வெட்டித் துரத்துவார்
தட்ட வேணு மிவரைச் சமயத்தில்
சதிக்க வேணு மெனக்கது சம்மதம் (357-362)

என முடிவெடுக்க வைக்கிறது.

பின்னும் அன்னாரின் வீரத்தின் மகத்துவத்தை மூன்று நிகழ்ச்சிகளின் மூலம் தெளிவாக அறிந்து கொள்கின்றனர் இராசகுலனும், வீரபாண்டியனும். அதன் பின்னரே வீரத்தால் அவர்களை வெல்ல இயலாது. சூழ்ச்சியால்தான் கொல்லவேண்டும் என்று துணிந்து முடிவெடுக்கின்றனர்.

வீரசிகாமணியில் படைகொண்டு சென்று தங்கியிருந்தபொழுது, அயர்ந்த நித்திரையில் கோட்டையுள் புகுந்து படைகளை வெட்டிக் கொன்று ஆயுதங்களையும், குதிரைகளையும், யானைகளையும் திரட்டிக் கொண்டு சென்று விட்ட சீவலமாறனின் துணிச்சலையும், வீரத்தையும் கண்டு திகைத்து மறுகுகின்றனர் இராசகுலனும் வீரபாண்டியனும் (850-876). சீவலமாறனின் வீரத்தின் சிறப்பை அன்னார் அறிந்த முதல் நிகழ்ச்சி இது.

அடுத்ததாக 'நம்பிரான்' என்ற அழகன் பெருமாளின் குதிரையைக் கொண்டு வராமல், அடங்காத பேய்க்குதிரையான சன்னனைக் கொண்டு வந்து நிற்கவைத்து அழகன் பெருமாளின் வீரத்தைச் சோதித்து அளவிட முனைகிறான் இராசகுலன். இந்நிகழ்ச்சி குலசேகரரின் கண்முன் தென்காசியிலேயே பல மன்னர்கள் கூடிய அரங்கத்தில் அரங்கேறுகின்றது. குலசேகரரின் மறுப்பையும், பதற்றத்தையும் தணிவித்த அழகன் பெருமாள், தன் வீரத்துக்கொரு சவாலான பேய்க்குதிரை அடக்கலை வெற்றிகரமாக நடத்தித் தன் தன்னேரிலா வீரத்தை நிரூபித்து விடுகிறார் (1199-1305). பேய்க்குதிரை அழகன் பெருமாளைக் கொல்லும் அல்லது அதனை அடக்க இயலாமல் போய் அவமானப்பட்டு அழகன் பெருமாள் உயிர் துறப்பார் என்று நம்பிக்கை கொண்டே இராசகுலன் இத்தகு செயலைச் செய்தான். அவன் எண்ணம் தோல்வி காணுகின்றது.

மூன்றாவதாக, வாழைமரத்துக்குள் யாரும் அறியாவண்ணம், வெளியில் புலப்படாதவாறு இரும்புக் கம்பியைச் செருகி வைத்து அவ்வாழையை வெட்டும் வீர விளையாட்டில் அழகன் பெருமாள், சீவலமாறனை ஈடுபடுத்துகிறான் இராசகுலன். தம் வீரத்துக்கு இழுக்கு ஏற்பட்டால் உயிரை விட்டு விடுவார்கள் என்று அறிந்தே, உயிரை விடட்டும் என்றே இதில் ஈடுபடுத்துகின்றனர். இதிலும் இராசகுலனால் இரும்புக் கம்பி செருகப்பட்டதை அறிந்தே, சீவலமாறன் ஒரே வீச்சில் அவ்வாழையை வெட்டிச் சாய்க்கும் வீரசாகசத்தை நிகழ்த்துகிறான். இவர்களின் புயபல பராக்கிரமம் எத்தகையது என்பதைத் தீர்க்கமாக அறிந்து கொள்கின்றனர் இராசகுலனும், வீரபாண்டியனும்; சதிசெய்து கொல்ல முடிவெடுக்கின்றனர். அழகன் பெருமாளும், சீவலமாறனும் பெற்றிருந்த அதி வீரமே அவர்களுக்கு வினையாக மாறுகின்றது.

## ஆட்சிப் பரப்பு

தென்காசி, புலியூரிலிருந்து ஆட்சி செலுத்தி வந்த தென்காசிப் பாண்டியர்களான குலசேகரப் பெருமாள், அழகன் பெருமாள், சீவல மாறன் ஆகியோர்களின் ஆட்சிப்பரப்பு கதைப்பாடல் வழி தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'இளமுறைக் கூறு பகிர்ந்தளிக்கக்

கூறினார் குலசேகரர்' என்று கூறிய மந்திரி இராசகுலதேவன் ஊர்ப்பெயர்களை விவரிக்கின்றான். எந்தெந்த ஊர்களெல்லாம் அழகன் பெருமாளுக்கு, எவையெவை குலசேகரர்க்குரியவை என விளக்குகிறான். இராசகுலனின் விளக்கத்தைக் கேட்டபோது சீவலமாறனும் எவையெவை பொது, எவையெவை தங்களுக்குரியவை என்றும் விவரிக்கின்றார். இவர் கூற்றின் மூலமும் குலசேகரரின் ஆட்சிப் பரப்பின் எல்லையை அறியமுடிகின்றது.

1. தென்காசி, 2. கருவைநல்லூர், 3. வலையம்பட்டி, 4. பனையூர், 5. வன்னியனார்பட்டி, 6. புலியூர், 7. பெரும்பற்று, 8. வாதவநல்லூர், 9. சேற்றூர், 10. சென்னல்விளை, 11. செண்டன் குளம், 12. ஆனைக்குளம், 13. நரிக்குடி, 14. வில்லிப்புத்தூர், 15. இளவேந்தல், 16. சிப்பிப்பாறை, 17. வேம்பத்தூர், 18. வேம்பல்காடு, 19. வீரை, 20. கரிசல்குளம், 21. மணலூர், 22. வீரசிகாமணி, 23. நீலிய நல்லூர், 24. தென்மலை 25. சாய்மலை 26. ஏழாயிரம் பண்ணை 27. சாயலூர் 28. ஓடைப்பெட்டி 29. சாத்தூர் 30. உறையூர் 31. கொல்லன்பட்டி 32. வடமேற்குக் கயத்தாறு 33. கரிசல்காடு 34. இலத்தூர் 35. இலஞ்சி 36. பாவூர் 37. புலியூர் 38. திருக்குத்தாலம் 39. பனைப்புளி 40. மேலகரம் 41. சாம்பவடகரை 42. புளியறை 43. செங்கோட்டை 44. ஆரியநல்லூர் 45. ஆரியங்காவு 46. சாய்மலை 47. துலுக்கன் குறிச்சி 48. குண்டத்தூர் 49. சாத்தனேரி, தொடங்கிய தென்பகுதிகள் 50. பாடி 51. திருத்தங்கல் 52. செயங் கொண்ட நல்லூர் 53. உடன்தேவன் குறிச்சி 54. காமையக்கம்பட்டி 55. கடையநல்லூர் 56. ஓமநல்லூர் 57. பள்ளி கொண்டான் 58. சேத்தூர் 59. மாத்தூர் 60. திருப்பரங்குன்றம் 61. மதுரை ஆகிய 61 ஊர்கள் உள்ளிட்ட பகுதிகளை இந்தத் தென்காசிப் பாண்டிய வம்சாவழியினர் ஆண்டமை தெரிகின்றது (1699-1738). சுருக்கமாகக் கூறினால் தென்காசி தொடங்கி மதுரை வரை இவர்கள் ஆட்சி பரவியிருந்தது எனக் குறிப்பிடலாம்.

## கதைப்பாடல் குறிப்பிடும் பிற ஊர்கள் விவரம்

இக்கதைப்பாடலில் சுமார் 73 ஊர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. கதைப்பாடல் நிகழ்ச்சிகளின் பின்னலாகவும், இன்னாருக்கு இன்னின்ன ஊர்கள் என்று வகை பிரித்தலாகவும் என்ற இரு முறைகளில் ஊர்ப்பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

இராசகுலனும், வீரபாண்டியனும் வீரசிகாமணிக் கோட்டை நோக்கிப் படை கொண்டு சென்றபொழுது, படை கடந்த இடங்களாகச் சில ஊர்ப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இவை தென்காசியிலிருந்து

படை புறப்பட்டதால் தென்காசி - வீரசிகாமணிக்கு இடைப்பட்டதாக இந்த ஊர்கள் அமைந்திருக்கின்றன. அவையாவன:

ஆட்டுத்திட்டை, களங்காடு, கரிசக்குளம், கடையம், வஞ்சியூர், மாத்தூர், செம்பொனேரி, கலிங்கன், ஈச்சங்காடு, கரிசல், வில்குறிச்சி, ஆரல், கிணறு (நாலுமூலைக் கிணறு?) சங்கரனார் கோவில் ஆகிய 14 ஊர்ப்பெயர்கள் குறிக்கப்பெற்றுள்ளன. (541-553)

வீரசிகாமணிக் கோட்டையில் உளவு பார்க்கச் சென்ற ஒற்றன் கடந்த இடங்களாகச் சில இடப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன. (646-655) நீலியனூர், சிங்கக்கரந்தை, ஈச்சங்காடு, காளிங்கனோடை, சங்கரனார் கோயில், கருவை நல்லூர் ஆகிய 6 ஊர்கள் ஒற்றன் புறப்பட்டு வந்த சாய்மலைக்கும் வீரசிகாமணிக்குக் கோட்டைக்கும் இடையில் இருப்பதாகக் காட்டப்பட்டுள்ளன.

## பாத்திரப் படைப்புகள்

வரலாற்றுக் கதைப் பாடலாக இருப்பினும் இதில் இடம் பெறும் முக்கியப் பாத்திரப் படைப்புகளின் பண்புகள் சிறப்பாக வெளிப்படுமாறு கதைப்பாடலாசிரியர் பாடலை அமைத்துள்ள திறம் வியந்து போற்றற்குரியதாகும்.

## குலசேகரப் பெருமாள்

தென்காசி மன்னவனான குலசேகரப் பெருமாளுக்குப் பொன்னின் பெருமாள், தன்மப் பெருமாள் என்ற இரு புதல்வர்கள் இருக்கின்றனர். மூத்தவரான பொன்னின் பெருமாளுக்குத் தன்மனும், வீமனும் போன்று குலசேகரப் பெருமாள், வீரபாண்டியன் என்ற இரு புதல்வர்கள். இவர்கள் தென்காசியில் இருக்கின்றனர். இளையவரான தன்மப் பெருமாளுக்கு இராம இலட்சுமிணர் போன்று அழகன் பெருமாள், சீவலமாறன், சின்னத்தம்பி என்ற மூன்று புதல்வர்கள். இவர்கள் புலியூரில் இருக்கின்றனர். தாத்தாவான குலசேகரர் மூப்படைந்து இருக்கிறார். இந்தத் தாத்தாவின் பெயரே மூத்த புதல்வன் மகனான குலசேகரருக்குச் சூட்டப்பட்டிருக்கிறது. தாத்தாவின் பெயரை உடைய பெயரனாக (பேரன்) இவர் திகழ்ந்திருக் கின்றார். சிறிய தந்தை புதல்வர்களான அழகன் பெருமாளையும், தம்பியரையும் குலசேகரப் பெருமாள் "இராமஇலட்சுமிணரைப் போலிருக்கும் இளையோர்களைத் துணையாய் யான் வளப்பன்" என்று கூறித் தானே வளர்ப்பதாகக் கதை கூறுகின்றது. 'கல்வி, ஆயுதம், போர்ப்பயிற்சிகள் அனைத்தையும் தம்பியருக்கு அளித்து ஆளாக்கினார்' என்று அமைவதால் தன்மப் பெருமாளின் மரணத்தின் பின் இது

நிகழ்ந்திருக்கக் கூடும். ஏனெனில் கதையில் இந்த வளர்ப்பு நிகழ்ச்சிகளின் போது, தன்மப்பெருமாளின் பங்கு எதுவும் காட்டப்படாததை ஒரு காரணமாகக் கொள்ளலாம்.

தம்பியர் மிகச் சிறியவர்களாக இருந்ததால் தந்தையின் அரவணைப்பும் இல்லாமல் நின்ற இவர்களை மூத்தவரான குலசேகரர் பொறுப்புடன் எடுத்து வளர்த்தார் என்பது மற்றொரு காரணமாகவும் அமைந்து, குலசேகரர் ஏன் வளர்த்தார் என்ற வினாவுக்கு விடைகளாக அமைந்துள்ளன எனலாம். உடன் பிறவாவிடினும் பெற்றதாய், தந்தை போன்ற பாசத்துடன், மிக்க அன்போடும் ஆதரவோடும் தான் குலசேகரர் நடந்துகொண்டார் என்பதைக் கதை நெடுகிலும் பல நிகழ்ச்சிகள் மூலமாகக் காண முடிகின்றது.

அனைத்துப் பயிற்சிகளும் தம்பிமாருக்கு அளித்துத் தன் கண்போன்று அன்னாரை வளர்த்தமை கதைப்பாடல் ஆசிரியர் கூற்றாகவே சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.[20]

'இரு கண்ணின் மணிபோன்று வளர்த்தீரே தம்பியரை' என்று இக்கதைப்பாடலின் எதிர்த்தலைவனான இராசகுலனால் உரைக்கப்பட்டுள்ளது.

தன் உடன்பிறந்த தம்பி வீரபாண்டியன், உடன்பிறவாத சிற்றப்பன் பிள்ளைகள் அழகன் பெருமாள், சீவலமாறன் என்ற வேறுபாடு இன்றி உடன் பிறந்தவனினும் பேரன்பு காட்டித் தன் சிறிய தந்தை பிள்ளைகளை வளர்த்த உயர்ந்த பண்பு குலசேகரரிடம் காணப்படுகின்றது. 'உடன்பிறந்த தம்பி வீரபாண்டியன்போல் ஆவாரோ' என்று வேறுபிரித்துக் காட்டி, மனவேறுபாடு உண்டாக்க இராசகுலன் பல முறை முயற்சி செய்கிறான். இராசகுலனின் நரித்தந்திரங்கள் குலசேகரரிடம் எடுபடவில்லை.

"உத்தோர் வயத்தி லுதித்தோரை யல்லாமல்
மற்றுமொரு தம்பியரை மன்னவரும் நம்புவரோ" (298-299)

என்றும்

"உட்கலந்து மரத்தில் முளைத்த புல்ல...
ஊறிப்போய் நிற்பார் தாயாதி மாரல்லோ
அல்லா லுடன்பிறந்த வீர பாண்டியன்
ஆகு மிளமுறை அவர்க்கென்றா லடுக்குமோ" (328-331)

---

20 "கண்ணாமெனத் தமையனார் வளர்ப்பவரே" (195)
"இரு கண்ணின் மணிபோல் வளத்தவர்" (472)

என்றும் கூறி உடன்பிறந்தவன், உடன்பிறவாதவன் என்ற வேறு பாட்டை உண்டாக்க முயல்கிறான் இராசகுலன். அவன் முயற்சிகள் தாய்ப்பாசத்துடன் வளர்த்த அத்தமையனார் முன் தோல்வியுறுகின்றன.

"மகவாசை தீத்ததுவுந் தம்பியர்க ளல்லவோ" (1599)

என்று அழகன் பெருமாள், தம்பியரைக் குறிப்பிட்டுக் குலசேகரர் கூறும் கூற்று அவரின் ஆழ்ந்த பாசத்தையும், பற்றையும் காட்டுவதாக உள்ளது.

இராசகுலன், வீரபாண்டியனின் சதித்திட்டத்தை அறிந்த அழகன் பெருமாளும், தம்பியரும் தப்ப எண்ணித் துலுக்கன் குறிச்சியில் தஞ்சமடைகின்றனர். 'எதிரியுடன் சேர்ந்து கொண்டனர்' என்று இராசகுலன் அதனைத் திரித்துக் கூறியபோது, குலசேகரர் அப்போதும் அவர்களின் செய்கைக்கு வெகுளாமல், 'இவ்வாறு நேர்ந்ததே' என்று கண்ணீர் சொரிந்து வருத்தமே காட்டுகிறார். கல் போன்ற மனமுடைய குலசேகரரையும் அவர் கொண்ட அளவற்ற பாசம் கண்ணீர் விடச்செய்து விடுகின்றது.

"சர்ப்பினை செய்தா ரழகனுந் தம்பிமார்தானும்
நடுச்சாமத்தில் போனார் துலுக்கன் குறிச்சியிலென்றான்
கல்போல் மனத்தான் குலசேகர ரதுகேட்டு
என்னகன்மம் விளைந்துதென் றெண்ணினார் கண்ணீர்
மலங்க" (467-470)

எனக் காட்சி விளக்கப்பட்டுள்ளது.

'அழகன் பெருமாளையும் தம்பியையும் பிடித்துவரப் படையனுப்பும்' என்று இராசகுலன் வேண்டியபோது, குலசேகரர், 'தம்பியர் உங்களை வெட்டித் துரத்தப் போகிறார்கள்; உங்களோடு இணங்கி வரமாட்டார்கள்; உங்களுக்கு ஒத்ததைச் செய்யுங்கள்' என்று விஷயத்தைக் கை கழுவி விடும் முறையிலேயே பேசுகிறார். 'படைகொண்டு சென்று அவர்களைப் பிடித்து வாருங்கள்' என்று உறுதிபடக் கூறிக் கட்டளை பிறப்பிக்கவில்லை. அதில் அவருக்கு உடன்பாடு இல்லை என்பது தெரிகின்றது. அத்துடன் தம்பியரின் மாறா வலிமை மீது கொண்ட பெரு நம்பிக்கையும் புலனாகின்றது. (487-499) எனவே இராசகுலன் படை கொண்டு சென்றதில் குலசேகரரின் பங்கு எதுவும் இல்லை என்பது தெளிவாகத் தெரிகின்றது.

'தம்பியர் சிறுபிள்ளைகள் அல்லவே அன்னாருக்கு இளமுறைக் கூறு கொடுத்துவிடலாம்' (315-316) என்று குலசேகரர் கூறுவது

அவரது பெருந்தன்மையைக் காட்டுகின்றது. 'இளமுறைக்கூறு தராவிட்டால் அவர்கள் பகைவர்களுடன் சேர்ந்து கொண்டால், இளமுறைக் கூறு மட்டுமன்றித் தென்காசியையும் அவர்கள் பறித்துக் கொள்ளக்கூடும் (340-350) என்று குலசேகரர் கூறுவது, எதிர் வருவதை எண்ணிப் பார்த்துச் செயல்படும் அவரின் தொலை நோக்குப் பார்வையையும் முன்னெச்சரிக்கை உணர்வையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

'தம்பியர் இளமுறைக்கூறு வேண்டும்' என்று கேட்டு விட்டதால், கொடுத்து விடவேண்டும் என்று, செய்தி அறிந்த கணம் முதல் உறுதியாக இருந்த குலசேகரர், இராசகுலனின் தந்திர வார்த்தைகளையெல்லாம் புறந்தள்ளிவிட்டு இறுதியில் இளமுறைக் கூறாக அவர்கள் கேட்ட கருவைநல்லூரைக் கொடுத்தே விட்டார் என்பதையும் கதைப்பாடல் சுட்டிக் காட்டுகின்றது (1369). பின்னால் முறைப்படி தேசத்தையும் பகிர்ந்து தருகிறேன்' என்று தம்பியரிடம் உறுதியும் அளிக்கிறார் குலசேகரர் (1370-1371). எத்துணைத் தடைகளும், தாமதப்படுத்துதலும் குறுக்கிட்டாலும் தன் மனத்துக்கொத்ததைச் செய்து முடிப்பவர் குலசேகரர் என்பது இதன் மூலம் தெற்றென விளங்குகிறது.

அழகன் பெருமாள் அடங்காத பேய்க்குதிரையை அடக்கிய பின்னும், சீவலமாறன் என்ற சின்னப் பெருமாள் நாராச வாழையை வெட்டிய பின்னும், தம்பியரை உளமாரப் பாராட்டிப் பொன்னும் மணியும், மலரும் பரிசாக அளித்த குலசேகரரின் செய்கையில்[21] தம்பியர் மேல் அவர் கொண்டிருந்த பேரன்பும் பெரும் பற்றும், பெருமிதமுமே வெளிப்படுகின்றன.[22]

'அழகன் பெருமாளின் குதிரையான நம்பிரானைக் கொண்டு வாருங்கள் - தம்பியர் ஏறுவதற்கு' என்று குலசேகரர் பணிக்கிறார். அழகன் பெருமாளின் குதிரையின் பெயர் நம்பிரான் என்று பிறிதோரிடத்தில் கதைப்பாடல் சுட்டுகின்றது[23] அழகனைக் குதிரையில் ஏற்றிக் கொன்றுவிட எண்ணிய இராசகுலன் அடங்காத பேய்க்

21 "மருவும் புகழ்தம்பி சீவலவர்
மகிழும் படிக்குநல் வரிசை செய்தார்" (1374-1375)

22 "அந்தவேந்தன் குலசேகரன் வாய்த்ததம்பி மாரைத்தழுவி
தழுவிமார்போ டணைத்தழகன் தம்பி சின்னப்பெருமாள்
தம்பி தனக்குநல்ல செம்பொன் மணிகள் மலர்கொடுத்துவிட்டார்" (1458-1460)

23 "மலர்ந்தபுக ழழகன்தம்பி சீவலவ தேவர்
மல்லகதி நம்பிரான்மேல் கல்லனை வைத்தேறி" (406-407)

குதிரையான சன்னனைக் கொண்டு வருமாறு கூறிவிடுகிறான். பேய்க் குதிரையின் பேய்க்குணம் 1213 முதல் 1226 வரையுள்ள வரிகளில் விவரிக்கப்பட்டுள்ளது. நம்பிரானைக் கொண்டு வராமல் பேய்க் குதிரை சன்னனைக் கொண்டு வந்ததற்காகக் குலசேகரர் எரிச்சலும், கோபமும் கொண்ட தன்மை (1243-1244) தம்பியின் மேல் அவர் கொண்டிருந்த உண்மையான பாசத்தைக் காட்டுவதாக உள்ளது.

'நாராச வாழையையே வெட்டி வீழ்த்தியவர்கள் தங்களைக் காண வரும்போது வாளொடு வரலாமோ? அண்ணர் வாளுடன் அரசு கட்டிலிலிருக்கும் போது, தம்பியர் வாளுடன் வருவது என்ன முறை?' என்று இராசகுலன் குலசேகரரிடம் கூறுகிறான். அரசனைக் காண வரும்போது ஆயுதம் எடுத்து வருவதைத் தம்பியர் தவிர்த்து விட்டால் அன்னாரை எளிதில் கொன்று விடலாம் என்று திட்டமிட்டே இராசகுலன் குலசேகரரிடம் மேற்கண்டவாறு கூறுகின்றான். அவனின் உட்கருத்தை உணராத குலசேகரர் தம்பியரை நோக்கி,

"நீதியுள்ள மன்னவரே யேதுமறி யீரோ
வென்றிவடி வாளுடனே மூற்றவர்கள் இருக்க
மிக்கபெருங் கோவிற் காலுக்குள்ளே வரமுறையோ
முறையாலுங் கட்டியலுங் கையுமாய் வாரும்
முத்தவெளி கடந்தா லுங்களுக் கொத்தபடிசெய்யும்" (1481-1485)

என்று கூறி அனுப்பி வைக்கிறார். முறைப்படி நடந்து கொள்வதில் மிகவும் கண்டிப்பானவர் குலசேகரர் என்பது இதன்மூலம் தெரிய வருகின்றது.

வாளெடுத்து வராததால் இலங்கத்துள் அடைபட்டுத் தம்பியர் மரணமடைந்ததைக் கேள்வியுற்றுக் குலசேகரர் வாளெடுத்து வரலாகாது என்று 'மறுத்தல்லவோ கெடுத்தேன்' (2136) என்று தன் செய்கைக்காகப் பின்னர் வருந்திப் புலம்புவதும் ஈண்டு இணைத்து நோக்கத்தக்கதாக உள்ளது.

"வாளெடுத்தவர் வரிலிது வருமோ" (2143)

என்று கூறுவதும் எண்ணத்தக்கது.

உடன் பிறந்த வீரபாண்டியனைக் காட்டிலும் தான் வளர்த்து ஆளாக்கிய அழகன் பெருமாள், சீவல மாறன் ஆகிய தம்பிமாரின் வீர வல்லமை மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார் குலசேகரர். கயத்தாற்று வெட்டுமாறன் படைதிரட்டிக் கொண்டு தென்காசி நோக்கி வருகிறான் என்று தூதன் உரைத்ததும் குலசேகரர்,

"வந்தா லென்ன சந்துகள் பேர்ப்பேன்
நூறாயிரம் படை கோடி வரினும்
நொடிக்குமுன் கொன்று குவிப்பே னென்றான்
குவிப்பே னவர்தலை யொருமலை போலே
குவித்தே விடுவேன் ஆடுகள் பெலியிடுவேன்
கவிப்பொன் மணிமுடி யொரு நொடியில்
கயற்றாறினி யழகனுக் கல்லவோ
அழகாய்வரு மருவலர் காவலன்
அல்லவோ தம்பி சீவலதேவர்
எ. . . . யெதிர்வரு படையும்
இவர்கள் கரங்களா லடபட மடியும்
அதிசெய முள்ள சின்னப் பெருமாளும்
அழகனும் படைவரப் பொறுப்பார்களோ
மதிகுல மன்னவ ரிருபேரையும்
மந்திரியைக் கடிதா யழையென்றான்" (2104-2118)

மந்திரி இராசகுலனும், வீரபாண்டியனும் கூடிச்சதி செய்து இலங்கத்துள் அடைத்துத் தம்பியரைக் கொன்றதை அறியாமல், அன்னாரைக் கொன்ற செய்தி கிடைத்ததாலேயே வெட்டுமாறனும் சாய்மலையாரும், மாவுலியும் ஒரு கோடி படை திரட்டிக் கொண்டு தென்காசியை நோக்கி வருகிறார்கள் என்பதையும் அறியாமல், 'பகைவர் படையை முறியடிக்கத் தம்பியரை அழையுங்கள்', என்று குலசேகரர் கூறும் மேற்கண்ட கூற்றில் தம்பியரின் வீரத்தின் மேலும், பெருவலிமை மீதும் குலசேகரர் வைத்திருந்த அசைக்க முடியாத நம்பிக்கை வெளிப்பட்டுத் தெரிகின்றது. 'பகைவன், வெட்டுமாறனை வென்று அவன் கயத்தாற்றை அழகன் இனி எடுத்துக் கொள்வான்' என்று கூறும் குலசேகரர் கூற்றில் அழகன் பெருமாள், தம்பியர் மேல், அவர் வைத்திருந்த அசைக்க முடியாத உறுதி பளிச்சிடுகின்றது.

'நின் தம்பியர் இனிமேலொரு பிறவியில் வருவர். அன்னாரை இராசகுலன் கொன்று குழிதனில் புதைத்தான். குழிதனைத் திறந்து தான் இனி அவர்களை எடுக்க வேண்டும்' (2119-2121) என்று தூதன் கூறியவுடன் குலசேகரர் அயர்ந்து, தன்னிலை மறந்து, நின்று விடுகிறார். இராசகுலனை நோக்கிக் 'கெடுத்தனையே அழகனை' என்கிறார். முகத்தில் அறைந்து கொள்கிறார். நெடுமூச்சு வாங்கி வெறும் கூடுடன் உலவுகிறார். அடிமுறிந்திடும் மரமென ஆனேனே! தம்பியர் இறந்ததை யான் அறியாமல் போனேனே! எனப் புலம்புகிறார். அறிவிற் சிறந்த தம்பியர் ஒரு களத்தில் மடியவும் நேர்ந்ததோ என வருந்துகிறார். 'வாளெடுத்து வர வேண்டாம்' என்று கூறிக் கெடுத்தேனே! 'வாளெடுத்து வந்திருப்பின், தம்பியர்க்கு இது

நேர்ந்திராதே' என நொந்து கொள்கிறார். 'சதிசெய்து கொன்ற மந்திரியை நரபலியிடுவேன்' எனச் சீறுகிறார் (2124-2146)

உடன் இராசகுலன் மறுப்பு விளக்கம் அளிக்கிறான்.

"நன்றா யவரைத் தம்பிமா ரென்றீர்
நடத்திய கவட மொருத்தரு மறியார்
ஒருத்தரு மறியாமல் நடந்தார்
உமக்காக முன்னழைத்திடப் போனோம்
கருத்துடனே வந்து புகுந்து
கள்ளவெட்டாய் வெட்டின தறிவீர்
அறிந்திருந்து பகையை வளத்தீர்
அவராலுயி ரிறந்திட யிருந்தீர்
சிறந்ததம்பி வீர பாண்டியனார்
செருத்தாரது புத்திதான்"

என்று இராசகுலன், மன்னவன் குலசேகரரையே குற்றம் சாட்டிப் பேசியதும், தம்பி வீரபாண்டியனைத் தூக்கி வைத்துப் பாராட்டியதும், அழகன் பெருமாளும் சீவலமாறனும் வீரசிகாமணிக் கோட்டையுள் கள்ளத்தனமாய்ப் புகுந்து வெட்டி வெற்றி ஈட்டினர் என்று அபாண்டமாய் அடித்துப் பேசியதும், குலசேகரரின் கோபத்தைத் தூண்டிவிட, உறையிலிருந்த வாளை உருவி இராசகுலனை ஒரே வெட்டாக வெட்டிச் சாய்து விடுகின்றார் குலசேகரர்.

"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது"

என்ற குறட்பாவின் விளக்கமாய்க் குலசேகரர் திகழ்கின்றார்.

மந்திரியைக் கொன்று முடித்த அதே கையோடு, வீரபாண்டியனை ஏசிப் பேசுகின்றார்.

'அரசாளவோ துணிந்து நினைந்தாய்! என முனிந்து, நின்னையும் முனிந்து இனி ஆவது என்? என்று தன்னையே அடுத்தகணம் தேற்றியும் கொண்டு, 'தக்க துணைவராயிருந்த தம்பியரை இழந்தேனே' என்று துன்பமுற்று உழன்று, 'வில்லாளரை வீண் கொலை புரிந்த இப்பழவினை என்னையும் விடுமோ' என்று புலம்பி, உயிர் விடத் துணிந்து ஊர்விட்டு நீங்குகிறார் குலசேகரர். வளர்த்த தம்பியரின் மரணத்தால், தானும் அம்மரணத்தையே இறுதியில் தழுவிக் கொள்ளும் மன்னவனின் மாண்புச்சிறப்பு, கண்ணில் நீர் பெருக வைப்பதாகும்.

## அழகன் பெருமாள்

இந்தக் கதைப்பாடல் தலைவனாக அமைந்துள்ள சிறப்புப் பெற்றவர் அழகன் பெருமாள். இந்தக் கதைப்பாடற் பெயரும் இப்பாத்திரப் பெயராலேயே "அழகன் பெருமாள் கதை" எனக் குறிக்கப்பெற்றுள்ளது. நாட்டையாளும் மன்னவருக்கு வேண்டிய அனைத்துப் பண்பு நலன்களும் கொண்டதாக இவரது பாத்திரப் படைப்பு காட்டப்பட்டுள்ளது. இவர் தன் பெயருக்கு ஏற்றவாறு நல்ல அழகனாகத் திகழ்ந்தார் எனக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

பேய்க்குதிரையை அடக்கி வீதி உலா வந்த அழகனின் அழகுத் தோற்றம் கண்டு மங்கையர் மயங்கித் தன்னிலையழிந்து பேசும் பேச்சுக்களாவன:

"அழகன் பெருமாளைப் பாருமென்பார்
ஆணி லழகனைப் பாருமென்பார்
செழியன் பெருமாள்தன் திருமார்பு
திருமுப்புரி நூலும் பாரு மென்பார்
பாரு மதிமுகத் தழகையென்பார்
பவழக் கனிவாயைப் பாருமென்பார்
காரை விலங்கிட்ட மேகமென்பார்
கருணைக் கடலிவன் காணுமென்பார் (1338-1345)

படைகொண்டு பிடிக்க வந்த இராசகுலன், சீவலவர் முன் நிற்கொணாது ஓடியபின் மீண்டும் கடடத்தனமாக அன்னாரை அழைத்துக் கொல்ல முடிவெடுத்து, அழகன் பெருமாளின் மணி வாசலில் வந்து நிற்கிறான். சேவகன் மூலம் செய்தியறிந்தவுடன் சீவலவர் சீறிப் பொங்குகிறார். 'இராசகுலனை வெட்டி மறலிக்கு இரையாக்குவேன்; பேய்க்கும், நரிக்கும் உணவாக்குவேன்' என்று இராசகுலனை வெட்டிக் கொல்லத் துடிக்கிறார். அப்போது சீவலவரின் சினத்தைத் தணிவிக்கும் முறையில் அழகன் பெருமாள் கூறும் வார்த்தைகள், அரசர்கள் கடைப்பிடிக்க வேண்டிய பொறுமை, நிதானம் பின்வருவதை உணர்ந்து செயல்படல், நடைமுறை வழக்கை அறிதல் என்ற அனைத்துப் பண்புநலன்களையும் ஒருங்கே வெளிப்படுத்துவனவாக உள்ளன எனலாம்.

"சொல்லரிய மன்னவர்க்குச் சூட்சிசொல்லு மந்திரியைக்
கொல்லுவது முறைமையல்ல குத்தம்வந்து சுத்திடுங்காண்
சுத்திலிருந்தார் நகைப்பார் சூட்சியல்ல விட்டுவிடு
மத்தவனை வரவழைத்து வார்த்தைசொல்லக் கேட்டிடுவோம்
அறிந்து கொல்ல வேணும்" (1112-1116)

என்று அழகன் கூறுவதாக உள்ளது.

அரசர்களுக்கேற்ற அனைத்து வீரப்பயிற்சிகளையும் பெற்றிருந்த அழகன் பெருமாள், மிகச் சிறந்த வீரராகத் திகழ்ந்திருக்கிறார். இவரின் மிகுந்த வீரமும், பேராற்றலுமே இராசகுலன், வீரபாண்டியனைக் கதி கலங்க வைத்திருக்கிறது. தங்களுடைய வீரத்திறமையால் குலசேகரருக்குப் பின் தென்காசி ஆட்சியுரிமையைக் கைப்பற்றித் தம்மை ஓட ஓட விரட்டி விடுவார்களோ என்ற அச்சத்தாலேயே இராசகுலனும், வீரபாண்டியனும் அழகன் பெருமாள், சீவலமாறனைக் கொன்று விடத் துடிக்கின்றனர். 'உயிரோடு அவர்கள் உள்ளவரை புவியாளக்கூடாது' (1515) என்று இராசகுலன் குலசேகரரிடமே துணிச்சலாகக் கூறும் நிலைவரை ஆகி விடுவதைக் காண்கிறோம். பகைவரை அச்சுறுத்தும் வகையில் அழகன் பெருமாள் பெற்றிருந்த ஆற்றலையும், வீரத்தையும் வெளிப்படுத்தும் வண்ணம் பேய்க்குதிரையை அடக்கிய நிகழ்ச்சி கதைப்பாடலில் விவரிக்கப்பட்டுள்ளது.

அழகன் பெருமாள் ஏறுதற்குப் பேய்க் குதிரையைக் கொண்டு வந்ததற்காகக் குலசேகரர், கொண்டு வந்தாரைக் கோவித்துக் கொண்டபோது, அழகன் பெருமாள் கூறும் ஆறுதல் உரைகள் அவரது உண்மையான வீரத்தையும், விவேகத்தையும், அஞ்சாத் தன்மையையும் காட்டுவதாக உள்ளன.[24] தன்னைக் கொல்ல நடக்கும் சதி என்று அறிந்தபின்னும் தன்னம்பிக்கையுடன் சதியை எதிர்கொண்டு முறியடித்த திறமும், தீரமும் போற்றற்குரியதாக உள்ளன. (1271-1299)

குதிரை நடை பயிற்றுவகை பதினெட்டையும் அறிந்த அழகன் பெருமாள், அடங்காத பேய்க்குதிரையை அத்தனை வகை நடையையும் பயில வைத்து அடக்கிய காட்சிகள் விவரிக்கப்பட்டுள்ளன. குதிரையடக்கலில் தன்னை விஞ்சியவர் யாரும் இல்லை என இந்நிகழ்ச்சியின் மூலம் நிரூபித்துக் காட்டுகிறார் அழகன் பெருமாள்.

"கிட்ட நின்ற குதிரையைக் கும்பிட்டு
கெதிகொண் டங்க வடிமிதித் தேறிய" (1255-1256)

அழகன் பெருமாளின் நற்பண்பு நயம்படக் காட்டப்பட்டுள்ளது. குதிரையை மீளத் திருப்பிய அழகன்,

"தாரை சுற்றடி நாகபந்தஞ் சாய்ப்பு
சாய்ப்பு முன்பாச்சல் பின்பாச்சல் கேடயம்
தாண்டுவிற்றல் குறுகுதல் கேடயம்

---

24 "கோபித்த குலசேகர மன்னனைக்
கும்பிட்டுக் கொண்டழகனுங் கூறுவான்
ஏவிப் பாருமென் வல்லமையுஞ் சற்றே
யானல்லாற் பின்னை யாரிதை யேறுவார்" (1245-1248)

வாய்ப் புல்லாரி மயூகம் சுவடிணை
வல்லவம் வகுப்புக்கிள்ளை கொள்ளுமார்
கொள்ளு வஞ்சி மரமென வல்லவர்
கூறுஞ்சந்தி பதினெட்டுங் காட்டினான்" (1264-1270)

குதிரையை நடத்தும் விதத்தில் இந்தப் பதினெட்டு வகைபாடுகள் இருந்ததைக் கதைப்பாடல் இந்நிகழ்ச்சிமூலம் நயம்படக் குறித்துச் சென்றிருப்பது பயன்தரத் தக்கதாக உள்ளது.

தாயாய் வளர்த்த குலசேகரர் மீது ஆழ்ந்த அன்பும், பாசமும் கொண்டிருந்த அழகன் பெருமாள், தினமும் அந்திப் பொழுதில்வந்து சந்தித்தேகுவதைக் கடமையாகக் கொண்டிருந்தார்.[25]

உடன் பிறந்த தம்பி சீவலவர் மீது அளவற்ற பற்றும், பாசமும் வைத்திருக்கும் அழகன் பெருமாள் தன் வலக் கண்ணாகச் சீவலவரைப் பாவித்திருந்ததாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.[26] இத்தகு தம்பி உயிர்விட்டதை அறிந்ததும் அழகன் பெருமாள் துடிதுடித்துப் புலம்புவதைக் கதைப்பாடல் விவரித்துள்ள விதம் படிப்போரின் நெஞ்சை உருக்குவதாக உள்ளது. (1907-1979) அழகன் பெருமாளின் அளவற்ற உடன்பிறப்புப் பாசத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாகவும் உள்ளது. தம்பி இறந்தபின் உயிர்வாழ விரும்பாத அழகன் உடன் உயிர் துறந்தது இரத்தபாசத்தின் உச்சத்தைக் காட்டுவதாகும்.

"நானழைத்திடத் தம்பி நீர்முகம் பார்க்கில்
பிழைத்தன னுயிர்த்துணைவா யென்பான்
அந்த விதியோ நில்லே நில்லேன்
வந்தே னென்பான் மன்ன னவனழகன்
தழைத்திடு வானை யவனோடு செல்ல
நினைப்பவ னினி யுரைப்பதே னெனவே
சிறுவாள். தன்னைப் புவியிடை நிறுத்தினான்
அழகனு மனத்துயர் கெடவிழுந் ததில்மடிந்தான்" (1976-1983)

---

25 "ஆய்விட் டெமைவளத்த தாயுங் குலசேகர ரெனவே
தினமந்திப் பொழுதில்வந்து சந்தித்தேகு மந்தநாளில்" (1404-1405)

"வடிவழகன் குலசேகரப் பெருமாள் மனமகிழ
மகிழ்வினுடன் வந்து சந்தித்தேகி வரும்நாளில்" (1495-1496)

26 "சென்று விலக்கினான் றமையன் வலக்கண்ணான சின்னப்பெருமாள்
(1413)

மல்லர் கையால் மடியாமல், தன் கள்ள வாளில் தானே விழுந்து மடிந்திருந்த காட்சியைக் கண்டு பகைவனான இராசகுலனும், வீரபாண்டியனும் பாராட்டிப் பேசும் உயர்நிலையில் அழகன் உயிர் விட்டமை விளக்கப்பட்டுள்ளது.[27]

## சீவலமாறன்

பாண்டியர் சூட்டிக் கொள்ளும் 'மாறன்' என்ற பட்டத்தைத் தன் பெயரில் கொண்டிருந்த சீவலமாறன் இக்கதைப்பாடலில் சீவலவர்,[28] சின்னப்பெருமாள்[29] என்றும் அழைக்கப்படுகிறார். 'மூத்தது மோழை, இளையது காளை' என்ற சொலவடைக்கு ஏற்பத் துடுக்குத் தனமும், புத்திசாலித்தனமும், செயல்திறனும், வேகமும், விறுவிறுப்பும் கொண்டவராகச் சீவலவர் காட்டப்பட்டுள்ளார். புலியூரில் இருந்து அரசாண்ட அண்ணன் அழகன் பெருமாளின் மந்திரியாகச் சின்னப் பெருமாள் திகழ்ந்திருக்கிறார்.

"மந்திரி சின்னப்பெருமாள் திருமுகத்தை நோக்கி" (1642)

எனக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

'நாமாளும் தேசத்தை நமக்கென்று அண்ணர் குலசேகரர் உரிமையாக்கித் தந்துவிட்டால் ஒவ்வொன்றுக்கும் அண்ணர் கையை எதிர்பார்க்காமல் நாம் சுயாட்சி நடத்தலாமே' என்ற எண்ணத்தில் இளமுறைக்கூறு கேட்கலாம் என்ற கருத்தை முதன் முதலாகக் கதைப்பாடலில் முன்வைப்பவர் சின்னப் பெருமாள்தான் என்று காட்டப்பட்டுள்ளது. 'இளமுறைக் கூறு கேட்டல்' என்ற முக்கியமான திருப்புமுனை இவராலேயே உருவாக்கப்படுகின்றது. நன்னோக்கத்தில் கேட்ட 'இளமுறைக் கூறு', கதையின் முதல் முடிச்சாகிச் சிக்கலைத் தொடங்கி வைக்கிறது. சிக்கலின் காரணகர்த்தவாகச் சீவலவர் அமைகிறார். 'அண்ணர் குலசேகரரின் திருவுளமறிந்த மந்திரி இராசகுலனிடம்சொல்லி இளமுறைக் கூறு கேட்டுவா' என்று அழகன் பெருமாள் தன் தம்பி சீவலவரையே மந்திரியிடம் பேச, தென்காசிக்கு அனுப்பி வைக்கிறார்.

---

27 "இரத்த குருதிநெடு நிற்புறமிசை கிடந்தமல்லன்
கொன்றதில்லை யிவரையென நின்றுநிலை தளன்றுசொல்வான்" (1999-2000)

"வீர ரிவரைவெல்ல ஆருமொருத்த ரில்லையென்பான்" (2002)
"அன்பா லிவன்மனதில் வம்புசிறிது மில்லையென்பார்
ஆணி லழகனிவன் வீணிலுயி ரிழந்தா னென்பார்" (2006-2007)

28 வரிகள் 2003, 2024, 2037

29 1880, 1885, 1854

இராசகுலனைச் சந்தித்துச் சீவலவர் நயம்பட எடுத்து விளக்கும் முறை, மந்திரியாகப் பணியாற்றத் தக்கவர்தான் சீவலமாறன் என உணர வைக்கின்றது. (267-275)

இராசகுலனும் வீரபாண்டியனும் தங்களைப் பிடிக்கப் படையுடன் வந்து வீரசிகாமணியில் பாளையமிறங்கியுள்ளதை ஒற்றறிந்த சீவலவர், 'புலியைத் தொடர்ந்த மான்போல் வந்த அவர்களை என் வாளுக்கிரையாக்குவேன். கொண்டு வந்த கரியையும், பரியையும் கைப்பற்றிக் காட்டுக்குள் அவர்களை ஓடஓடத் துரத்துவேன்' என்று கம்பீரத்துடன் தன் அண்ணரிடம் கூறுதல் சிறந்த வீரத் தளபதியாகவும் சீவலவர் திகழ்ந்ததை உறுதிப்படுத்துகின்றது. (565-572)

'உன்னைப் போர்முகத்தனுப்பி விட்டு நானிருப்பதெப்படி'? என்று அழகன் மலைத்து நிற்க, சீவலவர் 'இருவரும் போனால் பரிவாரம் மலைக்கும்' என்று இயம்பி,

"சின்னத்தம்பியும் நமது பரிவாரத் தாரும்
தேவியரைத் தனியிருத்திப் போவதட வல்லவே
அடலரசர் பெருமாளிங் கெழுந்தருளி யிருந்தால்
அடியேன்போய்ச் செயங்கொண்டு விடியுமுன்னே வருவேன்
படைமுகத்தி லெனக்கவசம் வந்தாலும் ஓமக்கு
பன்னுதமிழ் மாறன் முன்னுதவி யுண்டு" (796-801)

எனச் சீவலவர் தன் அண்ணரிடம் கூறும் வார்த்தைகளில் பொறுப் புணர்ச்சியும், எதிர்வருவதை உணர்ந்து செயலாற்றும் திறனும், போர் முகத்துச் சென்று பகைவரைச் சிதறடிக்க வேண்டும் என்ற முனைப்பும் பொதிந்து கிடப்பதைக் காணலாம்.

மேற்கண்டவாறு கூறி,

"கும்பிட்டுக் கொண்டண்ணரையு முன்பிட்டுக் கொண்டிறஞ்சி" (805)

புறப்படுதலில் சின்னப்பெருமாளின் பணிவும், பண்பும் பளிச்சிடுகின்றது.

ஊரை ஒட்டிச் செல்லாமல் காட்டு வழியே சென்று வீரசிகாமணிக் கோட்டையுள் புகுந்து பகைவரை ஓடஓடத் துரத்திவெட்டி, அவர்கள் கொண்டுவந்த யானைகள் ஐம்பதையும், குதிரைகள் முன்னூறையும், ஆயுத வரிசைகளையும், மற்றும் பல்லக்கு, காளாஞ்சி, குடை, கொடி, ஆபரணங்கள், கருவூலங்கள், பொன், பொருள் என்று அத்தனையும் கைப்பற்றுகிறார் சீவலவர். நூற்றைம்பது சேவகர், முப்பது குதிரைகளைக் கொண்ட சிறிய படையைக் கொண்டு இப்பெரு வெற்றியை ஈட்டிய சீவலவரின் வீரமும், தீரமும்,

மதிநுட்பமும், செயலாற்றல் திறனும் கற்போரைக் கவரும் வண்ணம் கதைப்பாடலில் வருணிக்கப்பட்டுள்ளன. (960-975)

போரில் தோற்றோடிய பின் திரும்பவும் அழைக்க வருகிறான் இராசகுலன். அவனது அழைப்பைத் துணிச்சலாக நிராகரிக்கிறார் சீவலவர்.

"இன்னமிங்கே நாமிருப்போ மிவடம்விட்டு வருவதில்லை
உன்னைநம்பி நாங்கள்வந்தா லுயிர்க்கிறுதி வந்திடுங்காண்"(1152-1153)

என உறுதியாக மறுக்கிறார். உற்ற கேடுகாலத்து, ஊழ் வினைதான் முந்தப் பாவூர்க் கணியானின் சொல்லையும் கேளாமல் அண்ணனும் தம்பியும் இறுதியில் இராசகுலனுடன் புறப்பட்டுத் தென்காசி வருகின்றனர்.

கதலிவாழை மரத்தினுள் இரும்பு நாராசத்தைச் (இரும்புக் கம்பி) செலுத்தி, செலுத்தியது தெரியாமல் நட்டு வைத்து, அழகன் பெருமாளை வெட்டுமாறு கூறுகின்றான் இராசகுலன். உள்ளே இரும்புக் கம்பி இருப்பதை உணர்ந்தே, வீரத்துக்கொரு சவாலாக வெட்ட முன் வருகிறார் அழகன். அப்போது சீவலவர் அண்ணரைத் தடுத்து நிறுத்தித் தானே வெட்ட முனைகின்றார். (1416-1424) வீர விளையாட்டு வெல்லக் கட்டியைப் போலச் சீவலவருக்கு மிக உவப்பாக இருப்பது தெரிகின்றது. நாராச வாழையை வெட்டிய காட்சி கதைப்பாடலில் கண்முன் காணுவது போல் விவரிக்கப்பட்டுள்ளது.

"ஆலித் தெழுந்தா னிருகாலிற் கெதிகொண் டெதிர்குதித்தான்
குதித்தான் லெகுக் கொண்டெதிர் குதித்தான் முன்னந்தம் பின்னந்தம்
முறைகொண் டொன்று மானி லெகுகொண்டே கட்டுஞ் சாரி வந்தான்
விடுத்தவாழை யிடசாரி வலசாரியும் வந்தான்
நின்று மெய்யொடுக்கி முறைகொய்து வைத்தான்காலை
காலிற் சவடுரைத்து மேலிட் டுரமெடுத்து நிமிர்ந்து
எதிர்கிட்டிநின்ற வாளைப்பத்தி யோடவீசி விட்டான்" (1427-1433)

பார் மெச்சும்படியாக பணிக்கமார் மெச்சிய களரிப் பயிற்சி பெற்ற சீவலவர் வாழையை வெட்டிச் சாய்த்தது கண்டு அனைவரும் அதிசயித்து நிற்கின்றனர். வாள் வீச்சில் தன்னை விஞ்சினவர் யாருமில்லை என்பதை இந்நிகழ்ச்சி மூலம் உறுதிப்படுத்திக் காட்டுகிறார் சீவலவர்.

"வீரன் வாளெடுக்கில் நூறுகோடி படைசாயும்
மல்லால் வெல்லும் வாளிரும்புங் கல்லுங்கற்றாழை போல்மடியும்
பார வாள்வலியும் வீரன் றோள்வலியும் பாரில்
பாதத்தூளில் நிகராகும் வாள்வீமன்" (1448-1451)

என இராசகுலனே பாராட்டிப் பேசும் வண்ணம் தன்தோள் வலிமையை நிரூபித்து விடுகிறார் சீவலவர்.

'வாள்வீச்சில் வல்லவர்கள் என்று நிரூபித்த பின் அவர்கள் வாளுடன் வந்து தங்களைக் காணுவதை நிறுத்த வேண்டும்' என்று பக்குவமாகக் குலசேகரரிடம் இராசகுலன் கூற, 'இனி வாளுடன் அன்றிக் கட்டியலுடன் மட்டுமே என்னைக் காண வர வேண்டும்' என்று கட்டளை பிறப்பிக்கிறார் குலசேகரர். அதன்படி அழகன், கட்டியல் ஒன்று உருவாக்கிக் கட்டியலுடன் சென்று அண்ணரைக் கண்டு வரும் வழக்கத்தை வைத்துக் கொள்கின்றார்.[30]

ஆனால் அப்போதும் சீவலவர் ஒரு கள்ளவாளையும், கட்டியலுக்குள் மறைத்து வைத்துச் செய்தமை அவருடைய வருமுன் காக்கும் எச்சரிக்கை உணர்வைப் புலப்படுத்துவதாக உள்ளது.[31] அதி புத்திசாலித்தனத்துடன் வைத்த இக்கள்ள வாளே பின்னால் அறுபது மல்லர்களை வீழ்த்தப் பயன்படுகின்றது.[32]

இராசகுலனும், வீரபாண்டியனும், ஆயுதங்கள் ஏதுமின்றிக் கட்டியல் மட்டும் கொண்டு குலசேகரரைக் காண வரும் அழகன், சீவலவரை இலங்கத்துள் அடைத்துக் கொல்லத் திட்டம் தீட்டுகின்றனர். குலசேகரர் இளமுறைக்கூறு பகிர்ந்தளிக்க அழைக்கிறார் என்று இராசகுலன் கூடத்தனமாக அழகன், சீவலவரைப் புலியூரில் சென்று அழைக்கிறான். தீக்கனவு கண்டதைக் கூறித் திருத்தேவி பயணத்தைத் தடுக்கிறாள். பாலூர்க் கணியானும் உயிர்க்கிறுதி வருமென எச்சரிக்கிறான். புறப்பட்ட அழகனைச் சீவலவரும் போகவேண்டாம் எனப் பலவாறு கூறித் தடுக்கிறார்.

---

30 "வந்தா ரழகன்பெருமாள் கட்டிய லுண்டாக்கி
வண்ணம் வழித்தெழுதி வைத்தார்நண்ணிய கைப்பிடித்தார்" (1489-1490)

31 "முந்துதம்பி சீவலவர் கட்டிய லுண்டாக்கி
முழுதும்வேளைக் குதவுகள்ள வாளுமதில் சேர்த்து
ஏற்றுங்கள்ள வாளிருக்குந் தோற்றமறி யாமல்
எழுதரிய சாதிலிங்க முழுதும்வழித் தெழுதி
மாற்றும் வலக்கைபிடித்தார் சின்னப்பெருமாள் தானும்" (1491-1494)

32 "அல்லாமல் கட்டியலென்ன செய்யுமென் றடந்தார்
அழகன்பெருமாள் கையில்கள்ளவாள் கண்டஞ்சி நின்றார்" (1815-1816)

"செம்புக் கட்டியலைக் கம்புக்கட்டி லென்றிருந்தோம்
அதில்திருத்துங் கள்ளவாளென் றொருத்த ரறியார்களே அய்யா" (2030-2031)

நீதிகத்த கணியான்றன் சோதிடம் பொய்த்திடுமோ
இன்றுசெல்லவும் வேண்டாம் சொம்பகிர வேண்டாம்
இளமுறைக் கூறுநமக்குத் தலைமுறைக்கும் வேண்டாம்
வேண்டா மென்றிடுங்கருமம் வேணுமென்று நினைந்தால்
மெத்தப்பழு தாகுமது புத்திப்பிழை கண்டீர்
தீண்டாத கற்புடையாள் தெய்வ மல்லவோதான்
திருத்தேவி தன்னுரையை மறுத்தேக லாமோ
மறுத்தேகி லவசம்வரு மண்ணாவி நமக்கு" (1634-1645)

என மிகுந்த எச்சரிக்கையுணர்வோடு தடுக்கிறார். ஆனால் மீறிப்போய் ஆபத்தில் சிக்கி ஆருயிர் இழக்கின்றனர்.

'இந்த ஊர் உங்களுக்கு, அந்த ஊர் எங்களுக்கு' என்று பொய்ப்பகட்டு மொழி கூறி ஊர்ப் பெயர்களை அடுக்கி இராசகுலன், குலசேகரர் கூறியது எனப் பித்தலாட்டம் செய்வதைக் கண்டறிந்த சீவலவர் பேசும் கண்டிப்பான பேச்சுகள், உரிமைக்காகப் போராடும் அவரது போர்க் குணத்தை வெளிப்படுத்துகின்றன. (1718-1745)

தம்மை இலங்கத்துள் தந்திரமாக அடைத்து விட்டதையும் முதலில் அறிந்து கொள்கிறவரும் சீவலவராகவே உள்ளார். தம் நிலைக்காக இரங்கிப் புலம்பித் தீர்க்கிறார். கற்பாரைக் கழிவிரக்கம் கொள்ளச் செய்வனவாக இவர் வார்த்தைகள் அமைந்து சிறந்துள்ளன.[33]

---

33 ". . . . . . . . . . தந்தைதாய் தமைக்கொன் றோமோ
வளர்மனை தீயிட்டோமோ மறையவர் தமைக்கொன் றோமோ
குளமொடு கூவல்தூர்த்துக் கொடிய பாதகஞ் செய்தோமோ
இளமுறை யல்லோகேட்டோ மிதுசளம் வந்துதென்றான்" (1763-1766)

"இளையவ னானாலு மென்புத்தி கேளாமல் போச்சே
நமக்கிப்படிச் சாக விதித்தவிதி செய்த மாயம்" (1771-1772)

"வீணிலாட்டைத் துடர்ந்தபுலிபோ லகப்பட்டோ மைய்யா
பூணுந் திரவியம் வேணதுதேடிக் கொள்ளலாம்
உயிர்போனால் திரும்பாது வீணிலகப்பட்டோ மைய்யா
சாண்காட்டுக் குள்ளே முழக்கம்பு வெட்டுவான் பாவி - அவன்
சர்ப்பினை செய்வாரென் றப்போதே சொன்னேனே அய்யா
வீணுக் குயிரையிழக்கத் துணிந்தோமே அய்யா
விசந்தோன்றினாப் போலே தோன்றினான் மந்திரி நாட்டில்" (1789-1795)

"பூட்டிய வாளுமென் கையிலிருந்தாக்கா லையா - உம்மைப்
பூலோக மாள அரசுக்கிருத்துவே னய்யா
காட்டிக் கொடுத்தது தெய்வம் நமக்கில்லை அய்யா" (1800-1802)

மிகுந்த வீரமும், விவேகமும், புத்திக் கூர்மையும், தீயதை எதிர்த்துப் போராடும் போர்க்குணமும், துடுக்குத் தனமும், வெளிப்படையான உண்மைப் பேச்சும், செயலாற்றல் திறனும், அண்ணர் சொல்லை மந்திரமாகப் போற்றும் மாண்பும், மிகுந்த முன்னெச்சரிக்கை உணர்வும், பற்றும், பாசமும் என்ற அனைத்து நற்பண்புகளையும் கொண்ட சீவலவர் இறுதியில் வஞ்சகரின் வஞ்சகத்துக்குப் பலியாகிறார். தம்பியைத் தப்பிப் போகுமாறு அழகன் கூறுகிறார். அண்ணரைத் தனியே விடுத்துத் தன்னுயிர் காக்க ஓடும் கோழையாக இருக்க விரும்பவில்லை சீவலவர். "ஒருத்தி வயிற்றில் இருவர் பிறந்தோம், உருவை விட்டு நிழல் அப்புறத்தே போகுமோ? உடைவாளை இழந்தபின் உள்ள புத்தியையும் இழந்தோமே! சிலம்பமும் மல்லும், அடவும் கற்றோமே! இந்த மல்லரைக் கொல்ல நாம் ஒருவர் போதாதோ? நமக்கு உற்ற இச்சமயத்தில் உடைவாள் உதவாமல் போயிற்றே" என்று மனங்கலங்கி உரைக்கிறார். தப்பிப்போகவும் மறுக்கிறார். (1819-1832)

இரும்பு நாராசம் செருகிய கதலி வாழையை ஒரே வெட்டில் வெட்டி வீசிய வல்லாள கண்டரான சீவலவர், வைத்திருந்த சிறு கள்ள வாளையும் அண்ணர் கையில் கொடுத்து விட்டு மற்போராலேயே மல்லர்களைக் கிழித்துக் கூறாக்கி மடிய வைக்கிறார்.

"மிதித்தன ரொருத்தனைக் குடலது சரிய
எதிர்கொள்ளு மொருத்தனைப் படவடித்தான்
அடித்தங்கொடு துவைத்திட மடிவார்
அடித்த குடல்சரிய இரத்தமோ டுருளுவார்
அடித்தே ஒருத்தனைப் பிடித்தோர் பிடியால்
அடிக் கழுத்தொடு முறித்தெடுத் தெறிவார்
பிடித்தே யொருத்தனை நிலத்தொடு மறைவார்
ஒருத்தனைச் சிரம் நெறித்தயல் விடுவார்
பிலத்திடு மல்லர் குடலது சரிய
கலக்கினர் தம்பி சின்னப் பெருமாளும்" (1864-1873)

மல்லர்கள் அறுபது பேரில் 20 பேர்களை ஒரு களத்திடை படுமாறு வதைத்தனர். இதைக் கண்டு மற்ற இருபது பேர்கள் திடுக்கிட்டுப் பின்வாங்கினர். அவர்களையும் சின்னப் பெருமாள் வளைத்துத் தாக்கினார். (1876-1880)

"வளைத்தனர் மல்ல ரொருத்தன் கைதனிலே
சின்னப் பெருமாளுடன் முடி யகப்படவே
மதப்புலி அழகன் கள்ள வாளாலே

பிடித்திடு மல்லன் உயிர்குடித் திடவே
களைப்பொடு சினவான் சின்னப் பெருமாளும்
பிடித்தடி நாவுற் கரமெடுத்து
கதிப்புடனே வலித்துயிர் மடிந்தான்" (1881-1887)

மற்போரின் போது ஒரு மல்லன் சீவலவரின் முடியைப் பிடித்திடத் தீண்டாதவன் தீண்டின முடியுடன் உயிர்வாழ விரும்பாமல் நாவிழுத்து மரணத்தைத் தழுவுகிறார்.[34]

அண்ணர் அழகன் பெருமாளை விடவும், அதி புத்திசாலியாகவும், முன்னெச்சரிக்கை உணர்வுடையவராகவும், வெடுக்கெனப் பேசும் இயல்புடையவராகவும், போருக்கு முன்னே நிற்கும் அஞ்சா வீரராகவும் திகழ்ந்த அவ்விளஞ் சிங்கம் மல்லருடன் நடந்த போரிலும் அண்ணரையும் முந்தி, முதல் மரணத்தைத் தழுவியவராக அமைந்த வீரச் சோகம் மனத்தை உருக்கக் கூடியதாகும்.

## இராசகுலதேவன்

கதையின் எதிர்நிலைத் தலைவன். குலசேகரரின் ஆறு மந்திரிமார்களுள் ஒரு மந்திரியாக இருந்தவன். (227-232) இவனின் ஆதிக்கம் கதை நெடுகிலும் பரவிக்கிடக்கின்றது. கதைச் சிக்கல், கதைப்போக்கு, திருப்புமுனை, உச்சக்கட்டம், கதை முடிவு என்ற அனைத்து நிலைகளிலும் இவன் பங்கு சங்கமித்துள்ளது. மொத்தத்தில் இவனின்றிக் கதை இல்லை. கதை நிகழ்ச்சி மாற்றங்களை நிர்ணயிப்பவனாக இவன் உள்ளான். சுந்தரம்பிள்ளை அவர்களின் படைப்பான மனோன்மணீயத்தில் வரும் எதிர்நிலைப் பாத்திரமான குடிலனுக்கு இணையானவனாக இந்த இராசகுலன் திகழ்கிறான். அரசனுக்கு நல்லாலோசனைகள் கூறி நல்வழி நடத்திச் செல்லும் பெரும் பொறுப்புடைய மந்திரி சுயநலப்போக்குடையவனாகவும், தன்னிச்சையாகச் செயல்படுபவனாகவும், ஆதிக்க மனப்பான்மை கொண்டவனாகவும், அழிவுச்சக்தியைக் கைக்கொண்டவனாகவும் அமைந்து விட்டால் நேரும் பாதிப்புகளைக் கதைப்பாடல் தன்னியல்பாக விளக்கிச் செல்கிறது.

இராசகுல தேவனைக் கதைப்பாடலின் 210ஆம் வரியில் பாடலாசிரியர் அறிமுகப்படுத்துகிறார். பாடலாசிரியர் கூற்றாகக் "கத்தத் துரோகி இராசகுலதேவன்" என்று அறிமுகம் அமைந்துள்ளது. அழகன்

---

34 "தீண்டாதவன் தீண்டாதவன் தீண்டின முடியென
மாண்டா னுயிர்த்தம்பி யென்றுளைவான்" (1923-1924)

பெருமாள், சீவலமாறன் மீது இராசகுலன் பொறாமை கொண்டு அவர்களை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று வன்மம் கொள்வதற்கான காரணமும் இந்த அறிமுகத்துடனேயே சேர்த்துச் சொல்லப்பட்டு விடுகின்றது. கல்வியும், வீரப்பயிற்சியும் பெற்று முடித்து ஆடை, ஆபரணங்கள் பூட்டி அலங்கரித்துத் தன் பக்கத்தில் இருத்தி, இதமான வார்த்தைகளை மனம் குளிரப் பேசிய குலசேகரனின் நற்செய்கையைத் தாங்க முடியாமல் இராசகுலன் பொறாமையால் தலை கவிழ்ந்ததாக ஆசிரியர் தொடக்கக் காட்சியைப் படைத்துள்ளார். (196-211)

இத்தகு பொறமை மனங்கொண்ட இராசகுலனிடமே, அவன் மந்திரி என்ற பதவியைத் தாங்கியிருந்ததால், அதற்குரிய மரியாதையை அளித்துச் சீவலமாறன் இளமுறைக் கூறு பெற்றுத் தருமாறு கேட்கிறான். 'இது இளஞ்சிங்கம் தானே வலிய வந்து வலையில் மாட்டிக் கொண்டது போல் ஆகிவிடுகின்றது. இராசகுலனின் பொறாமைத் தீக்கு இவர்களே எண்ணை ஊற்றுவது போலவும் ஆகிவிடுகின்றது.

குலசேகரரிடம் இளமுறையைப் பெற்றுத் தரும் நோக்கோடு பேசாமல், இளமுறை கேட்கிறார்கள் என்று புகார் கூறுவதுபோல் கூறி, கொடுக்கக் கூடாது என்ற கருத்தை வலியுறுத்துகிற பணியையே செம்மையாகச் செய்கிறான் இராசகுலன். 'ஒரு வயிற்றில் பிறந்தோரை யன்றி, மற்றொரு தாய் வயிற்றுத் தம்பியரை நம்பலாகுமோ' என்று வினா எழுப்பி, 'இன்று இளமுறை கேட்பவர்கள் அடுத்து, குதிரை, யானை, கருவூலம் என்று அனைத்திலும் பங்கு கேட்பார்கள்' என்று அச்சுறுத்தி, தாயாதிகளால் பட்ட துயரங்களைத்தானே இதிகாசங்கள் கூறுகின்றன என்று எடுத்துக் காட்டுகளுடன் விளக்குகிறான். உடன் பிறந்த வீரபாண்டியனுக்கே இளமுறை உரிமை உண்டு என்றும், தேசம் பகிர்ந்து கொடுப்பது முறையல்ல என்றும் வாதிடுகிறான். முன்னுதாரணங்களான இதிகாச, காவியக் கருத்துகளைப் பொருத்தமுற எடுத்துக் காட்டும் இராசகுலனின் வாதத்திறமை, நன்மைக்குப் பயன்பட்டிருப்பின் நலம் விளைந்திருக்குமே என்ற ஏக்கத்தைத் தருவதாக அமைந்து சிறந்துள்ளது. (298-337)

"துன்றுங் கடுங்கானில் ஐவரைச் செல்லவிட்ட
தம்பிதா னல்லோ பரதனி ராமர்க்கு
தமையன் றனையந்தக் காட்டிலே யோட்டினான்
வெம்பு கொடுங் கானிலே
விட்டதார் தம்பி புட்கர னல்லவோ
எக்குலத்தில் சம்பாதி சடாயுவை

போத்திக் காய்ந்தா னுடன்பிறந்தா னென்றே
உட்கலந்து மரத்தில் முளைத்த புல்ல
ஊறிப்போய் நிற்பார் தாயாதி மாரல்லோ" (320-329)

என்கிறான்.

சிற்றப்பன் பிள்ளைகளான அழகன், சீவலமாறனுக்குக் குலசேகரர் அதி முக்கியத்துவம் அளித்து, ஆள நாடும் ஒதுக்கிப் பரிவும், பாசமும் காட்டுவது இராசகுலனிடம் பொறாமைத் தீயை மூட்டிவிட அவர்கள் மீது வெறுப்புக் காட்டுவது ஒரு பக்கம் இருக்க, மற்றொரு பக்கம் தன்னை அவர்கள் ஒழித்து, ஓரங்கட்டி விடுவார்களோ என்ற அச்சவுணர்வும் அவர்களை அடியோடு ஒழித்துக் கட்டி விடவேண்டும் என்ற வேகத்தையும் விறுவிறுப்பையும் தூண்டுவதாகவும் உள்ளது என்பதையும் கதைப்பாடல் குறிப்பிட்டுச் சொல்கின்றது.

"நேச மான அழகனுந் தம்பியும்
நிச்செய மிளமுறைக் கூறு கட்டுவார்
கட்டுவார் பின்னைத் தென்காசிச் சீமையும்
கட்டி நம்மையும் வெட்டித் துரத்துவார்
தட்ட வேணு மிவரைச் சமயத்தில்
சதிக்க வேணு மெனக்கது சம்மதம்" (357-362)

என்று "சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டி" என்று சும்மா இருந்த வீரபாண்டியனையும் இராசகுலனே தூண்டி விட்டு, அழகன் பெருமாள், சீவலவரை ஒழித்துக் கட்டினால்தான் நமக்கு வாழ்வு என்றும், அவர்களை ஒழிப்பது ஒன்றே வாழ்வின் இலட்சியம் என்றும் உறுதிகொள்ளும் நிலைக்கு ஆளாக்குகின்றான். வீரபாண்டியனே சும்மா இருக்கும்போது வீரபாண்டியனைத் தென்காசி அரியணையில் அமர்த்துவதே தன் ஒரே குறிக்கோள் என்று, அந்தக் குறிக்கோளைக் கையில் எடுத்துக் கொண்டு இராசகுலன் செயல்பாடு களில் இறங்குவது அவனுடைய ஆளுமைத் தன்மையையும், தவறான தன் குறிக்கோளுக்கு ஆள்சேர்க்கும் தந்திரத்தையும் வெளிப்படுத்துவ தாக அமைந்துள்ளது.

இராசகுலனும் வீரபாண்டியனும் சேர்ந்து சதிசெய்வதை ஒற்றறிந்த அழகன் பெருமாளும், சீவலமாறனும் தங்களைக் காத்துக் கொள்வதற்காகத் தப்பித்துத் துலுக்கன் குறிச்சியை அடைகின்றனர். இதனையும் இராசகுலன் 'பகைவர்களுடன் கூடிச் சதி செய்வதற்காகச் சொல்லாமல் கொள்ளாமல் புலியூரை விட்டுப் போய் விட்டார்கள்'

என்று குலசேகரரிடம் திரித்துக் கூறுகிறான். தாங்கள் செய்த சதியை மறைத்து அழகன் பெருமாள், சீவலமாறன் சதிசெய்யச் சென்றுள்ளார்கள் என்று அப்படியே திசை திருப்பி விடுகிறான்.[35]

'போனவரைக் கூட்டி வருகிறோம். வராவிடில் கட்டியும், வெட்டியும் கைப்பிடியாய்ப் பிடித்து வருகிறோம் என்று குலசேகரரிடம் கூறிப் படை கொண்டு சென்று அழகன் பெருமாள், சீவலவரைக் கொன்று குலையறுக்க எண்ணம் கொள்கிறான் இராசகுலன். ஆனால் அன்னாரிடம் தாம் கொண்டு சென்ற கரிபரிகளையும் இழந்து தோற்றோடி வருகின்றனர். சீவலவரின் வீரத்தின்முன் நிற்கொணாது தோற்ற தங்கள் தோல்வியையும் இராசகுலன் ஒப்புக் கொள்ளாமல் குலசேகரரிடம் கூறுவதாவது: துலுக்கன் குறிச்சியிலிருந்து சாய்மலைக்குப் பின் வாங்கிச் சென்ற சீவலவர் பின் படைதனைக் கூட்டி மெல்லவந்து நித்திரை மயக்கத்தில் கோட்டையுள் புகுந்தார்.

"மிகுந்தே மறவரை வளைந்தே யறுக்க
வெகுண்டந்தக் கோட்டையை விட்டோடிப் போனோம்
போனார் கரியும் பரியளுங் கொண்டு
போகட்டு மென்று பிறஞ்சாய்ந்து வந்தோம்
என்னென்று கேளு மெதிர்த்துப் பொருதால்
இருபேரு மொருகளத்திடைப் பட்டு விழுவார்
பட்டு விழுவா ரிருபே ருமக்கு
பட்சமுள்ள தம்பிமா ரென்றெண்ணி நின்றேன்
மட்டிலவரைப் போக விட்டுவிடு வேனோ
மன்னவனே யென்று மந்திரி பணிந்தான்" (1047-1056)

பாதிப்பாக நடந்த, நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் தனக்குச் சாதமாக்கிக் கூறும் வாய்த்திறமையும், நடந்த நிகழ்ச்சிகளை அப்படியே தலை கீழாகத் திருப்பிப் போட்டுக் காட்சிகளைப் படைப்பதில் வல்லவன் இராசகுலன் என்பதையும் இவன் வார்த்தைகள் தெளிவுறுத்துகின்றன.

சொற் சாதுரியத்துடன் செயல் திறமையும் மிக்கவன் இராசகுலன் என்பதற்குக் கதைப்பாடலின் பல நிகழ்ச்சிகளைச் சான்றாகக் கூறலாம்.

---

35 "அய்யா அவரைப் பொதுவற நம்பிவிட்டீரே
நானு மப்போதே சொன்னேனே சர்ப்பினை செய்வார்க ளென்றே
சர்ப்பினை செய்தா ரழகனுந் தம்பிமார்தானும்
நடுச்சாமத்தில் போனார் துலுக்கன் குறிச்சியி லென்றான்" (465-468)

கரி, பரிகளைக் கவர்ந்து இராசகுலன், வீரபாண்டியனை எறும்பும், ஓலுங்கும் கடிக்கக் காடுகளில் பதுங்கிக் கிடந்து ஓடவைத்த அழகன் பெருமாள், சீவலவரைத் திரும்பவும் சந்தித்துத் தென்காசிக்கு அழைத்து வரும் சாமர்த்தியத்தைக் குறிப்பிடலாம். அழகனிடம் இராசகுலன் கூறுவதாவது: "இளமுறைக் கூறு பகிர்ந்தளிக்கக் குலசேகரர் அழைத்துவரச் சொன்னதால் உங்களை அழைத்து வரவே நானும் வீரபாண்டியனும் படையுடன் வந்தோம். ஆனால் சின்னப் பெருமாளோ கோட்டை புகுந்து அறுத்தார்.

"நாட்டுக் கரிபரியும்விட்டு நாயனென்றே ஒதுங்கிநின்றோம்
நின்றவரி லொருத்தனுண்டோ நேரிசங்கை யெடுத்தவர்கள்
அன்றுபிறங் காட்டாப்புலி ஆள்மேல்முள்ளு கிழித்ததுண்டோ
மீளவுந்தான் குலசேகரர் விட்டாரும்மைக் கூட்டிவர" (1145-1148)

என்று 'படை பரிவாரங்களுடன் வந்து வீரசிகாமணிக் கோட்டையில் தங்கியிருந்தது அழகன் பெருமாள், சீவலமாறனை இளமுறைக்கூறு பகிர்ந்தளிக்க அழைத்துச் செல்வதற்காகவே' என்று அப்படியே புரட்டிப் பேசும் சாமர்த்தியம் வியக்க வைப்பதாகும்.

இவ்வாறு புரட்டிப்பேசி அன்னாரை அழைத்து வரும் இராசகுலன், பேய்க் குதிரை மேலேற்றி அழகன் பெருமாளைக் கொன்றுவிடச் சூழ்ச்சி செய்கிறான். நாராச வாழையை வெட்ட வைத்து, வெட்ட இயலாமல் அவமானப்பட்டு உயிரை மாய்த்துக் கொள்ளும் நிலைக்கு ஆளாக்கவும், திட்டமிட்டுச் செயல்படுகின்றான். ஆனால் அனைத்திலும் தங்கள் தோள், வாள் வலிமையால் அழகன் பெருமாள், சீவலமாறன் ஆகிய இருவரும் வெற்றிவாகை சூடி, மலர்களும், மணிகளும், பிற பரிசுகளும் குலசேகரரிடம் பெற்றுப் பாராட்டை பெற்றுவிட, வாளுடன் இருக்கும்போது அன்னாரை வெல்வது அரிது என்று உணர்ந்து வாளின்றி அவர்கள் வருகை அமைய, தக்கதந்திரம் ஒன்று செய்கிறான் இராசகுலன். நேரே குலசேகரரிடம் சென்று அவன் கூறுவதாவது:

"இன்றிரும்பு நாராசந் தடிபருமத் திணக்கி
ஏற்றிநட்ட வாழைதன்னை மாற்றிவெட்டி விட்டான்
வெட்டிடுவார் வாளெடுத்துக் கிட்டவர லாமோ
வேந்தர்பெரு மானேயொரு அந்தரங்க மல்லவோ
விருப்பமுற்று யோகற்றி லிருப்பவரு நினைப்பார்
வாய்த்ததம்பி மாருமக்கு அந்தரங்க மானால்
வாளோடும் வருந்தொழிலை நாளோடும் நிறுத்தும்
நிறுத்துமொரு கட்டியலை யெடுத்துவரச் சொல்லும்" (1465-1472)

என்று கூறக் குலசேகரரும் தம்பிமாரிடம் வாளோடு அன்றிக் கட்டியல் மட்டும் உடன்கொண்டு வந்து சந்தித்தேகுமாறு கட்டளை பிறப்பித்து விடுகிறார்.

இனித் தென்காசிக்கு மன்னன் குலசேகரரைக் காண அழகனும், சீவலவரும் வரும்போது ஆயுதங்கள் ஏதும் இன்றி வெறும் கட்டியலுடன் மட்டும்தான் வரவேண்டும் என்ற நிலைக்குக் கொண்டு வந்து விடுகின்றான் இராசகுலன். "எத்தனை கோயில்களில் சென்று வழிபட்டாலும் அழகன், சீவலவரை வெல்ல இயலாது. தாழ்வானது வரும் நாளையில் மேலாடுவது அவரே. அப்போது சங்கையாடிய வீரபாண்டியன் கெங்கையாடியாய்ப் போவான். எனவே உயிரோடு இருக்கும் வரை அந்த அழகன், சீவலவர் புவியாளக்கூடாது" (1511-1516) என்று குலசேகரரிடம் கூறக் குலசேகரர் வெகுண்டு, 'உயிர்ச்சேதம் செய்திடுவேன்' எனச் சீற, இராசகுலன் அடுத்த சூழ்ச்சிக்குத் தாவுகிறான். வாளெடுத்து வரமாட்டார்கள் என்ற தக்க சூழ்நிலையை உருவாக்கி விட்டதால் அழகன், சீவலவரைத் தென்காசி அழைக்க மறுபடியும் "இளமுறைக் கூறு தர அழைக்கிறார் குலசேகரர்" என்ற உத்தியையே பயன்படுத்துகின்றான் இராசகுலன். 'இளமுறைக் கூறு கேட்டல்' என்ற அவர்களது துருப்புச் சீட்டை அவர்களுக் கெதிராகவே பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டுப் புலியூர் நோக்கிப் பயணமாகின்றான் இராசகுலன். அதற்கு முன்பே காட்டு யானையைப் பிடிக்கக் குழி அமைப்பதைப் போன்று இலங்கம் ஒன்று அமைத்து அதற்குள்ளேயே இருட்டு வீடொன்று கட்டி, அதனுள்ளே அறுபது மல்லர்களை உள்ளே விட்டுத் தேவையான அறிவுறுத்தல்களையும் வழங்கி விட்டுப் புலியூர் செல்கிறான்.

'இளமுறைக் கூறு பகிர்ந்து கொள்ளக் குலசேகரர் அழைக்கிறார்' என்று அழகன், சீவலவரைப் புறப்படச் சொல்கிறான் இராசகுலன். தீக்கனவு கண்ட அழகனின் திருத்தேவி புறப்பட வேண்டாம் என்று புலம்ப, இராசகுலன் திருத்தேவியை நோக்கி,

"மூத்தகுல சேகரரைப் பாத்திதுவுஞ் சொல்லுமோ
மகவாசை தீத்ததுவுந் தம்பியர்க ளல்லவோ
மன்னவருக் கிவருமிரு கண்ணின்மணி யல்லவோ
கண்ணின்மணி யாய்வளத்த அண்ணரென்று அறிந்து
கரிசனமாய் நினைத்ததென்ன அரசர்குலத் துதித்தும்
பெண்ணின் மதி போகாது" (1598-1603)

என்று பலபடப் பேசுகிறான்.

'இவ்வேளை எழுந்தருளினால் உயிர்ச்சேதம் வரும்' என்று சோதிடப்பலன் கணித்துச் சொன்ன பாலூர்க் கணியானையும் கண்டபடி மிரட்டிப் பேசுகிறான் இராசகுலன்.

"கோவித்துநீ சொன்னதெல்லாங் குலசேகர றறிந்தால்
குற்றம்வரு மானைக்காலா லெத்திவிடப் போறார்
சொல்லா வார்த்தை சொன்னாய் பொல்லாத புலையா
சோதிடஞ்சொல் நாக்கையினிக் காதுடனே யறுப்பேன்" (1619-1622)

என்கிறான். உடன் அழகன் பெருமாள், சீவலவர் புறப்பட்டுத் தன்னுடன் கண்டிப்பாக வருவார்கள்; வரவேண்டும் என்று உறுதியுடன் இராசகுலன் சொற் சாதுரியத்துடன் பாலூர்க் கணியானிடம் கூறுவதாவது:

"வல்லாளர் சிவிகையின்மேல் இப்போ வரப்போறார்
வார்த்தைகத்த தலையாரி பாத்திருடா வென்றான்" (1623-1624)

இராசகுலனின் கபடத்தனத்தை நன்கறிந்த சீவலவர் 'போகவேண்டாம்' என மன்றாடிக் கேட்டுக் கொள்கிறார்.

நீதி கற்ற கணியானின் சோதிடம் பொய்யாகுமோ? தெய்வக் கற்புடைய திருத்தேவியின் உரையை மறுத்தேகலாமோ எனக் கூறித் தடுத்த சீவலவரையும் சினக்கிறான் இராசகுலன்.

"நிறுத்தே யிடைக்கிடை பொன்கொடுத்தாலு மும்மைப்போலே
நீதியுள்ள மன்னவர்கள் நீசர்மொழி கேளார்
கேளார்கள் பெண்புத்தியை உலகாளு மன்னவர்கள்
கேட்டல்லவோ திசைதரனுந் தாட்டிமையை யிழந்தான்" (1643-1646)

என்று தொடங்கி இராமாயண, மகாபாரதக் கதைகளையெல்லாம் சான்றுகளாக எடுத்துக் காட்டித் தன் கொள்கையை நிறுவுகிறான் இராசகுலன். உயர்ந்த இதிகாசங்களைத் தீயதற்குப் பயன்படுத்துகிறான். இதிகாசங்கள் ஆயினும் தீயவர்களுக்குத் தீய உதாரணங்களுக்கே பயன்படுகின்றமை தெரிகின்றது.

"வாழார் வேல்விழிச் சீதைவார்த்தை தனைக்கேட்டு
வனத்திலன்று ராமர்பட்ட சளத்தை அறியீரோ
அறிவுடைய பஞ்சவர்கள் துரோபதைசொல் கேட்டு
அலக்கழிந்து திரிந்ததனை அறியவில்லையோ கண்டீர் (1647-1650)

வாராவிடின் குற்றம் வரும்; குலசேகரரும் மிகவும் மனம் வருந்துவார் என்று குலசேகரரின் பெயரைப் பயன்படுத்தியும், 'நான்

ஒருத்தன் இருக்கும்பொழுது மனம் சலிக்கலாகுமோ? உங்களுக்கு நான் வஞ்சகம் செய்வேனோ? சமபங்கு ஊரைப் பகிர்ந்து தருவேன். உடன் புறப்படுங்கள் என்று நயமாகவும், நம்பும்படியாகவும் கூறுகின்றான் (1652-1661) புழுவைப் போட்டு மீனைப் பிடிப்பதைப் போல் 'ஊர்களைப் பகிர்ந்து கொள்ளல்' என்பதைப் பயன்படுத்தித் தன் வஞ்சகத் தூண்டிலில் வசமாகச் சிக்க வைத்து விடுகின்றான். நம்பி வந்தவரைக் கழுத்தறுக்க நிராயுத பாணிகளாக வந்தவர்களை இலங்கக் கட்டுக்குள் அழைத்து வருகின்றான். சாதுரியப் பேச்சாலும், சாமர்த்தியமான தன் நடவடிக்கைகளாலும் தான் நினைத்ததையெல்லாம் சாதித்து விடுகிறான் இராசகுலன். குலசேகரர் கூறியது என ஊர்களைப் பங்கு போட்டுப் பட்டியல் ஒப்பிக்கும் இராசகுலனின் ஏமாற்று வித்தை அவனின் இரத்தத்தில் ஊறிய குணமாகத் தென்படுகின்றது. (1699-1716)

'முன்பு உங்களுக்குச் சொன்னது போல் கொண்டு வந்து வைத்தேன்' என்று அழகன், சீவலவரிடம் சொல்வது போன்று ஒளித்து வைத்துள்ள மல்லருக்குச் சொல்லி, உடன் வந்த வீரபாண்டியனையும் அழைத்துக் கொண்டு அறையை விட்டு வெளியேறி, வெளியே பூட்டுப் போட்டுச் சங்கிலியிட்ட இராசகுலனின் கொடிய சாமர்த்தியம் மன அதிர்ச்சியைத் தரக்கூடியதாக அமைந்துள்ளது. (1750)

அழகன், சீவலவரின் மரணத்தின் பின் இராசகுலன் பேசும் பேச்சுகள் இரக்கம் என்பதே சிறிது மில்லாத அரக்கமனம் கொண்டவன் அவன் என்பதை உறுதிப்படுத்துகின்றன. தன்னுடன் இணங்கி நடக்காததால் கொன்று பழி தீர்த்த நயவஞ்சகமும் மரணத்தைக் கண்டும் இரங்காமல் நகைத்து நின்ற நரித்தனமும் கற்கும் நல்லுள்ளங்களைக் கலங்க வைப்பனவாகும்.[36]

தன் அருமைத் தம்பியர்களான அழகனையும், சீவலவரையும் தந்திரத்துடன் இலங்கத்துள் அடைத்துக் கொன்றதைத் தூதுவன் மூலம் அறிந்து புலம்பும் குலசேகரப் பெருமாளின் முன்நின்று இராசகுலன் கூறும் வார்த்தைகள் சம்பவங்களைத் தனக்கேற்றவாறு

---

36 "என்பா லிடர்விளைத்த வன்பா லுயிரிழந்தா ரென்பார்
சற்றும் இணங்கினார்க ளில்லை பிணங்கினார்க ளிவரென்பார்".
(2004-2005)

"பான்ற பொறியிலிரு கான்றபொறி புகுந்தாப்போலே
அகப்பட்டா ரிவரிலங்கைக் கட்டிலென்று நின்றுநகைத்தார்
அவிசேகத் தலைவரிந்தச் சாகத்துடி துடித்தாரென்றான்" (2008-2011)

சாமர்த்தியமாகத் திசைதிருப்பிக் கூறுவதில் வல்லவன் இவன் என்பதைப் புலப்படுத்துகின்றன. இறுதியில் நடந்தவைகளுக்கு மன்னன் மீதே குற்றம் சாட்டியும், வீரபாண்டியனைத் தூக்கி வைத்தும் பேசும் இராசகுலனின் மனத்துணிச்சல், இவன் மரணத்துக்குக் கால்கோளுவதாகவும் அமைந்து விடுகின்றது.

"நன்றா யவரைத் தம்பிமா ரென்றீர்
நடத்திய கவட மொருத்தரு மறியார்
ஒருத்தரு மறியாமல் நடந்தார்
உமக்காக முன்னழைத்திடப் போனோம்
கருத்துடனே வந்து புகுந்து
கள்ளவெட்டாய் வெட்டின தறிவீர்
அறிந்திருந்து பகையை வளத்தீர்
அவராலுயி ரிறந்திட யிருந்தீர்
சிறந்ததம்பி வீர பாண்டியனார்
செருத்தாரது புத்திதா னென்றார்" (2149-2158)

மிகுந்த மனத்துணிவும், சொற்சாதுரியமும், செயல் திறனும், மிகச் சிறந்த நடிப்பாற்றலும், நிறைந்த முன் யோசனையும், முன் கூட்டித் திட்டமிடலும், மன்னனின் அணுக்கத் தொடர்புடைமையும், ஆளுமைத் திறனும் என்ற அனைத்து நற்பண்புகளும் தீமை புரிவதையே குறிக்கோளாகக் கொண்ட தீயவனுக்கு அமைந்து விட்டதால், விழலுக்கு இறைத்த நீராக அனைத்தும் வீணாகி விட்டதைக் காண முடிகின்றது. இத்தகு அனைத்து நற்பண்புகளும், நல்லவன் ஒருவனுக்கு அமைந்து நற்செயல்களுக்குப் பயன்பட்டிருந்தால், பல நலன்கள் விளைந்திருக்குமே என்ற ஏக்கத்தையும், ஆதங்கத்தையும் கதைப்பாடலைப் படிப்பவர்கள் அடையாமல் இருக்க இயலாது. அதே போழ்து இராசகுலனைக் குலசேகர மன்னவர் வெற்றி வடி வாளின் உறை கழற்றி, இரு கூறாக வீழுமாறு வெட்டி வீழ்த்தியதும், நிம்மதிப் பெருமூச்சை வரவழைக்கிறது என்பதும் உண்மை.

குலசேகரரின் அன்புத் தம்பியர்களாக அமைந்திருந்த அழகனும், சீவலவரும் இளமுறைக்கூறு கேட்டுப் பெற்றது போல், தங்களின் மிகுந்த வலிமை காரணமாகத் தென்காசியையும் கைப்பற்றி விட்டால் தங்கள் கதி 'அதோகதி' யாக ஆகிவிடுமே என்ற அச்சத்தாலேயே அந்த அன்புத் தம்பியரை ஒழித்துக் கட்டத் திட்டமிடுகின்றனர் இராசகுலனும், வீரபாண்டியனும். சதித்திட்டம் தீட்டி மரணதேவனின் கையில் அவர்களை ஒப்படைத்து பின்னர்,

"உனக்கின்று காசிதந்தேன்" (2055)

என்று வீரபாண்டியனிடம் இராசகுலன் கூறுவதில் மிகுந்த மமதையும், செருக்கும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. இந்தச் செருக்கும், அகங்காரமுமே அவன் அதிபுத்திசாலித்தனத்துடனும், சொல்வன்மையுடனும் இருந்தபோதிலும் இறுதி முடிவு எய்தக் காரணமாகி விடுகின்றன. குலசேகர மன்னரிடமும் இதே ஆணவத்துடனும், செருக்குடனும் பேசியதே அவன் உயிரிழக்கக் காரணமாகவும் ஆகி விடுகின்றது.

## வீரபாண்டியன்

தென்காசி மன்னவரான குலசேகரப் பெருமாளின் உடன் பிறந்த தம்பியான வீரபாண்டியன் கதையின் இரண்டாவது எதிர் நிலைத் தலைவனாக அமைந்துள்ளான். அதிகமாக உரையாடாத பாத்திரமாக முதல் எதிர்நிலைப் பாத்திரமான இராசகுலனின் 'முதுகுக்குப் பின்னால் இருந்து கொண்டும், சில சமயம் இராசகுலனின் கைப்பாவையாக, கைப்பொம்மையாகச் செயல்படும் பாத்திரமாகவும் உள்ளான். இவன் குலசேகரரிடம் படைத் தளகர்த்தர் பதவியை வகித்தான் என்பது கதைப்பாடலில் குறிப்பிடப்படுகின்றது. "தளகர்த்தன் வீரபாண்டியன்" (518) ஆனால் தளகர்த்தனாக இருந்தும் அப்பதவிக்குரிய வீரமில்லாதவனாகச் சித்திரிக்கப் பெற்றுள்ளான். நெஞ்சில் வீரமேதுமில்லாத பாதகன் வீரபாண்டியன் (1507) எனப்பாடலாசிரியர் குறிப்பிடுகிறார். குலசேகரருக்குப் பின்னர் தென்காசியை ஆளும் முழு உரிமையையும் பெற உரியவன் என்ற முறையில், அந்த உரிமை அழகன், சீவலவரால் பறிக்கப்பட்டு விடுமோ என்ற அச்சத்தால், இராசகுலனுடன் சேர்ந்து சதியில் கை கோர்க்கிறான் வீரபாண்டியன். இராசகுலனே வீரபாண்டியனுக்குத் தென்காசிப் பட்டம் பெற்றுத் தருவதென வரிந்து கட்டிக் கொண்டு செயல்படுகின்றான். வீரபாண்டியன் நேரடியாகக் குலசேகர மன்னரிடம் தனக்கு வேண்டியதைக் கேட்பதோ, போராடுவதோ, சாதாரணமாக உரையாடுதலோ கூடக் காட்சிகளாக இடம் பெறவில்லை. இராசகுலனே வீரபாண்டியனின் முழு ஆதரவாளனாகவும், அண்மையானவனாகவும் காட்டப்பட்டுள்ளான்.

அழகன், சீவலவன் தொடர்பான காரியங்களில் குலசேகரர் ஒன்றும் பிடி கொடுக்காமலும், விட்டுக் கொடுக்காமலும் பேசிய காரணத்தாலும், இளமுறைக் கூறு தருதலில் உறுதியாக இருந்ததாலும், இராசகுலனுடன் வீரபாண்டியன் தனியிடத்துச் சந்தித்துப் பேசுகிறான். அழகனையும், தம்பி சீவலவரையும் சதிசெய்து கவிழ்ப்பது என்றும், திருக்குற்றாலர் மீது ஆணையிட்டு ஒருவருக்கொருவர் சம்மதித்துச் சதியில் குதிக்கின்றனர். இவ்விஷயத்தில் இறுதி வரை இருவரும்

இணைபிரியாது சூழ்ச்சிகள் செய்து, எண்ணியதை ஈடேற்றியும் விடுகின்றனர். ஆனால் குலசேகரரின் கூரிய வாளுக்கு இரையாகி இராசகுலன் வெட்டுப்பட்டு மாள்கிறான். வீரபாண்டியனையும் குலசேகரர் தன் கூரிய வார்த்தைகளால் குத்திக் கிழிக்க, வீரபாண்டியன் தென்காசி விட்டு நன்காசி நோக்கிச் சென்றதாய்க் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. தென்காசி ஆள ஆசைப்பட்டவனுக்கு, இறுதிப் பயணமான வடகாசிப் பயணமே கிடைத்தது.

### சின்னத்தம்பி

அழகன், சீவலவரின் கடைக்குட்டித் தம்பியாகச் சின்னத்தம்பி காட்டப்பட்டுள்ளான். வாலிபப்பருவம் அடையாத, அதேசமயம் விவரம் அறியாத சின்னஞ்சிறு பையன் என்றும் கருத இயலாத ஒரு பருவத்தில் சின்னத்தம்பி இருந்திருக்கவேண்டும். இலங்கத்துள் அடைபட்டு அழகன், சீவலவர் தற்கொலை செய்து மடிந்துவிட, இச்செய்தியை அறியாத சின்னத்தம்பி விளையாடப் புறப்பட்ட திருக்கோலங்கள் கதைப்பாடலில் விரிவாகப் பேசப்பட்டுள்ளன.

தாதிமார் சின்னத்தம்பியை அணி செய்த முறையும், அவன் ஏறிச் செல்வதற்கெனக் கம்புளிக்கிடாயை அணி செய்த விதமும், சின்னத்தம்பி அக்கிடாயின் மீதேறி வீதி உலா வந்த காட்சிகளும் விவரிக்கப்பட்டுள்ளன. (2211-2264)

அண்ணர்கள் மரணமடைந்த செய்தியைக் கேட்டவுடன் கன்று கதறினாற் போலழுது, பெற்ற மாதாவினும் பேணி வளர்த்த திருத்தேவியரையும், வெட்டுமாறனையும் கட்டிக் கொண்டு புலம்புகிறான் சின்னத்தம்பி. 'என்னை மறந்தீரோ அண்ணரே! எனக்கு மதியென்ன சொல்லுங்கள்! அண்ணரைவிட்டு இனி உயிருடன் இருப்பேனோ! ஆவி விடுவேன்!' என எண்ணித் துணிகிறான். அண்ணராகிய மன்னர்களுக்கு இறுதிக் கடன்களை ஆற்றிவிட்டுத் திருத்தேவியரும் உடன்கட்டையேறியபின், தான் கூறியபடியே உயிரை மாய்த்துக் கொள்கின்றான் சின்னத்தம்பி.

"மூட்டுஞ் சிறுவாளை உறைகழத்தி
முந்த நிலத்திலே தானிறுத்தி
பாட்டில் விழுந்ததை ஒருவர் காணார்
பட்டானே சின்னத் தம்பியென்றார்" (2442-2445)

என அமைந்துள்ளது. இவ்வாறு இராசகுலன், வீரபாண்டியன் என்ற இருவரின் நயவஞ்சகச் செயல்களால் நல்லுயிர்கள் பல மடிந்ததைக் கதைப்பாடல் நயம்பட எடுத்துரைத்துள்ளது.

## கதைப்பாடல் காட்டும் மேலும் சில முக்கியமான கருத்துகள்

கதைப்பாடல் குறிப்பிடும் முக்கியச் செய்திகள் இதுவரையும் விரிவாகப் பேசப்பட்டன. இக்கதைப்பாடலில் காணப்படும் மேலும் சில முக்கியமான கருத்துகளை இனிக் காணலாம்.

### பாரத மகா காவியம் போன்றது

“அரியபுகழ் பாரதப்போர்க் கதைபோலே
இக்கதையை யறிந்தே பாட” (5-6)

எனக் கதைப்பாடல் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மகாபாரதக் கதை எவ்வாறு பெரியதந்தை, சிறியதந்தை பிள்ளைகளான கௌரவர்கள், பஞ்சபாண்டவர்கள் இடையிலான போர் பற்றிப் பேசுகின்றதோ அதே போன்று அழகன் பெருமாள் கதைப்பாடலும் தாயாதிகளுக்குள் நடந்த பூசலையும், புகைச்சலையும் பற்றிப் பேசுவதால், ஆசிரியர் பாரதப் போர்க் கதை போன்று இந்த அழகன் பெருமாள் கதைப்பாடலும் அமைந்துள்ளது என ஒப்பிட்டுப் பேசியுள்ளார்.

“சொல்லவல்ல காவியநூல் சோராமல் - நல்ல குணபதியே
ஐங்கரனே குஞ்சரனே செஞ்சொல் கணபதியே
இக்க தைக்குக் காப்பு” (14-16)

என்கிறார்.

### கதைப்பாடலன்று; காவியம்

இது ஒரு கதைப்பாடலன்று; காவியம் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

“வல்லபுகழ்த் தென்காசி வடிவழகன் தன்கதை” (13) என்பதால் இக்கதைப்பாடலின் கதைத்தலைவன் அழகன் பெருமாள் என்பதும், இவரது பெயராலேயே இக்கதைப்பாடற் தலைப்பு அமைந்திருப்பதும் புலனாகின்றது.

### வீர விளையாட்டுகள்

பேய்க்குதிரையை அடக்குதல் என்பது வீரத்துக்கு, வீரர்களுக்கு உரிய ஒரு சவாலாக அக்காலகட்டத்தில் கருதப்பட்டமை தெரிகின்றது. நாட்டார் கதைப்பாடலான ‘சின்னத்தம்பி கதை’ என்பதிலும் அடங்காத பேய்க்குதிரை ஒன்றைச் சின்னத்தம்பி அடக்கிக் காட்டித் தன் வீரத்தை நிரூபித்து, ஆட்சியாளரிடம் தக்க பரிசும், பாராட்டும் பெற்றமை விவரிக்கப்பட்டுள்ளது.[37]

---

37 The wandering Voice, Ed. R. Nirmala Devi, p. 269-362.

தேசிங்கு ராஜா கதையிலும் தேசிங்கு டில்லி பாதுஷாவிட மிருந்த அடங்காத குதிரையை அடக்கி ஆண்ட செய்திகள் விவரிக்கப் பட்டுள்ளன. சங்க இலக்கிய ஏறு தழுவுதலின் எச்சங்கள் இவை எனக் கருத இடமுள்ளது.

மரத்தை வெட்டி வீழ்த்தல், வேருடன் பிடுங்குதல் என்பனவும் வீரத்துக்கு இடப்பட்ட சவாலாக அமைந்திருந்தமையைக் கதைப்பாடல் தெரிவிக்கிறது. வீரச் சவாலில் வஞ்சகம் புகுந்து விளையாடுதலை வாழை மரத்துக்குள் இரும்புக் கம்பியைச் செருகி வைத்து வெட்டக் கூறியமையால் புலனாகின்றது. இதே போன்றதொரு வஞ்சகக் காட்சியைக் 'கோபல்ல புரத்து மக்கள்' என்ற நாவலும் காட்டுகின்றது.[38] வழக்கமாக ஒற்றை ஆணி வேருடன் மட்டும்உள்ள மரத்தைப் பிடுங்கி வந்து நட்டு, அதைப் பிடுங்கச் செய்யும் வீரவிளையாட்டில், வழக்கத்துக்கு மாறாகப் பக்கவேர்கள் மிகுந்த ஒரு மரத்தைப் பிடுங்கி வந்து நட்டுக்கற்களால் கெட்டித்து புதைத்துக் கதைத் தலைவனைப் பிடுங்கச் சொல்வதும், வஞ்சகம் அறியாத அத்தலைவன் உயிரைக் கொடுத்து உன்னி உன்னி அம்மரத்தைப் பிடுங்க முயல்வதும் இறுதியில் பிடுங்கி விட்டாலும், நெஞ்சில் இரத்தம் கட்டி நோயாளியாகப் படுத்தபடுக்கையாகி, இறுதியில் மரணமடைந்து விடுவதும் அதில் விவரிக்கப்பட்டுள்ளது.

## சிறுவர் விளையாட்டு

கோழிச் சண்டை, ஆட்டுக்கிடாய்ச் சண்டைகள் பண்டு தொட்டுத் தமிழகத்தில் வீரவிளையாட்டுகளாக ஆடப்பட்டு வருபவையாகும். சங்க இலக்கியங்கள் இத்தகு பொழுதுபோக்கு வீரவிளையாட்டுகளைப் பற்றிப் பேசுகின்றன. இதற்காகப் பயன் படுத்தப்படும் கோழி, ஆட்டுக்கிடாய்கள் சிறப்பான முறையில் தக்க பயிற்சிகளுடன் வளர்க்கப்படும். இத்தகு ஆட்டுக்கிடாய்களின் மீது இளமைப்பருவத்திலேயே சிறுவர்கள் ஏறி விளையாடுவதை இக்கதைப்பாடல் காட்டுகின்றது. (2231-2264) கம்புளிக்கிடாயை அணிசெய்வதும், ஏறி உலா வருவதும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

## இறை நம்பிக்கை

குற்றாலர் மீது திருவாணை வைக்கும் வழக்கத்தைக் கதைப்பாடலில் உள்ள பல பாத்திரப் படைப்புகளிலும் காணமுடி கின்றது. கதைத் தலைவன், துணைத்தலைவன், எதிர்நிலைத் தலைவன்,

---

38 கி. ராஜநாராயணன், பக். 18-34

எதிர்நிலைத் துணைத்தலைவன் என்ற நல்ல, தீய பாத்திரப் படைப்புகள் அனைத்தும் திருக்குற்றாலர் மீது திருவாணை கூறும் பக்திப் போக்கைக் கதைப்பாடல் பல இடங்களில் குறிப்பிட்டுச் செல்கின்றது. சமய நம்பிக்கை மக்களிடம் பரவலாகக் காணப்பட்டமையை இது தெளிவுபடுத்துகின்றது.

"இளமுறைக் கூறு கேட்கும் அழகனும் சீவலவரும் இளமுறைக் கூறு பெற்றுப்பின் தென்காசியையும் பிடித்து நம்மை வெட்டித் துரத்திவிடுவார்கள். எனவே அவர்களைச் சதி செய்து கொல்ல வேண்டும்" என்று இராசகுலனும், வீரபாண்டியனும் சதிசெய்யச் சம்மதித்துக் குற்றாலர் மீது திருவாணையிட்டுக் கொள்வதைக் கதைப்பாடல் காட்டுகின்றது.[39]

அழகன், சீவலவரைப் பிடிக்கப் பெரும் படையுடன் வருகின்றனர் இராசகுலனும், வீரபாண்டியனும். இராசகுலன் சிறுபடையுடன் இருக்கும் அழகன், சீவலவரை எள்ளி நகையாடு கின்றான். தம் பெரும் படையுடன் மோதி அச்சிறு படை வெற்றி ஈட்ட இயலாது; அத்துடன் குற்றாலர் திருவருளும் நமக்கு உண்டு என்றும் பேசுகின்றான். தீயவனின் தீய செய்கைக்கும் இறைவன் திருவுளம் நல்குவார் என உறுதியாக நம்பும் இராசகுலனின் மனப் போக்கு அவனின் பக்திப் பரவசத்தை வெளிப்படுத்தினாலும் கதை படிப்பவர்களிடையே பரிகாசத்தையும் வரவழைப்பதாக உள்ளது.[40]

சீவலவரிடம் தோற்றோடிய இராசகுலன் திரும்பவும் அவர்களை அழைத்து வரச் செல்கிறான். "படை கூட்டி வந்து வீரசிகாமணிக் கோட்டையில் தங்கியிருந்தது இளமுறைக் கூறு தர அழைத்துச் செல்வதற்காகவே" என்று ஒரு பச்சைப் பொய்யை அவிழ்த்து விட்டுத் திரும்பவும் தென்காசிக்குக் குலசேகரர் அழைத்து வரச் சொல்கிறார்' என்று அழைக்கிறான். அப்பொழுது தன் கருத்துக்கு வலிமை சேர்க்கத் திருக்குற்றாலரையும் துணைக்கு அழைத்துக் கொள்கிறான்.

---

39 "சதிக்க வேணு மெனக்கது சம்மதம்
சம்மத மென்றே ராசகுல தேவன்
தகைக்கொப்பா யந்த வீர பாண்டியனுந்தான்
அம்மை பாகர் குற்றாலர் திருவாணை
அஞ்சாதே யென்று. சத்தியமாய்ச் சொன்னான்" (362-366)

40 "தேவர்தொழுங் குற்றாலர் திருவுளமுண் டுமக்கு
சிக்கிக்கொண்டார் நாளை யொருமிக்கப்படப் போறார்
வாவுபரி முப்பது சேவுகர்நூத் தன்பதுபெயர்
வந்துநம்மோ டெதிர்த்திடிலென் வல்லமையைப் பாரும்" (599-602)

"பாக்கிய முத்தை யெனக்களித்தீர் பாலுஞ்சோறு முண்ண
வைத்தீர்
உண்டு சுகிக்கவைத்தீர் உமக்குரண்டு பண்ணுவேனோ
அண்டர்தொழுங் குற்றால றறிவாரெந்தன் மனக்கருத்து" (1135-1137)

என்கிறான்.

வீரபாண்டியனுடன் கூடிச்சதி செய்யச் சம்மதித்தும் குற்றாலர் மீது ஆணையிடுகிறான் இராசகுலன்.

"அம்மைபாகர் குற்றாலர் திருவாணை
அஞ்சாதே யென்று சத்தியமாய்ச் சொன்னான்" (365-366)

என உள்ளது.

அழகனும், சீவலவரும் கூடத் திருக்குற்றாலர் மீது இறை நம்பிக்கை கொண்டிருந்ததை அவர்களின் வாய்மொழி மூலமாகப் பாடலாசிரியர் ஆங்காங்கு சுட்டிச் சென்றுள்ளார்.

தங்களைப் பிடிக்கப் படை கொண்டு வந்த நிகழ்ச்சியைச் சுட்டி, இராசகுலனிடம் மன ஆதங்கத்தை வெளிக்காட்டிக் கொள்ளும் அழகன்,

"இறைவர்திருக் குத்தாலர் இத்தனையுங் கண்டிருந்தார்" (1129)

என உரைப்பதைக் காணமுடிகின்றது. அழகன் வணங்கும் உயரிய தெய்வமாகக் குற்றாலர் திகழ்ந்தமையை இக்கூற்று வெளிப்படுத்துகின்றது.

இதுபோன்று சீவலவரும் குற்றாலர் மீது மிகுந்த பக்தி கொண்டிருந்தமை தெரிய வருகின்றது. போருக்குப் புறப்படும் சீவலவர் தன் அண்ணர் அழகன் பெருமாளிடம் கூறும் ஆறுதல் வார்த்தை களாவன:

"அடியேன்போய்ச் செயங்கொண்டு விடியுமுன்னே வருவேன்
படைமுகத்தி லெனக்கவசம் வந்தாலும் ஒமக்கு
பன்னுதமிழ் மாறன் முன்னுதவி யுண்டு
உதவிசெய்வார் குற்றாலர் நமக்கவசம் வரவொட்டார்"
(800-803)

என்று சொல்வதாக உள்ளது.

மேலும் இலங்கத்துள் அடைபட்ட பொழுது, 'கையில் உடைவாள் இல்லாமல் வந்து அகப்பட்டோமே' என நொந்து

புலம்பும் சீவலவர், தான் வணங்கிய திருக்குத்தாலத் தெய்வமும் கைவிட்டதே எனக் கதறுவதாக உள்ளது.[41]

அழகன், சீவலவர் மாண்டு கிடப்பதைக் கண்ட திருத்தேவியர்,

"தேகமொண்ட குறும்பலவில் பூசைகொண்ட குற்றாலர்
திருவுளமு மிவ்வளவாய்ப் போச்சோ" (2313-2314)

என்று திருக்குற்றாலரை விளித்துப் புலம்புவதாகவும் உள்ளது.

இவ்வாறு இக்கதைப்பாடற் பாத்திரங்களின் உற்ற தெய்வமாகத் திருக்குற்றாலநாதர் திகழ்ந்தமையைப் பாத்திரக் கூற்றுகள் புலப்படுத்து கின்றன. அக்காலகட்டத்தில் தென்காசிப் பகுதி மக்களின் குல தெய்வமாகக் குற்றாலர் இருந்தார் என்பது உறுதிப்படுகின்றது.

## சோதிட நம்பிக்கை

சோதிடத்தில் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தது என்பதைக் கதைப்பாடல் சிற்சில நிகழ்ச்சிகள் மூலம் ஆங்காங்கு சுட்டிச் செல்கின்றது. இந்தக் கதைப்பாடலின் தலைவனான அழகன் பெருமாள் சோதிடப் பலன் பார்த்துக் கூறுவதில் வல்லவனான கணியான் ஒருவனை அமர்த்தியிருந்தான் என்பது தெரிகின்றது. இந்தக் கணியான் சோதிடம் கணித்துச் சொல்வதில் வல்லவன் என்பதும், இவன் 'பாவூர்' என்ற ஊரைச் சேர்ந்தவன் ஆதலால், "பாவூர்க்கணியான்" என்றே அழைக்கப்பட்டமையும் புலனாகின்றது.

"படிவாங்கி யுண்டிருக்கும் பாவூர்க் கணியான்" (583)

எனக் குறிக்கப் பெறுகிறான். அரசக் காரியங்கள் அனைத்தும் தொடங்கப்படுமுன் நற்காலம், நற்பலன் பார்த்துச் செய்யப்பட்டன என்பதும், இதற்கென அச்சோதிடனுக்குப் 'படி' அளிக்கப்பட்டது என்பதும், அவன் அரண்மனையிலேயே ஒரு அங்கத்தினனாகத் தங்கியிருக்கவும் கூடும் என்பதும் புலனாகின்றது. 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்பதன்படி, மக்களும் சோதிடப்பலன் பார்த்துச் செயல்படுவதில் மிகுந்த நம்பிக்கை கொண்டிருக்கக் கூடும் என்றும் அனுமானிக்க இயலுகின்றது.

---

41 "பூட்டிய வாளுமென் கையிலிருந்தாக்கா லையா -உம்மைப்
பூலோக மாள அரசுக்கிருத்துவே னய்யா
காட்டிக் கொடுத்தது தெய்வம் நமக்கில்லை அய்யா" (1800-1803)

இராசகுலனும், வீரபாண்டியனும் கூடிச் சேர்ந்து சதி செய்ததை அறிந்ததும், இனிப்புலியூரில் தங்கியிருக்கலாகாது என உணர்ந்து, துலுக்கன் குறிச்சிக்குப் புறப்பட்டுப் போக எண்ணம் கொள்கிறார் அழகன். செல்வதற்கு முன் கணியானைக் கேட்க. அவனும் 'செல்வது நல்லதே' எனக் காலம் கணித்துக் கூற, அதன்படி துலுக்கன் குறிச்சி சென்றதாகக் கதைப்பாடல் காட்டுகின்றது. (582-584)

சீவலவர் போருக்குப் புறப்படும் முன்னும் பாவூர்க் கணியானிடம் பூப்பரிசம் கேட்டுச் செல்லலாம் என்றதும், நாள் கணித்துச் சென்றதாயும் காட்சிகள் இடம் பெற்றுள்ளன.

"போர்ந்துநின்று பாவூருக் கணியானை நோக்கி
பூப்பரிசங் கேட்பளவில் நாள்பார்த்துச் சொல்லுவான்
வேந்தர் பெருமாளேயொரு விண்ணப்பங் கேளும்
வெத்திதரு மிராகுதைய மத்திசையி லிருந்தான்
இருந்தபலன் காச்சிமணம் போரில்வெத்தி கொடுக்கும்
எழுந்தருளு மென்னமன மகிழ்ந்துமுடி துலக்கி" (810-815)

புறப்பட்டதாக உள்ளது. இதன்படி போரில் வெற்றியையும் ஈட்டுகிறார் சீவலவர்.

போரில் தோற்றோடிய இராசகுலன், திரும்பவும் புலியூர் வந்து அழகன், சீவலவரைத் தென்காசிக்கு அழைக்கிறான். அப்பொழுதும் பாவூர்க் கணியானிடம் பலன் பார்க்க, அவன் 'செல்லலாகாது' என உரைக்க மீறிச் செல்கின்றனர்.[42] சென்ற இடத்தில் இராசகுலனின், வஞ்சகத்துக்கு ஆட்பட்டு 'பேய்க்குதிரை அடக்கல்' 'நாராச வாழை வெட்டல்' என்ற வீரச் சவால்களை ஏற்க வேண்டிய நிர்ப்பந்தங்களுக்கு ஆளாக்கப்படுகின்றனர்.

இலங்கத்துள் அடைத்துக் கொல்ல ஏற்பாடுகள் செய்து விட்டு, இளமுறைக் கூறு தரக் குலசேகரர் அழைத்து வரச் சொன்னதாகக் கூறிப் புறப்பட்டு வருமாறு அழைக்கிறான் இராசகுலன். அப்பொழுதும் பாவூர்க் கணியான், 'தற்போது சென்றால் உயிருக்கு இறுதி நிகழும்' என்று கணித்துக் கூறுகிறான்.

---

42 ". . . . . விலகினன் பாவூர்க்கணியான்
கணியான்சொல் கேளாமல் காவலவ ரிருபேரும்
துணிவுடனே யெழுந்திருந்து சோமத்துடன் போகலுற்றார்" (1157-1159)

"வந்துதெண்டமாய் விழுந்து பாலூருக் கணியான்
மாதிடங் கொண்டேமிகுந்த சோதிடங்கள் சொல்லுவான்
முந்துதலைச் சூலமும்நீர் பிறந்தநாளு மின்று
முகிழ்த்தமதில் செவ்வாயுஞ் சூரியனு மிருந்தான்
செவ்வே வியாழமும்வந் தட்டமத்தி லிருந்தான்
திருந்துசனி சென்மத்தி லிருந்தது நன்றாமோ
இவ்வேளை யெழுந்தருளி லுயிர்ச்சேதம் வருங்காண்" (1609-1615)

என்று எச்சரிக்கிறான். கேட்ட இராசகுலன், 'சோதிடஞ் சொல்லும் நாக்கையினிக் காதுடனே அறுப்பேன். குலசேகரரிடம் கூறி யானைக் காலில் இடறச் செய்து உன்னைக் கொல்லுவேன்' என்று அச்சுறுத்துகின்றான். (1620-1622) என்றாலும் தான் கணித்த சோதிடக் கணிப்பு சரியாகப் பலிக்கும் என்று திடமாக நம்பிய பாலூர்க் கணியான்,

"பாத்ததுவு மின்றுமும்மைக் காத்ததுவு மின்று
பனிக்காலு மதிமுகத்தை யினிக்காண மாட்டேன்
கீர்த்திபெற மன்னவன்றன் கோவிற்கால் புகுந்தால்
கேடுவருந் தம்பிவந்து வீடுபுக மாட்டார்" (1625-1628)

என்று உறுதிபடச் சொல்கிறான்.

சோதிடக்கணிப்பின் சோகத்தை உணர்ந்த சீவலவரும், அண்ணரின் பயணத்தைத் தடுத்து நிறுத்தத் தொழுது இறைஞ்சுகிறார்.

"நீதிகத்த கணியான்றன் சோதிடம் பொய்த்திடுமோ
இன்றுசெல்லவும் வேண்டாம் சொம்பகிர வேண்டாம்
இளமுறைக் கூறுநமக்குத் தலைமுறைக்கும் வேண்டாம்
வேண்டா மென்றிருங்கருமம் வேணுமென்று நினைந்தால்
மெத்தப்பமு தாகுமது புத்திப்பிழை கண்டீர்" (1634-1638)

என்று பலவாறு எடுத்துரைத்துக் கெஞ்சுகிறார். எதனையும் ஏற்காமல், 'அண்ணர் அழைக்கிறார். எனவே செல்லவேண்டும்' என்ற ஒன்றையே மனதில் ஏற்றுப் பயணப்பட்ட அழகன், இலங்கத்துள் அடைபட்டுத் தன் ஆருயிரை இழக்கிறான். தன் தம்பி சீவலவர் மரணத்துக்கும் காரணமாகி விடுகிறான். சோதிடனின் கணிப்பை மீறி வந்து, மரண வாய்ப்பட்டமைக்காக வருந்திச் சோதிடப் பலனின் உண்மையை உணர்ந்து, அழகன் தன் தம்பியின் மரணத்தின் போது கணிப்பை மீறிப் புறப்பட்டு வந்தது தவறு என்று உணர்ந்து பேசுகிறான். 'நாட்டில் கணியான் சோதிடன் கெட்டிக்காரன்' (1935) என்று புகழ்ந்து பேசுகின்றான். இதன் மூலம் காலக்கணிப்பறிந்து, எதிர்

வருவதை உணர்ந்து, சரியான முறையில் சோதிடங் கணிப்பவர்கள் நாட்டில் இருந்ததையும், நாடாளும் மன்னர்களும் காலக்கணிப்பறிந்து காரியங்களைச் செய்ததையும் இக்கதைப்பாடல் மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது.

**கனவு, சகுன நம்பிக்கை**

தீக்கனவு, தீச்சகுனம் போன்றவை, தீயவை நடக்க இருப்பதன் முன் அறிகுறி என்று மக்கள் திடமாக நம்பியதைக் கதைப்பாடல் வெளிப்படுத்துகின்றது. உள்ளுணர்வுகள், நிறைவேறாத ஆசைகள், அச்சங்கள், ஆர்வங்கள் ஆகியவற்றின் மனவெளிப்பாடாகக் கனவுகள் அமைவதை அறிவியலும் ஒத்துக் கொள்கின்றது. அழகன், சீவலவருக்கு உயிராபத்து நேர இருப்பது, தீக்கனவாக அன்னாரின் திருத்தேவியருக்குத் தோன்றியதாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

"கொழுந்து விட்டுப் படர்ந்த கொடி நிலத்தில் விழுந்து புரளவும், அதைத் தாங்கிய கொழுகொம்பு முறிந்து விழவும் கண்டேன். கொம்புடைய மதயானை கம்பீரமாக நடந்து வந்தது; வந்த அது குழியில் விழுந்து பிளிறவும் கண்டேன். இருபெரும் புலிகள் கூண்டிலகப்பட்டு நிற்க, அதனைச் சேவர்கள் குத்திக் கொன்று கூண்டைச் சூழ்ந்து நிற்கவும் கண்டேன். தாமரையை நுகர்ந்த இரண்டு வண்டுகள் பறந்து போகாமல், தாமரைமலர் குவிந்து மூடிக் கொள்ளவும் கனவு கண்டேன். அத்துடன் மணித் தோரணம் அறுந்து விழவும், கூந்தலில் சூட்டிய மலர்மாலை அறுந்து விழவும், கூந்தலிலும், முந்தானையிலும் தீப்பற்றி எரியவும் கண்டேன். எனவே நல்ல உயிர்க்கு அழிவு வரும் எனத் திருத்தேவி மன்னரிடம், தான் கண்ட கனவு பற்றிக் கூறுகின்றாள். (1560-1576 இதனை மீறிச் செல்கின்ற அழகன், சீவலவர் உயிர் துறக்க நேரிடுகின்றது. பின் வருவதை முன்னுணர்த்தும் ஒரு உத்தியாகக் காவியங்களிலும், இதிகாசங்களிலும் பின்பற்றப்பட்டுள்ள கனவு உத்தி, 'இது ஒரு காவிய நூல்' என்று பாடலாசிரியரால் எடுத்தோதப்படும் இந்நாட்டுப் புறக் கதைப்பாடலில் சீராகப் பின்பற்றப்பட்டுள்ளது எனலாம்.

சகுனம் பார்க்கும் நம்பிக்கையும் மக்களிடையே காணப் பட்டமையைக் கதைப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

வீரசிகாமணிக் கோட்டையை வேவுபார்க்க ஒற்றன் மாறுவேடம் பூண்டு சென்றபோது, கருங்காகம் வலம் ஏகக் காணுகின்றான். அவன் மேற்கொண்ட பயணமும், காரியமும் வெற்றி அடைந்தது எனக் கதைப்பாடல் சுட்டுகின்றது. (642-643)

அடுத்ததாக, இராசகுலனின் அழைப்பை ஏற்றுத் தென்காசி சென்றால் உயிராபத்து நேரும் என்று கணித்துச் சொன்ன கணியான், சகுனமும் சரியில்லாததைக் கூறி எச்சரிப்பதாகக் கதைப்பாடல் கூறுகின்றது.

"கீர்த்திபெற்ற மன்னவன்றன் கோவிற்கால் புகுந்தால்
கேடுவருந் தம்பிவந்து வீடுபுக மாட்டார்
வீடுபுகும் பூனைகுறுக் கோடுவது பாரும்
மேவுங்கருங் காகமிடம் போவதும் பாரும்" (1627-1630)

எனக்கூறிக் கணியான் தடுப்பதாக உள்ளது. தீச்சகுனம் கண்டும் அதைப் புறந்தள்ளி விட்டுச் செல்லும் அழகன், சீவலவர் ஆவி துறக்கின்றனர். ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் சோதிடம் பார்த்தல் கனவு, சகுனம் போன்ற நம்பிக்கைகளைத் தூக்கி நிறுத்தும் கதைப் பாடல் இது எனக் கூறலாம்.

## உடன்கட்டையேறல் வழக்கம்

அழகன் பெருமாள், சீவலமாறன் ஆகிய இருவரையும் அடக்கம் செய்யும் பொழுது, திருத்தேவியர்களையும் அவர்களுடன் உடன்கட்டையேற வைத்ததாகக் கதைப்பாடல் கூறுகின்றது.[43] மன்னர் தேவியர்களிடையே இருந்த இந்நிலை சாதாரண மக்கள் மத்தியிலும் இருந்திருக்கக் கூடும்.

"அணிசெய்திருந்த பல்லக்கில் மன்னர்களின் சடலத்தை வைத்தனர். திருத்தேவியர்களையும் அப்பல்லக்கில் ஒருங்கே ஏற்றினர். சுற்றிலும் அழகனின் ஆதரவாளர்களான மன்னர்கள் சூழ்ந்து வந்தனர். பரியும், கரியும், பிறபடைகளும் புடை சூழ வந்தன. நீலவிழியார்களுக்குச் சாமரை வீசப்பட்டது. மேள வாத்தியங்கள் இடியேறு போன்று முழங்கின. நாட்டு மக்களெல்லாம் இரங்கிப் புலம்பிப் பின் வந்தனர். அனைவரும் சடிதியாற்றங்கரை வந்தடைந்தனர். அழகன் சீவலவரைச் சந்தனக்கட்டை மீது வைத்தனர். மறையவர்களுக்கு ரொக்கம் தரப்பட்டது. முந்து தீக்கடனுங் கழித்து முழங்கிக் கனலையும் மூட்டி விட்டனர். தீயை வலம் வந்த தேவியர் உடன்கட்டையேறினர்" (2419-2441) என உடன்கட்டையேறிய விவரங்கள் விளக்கப்பட்டுள்ளன.

---

43 "பார்த்துரை வெட்டு மாறனுந்தான்
பாத்துப் பின்னிருப்ப தென்னவென்று
ஆர முலையாரை மன்னருடன்
அடக்க வேணுமென்றே துணிந்தான்" (2414-2417)

### அரசன் மகனின் அகால முடிவு

அழகன் பெருமாள், சீவலமாறன், சின்னத்தம்பி, திருத்தேவியர்கள் என்ற அனைவரும் மடிந்த பின்னர், அரசன் மகன் சமுதாட்டில் பாய்ந்து இறந்தான் எனக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

"பட்டானே சின்னத் தம்பியென்றார்
என்று சொல்லக்கேட்ட அரசன்மகன்
இலங்கு சமுதாட்டில் பாய்ந்திறந்தான்" (2445-2447)

என அமைந்துள்ளது. கதைப்பாடலில் வேறு எங்கும் அழகனுக்கோ சீவலவருக்கோ மகன் இருந்த செய்தி சுட்டப்படவில்லை. கதைப் பாடலின் இறுதியில், இந்த ஒரு இடத்தில் மட்டும் 'அரசன் மகன்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. இவன் அழகன் பெருமாளின் மகனாக இருக்கக்கூடும். இவனும் வாளில் பாய்ந்து இறந்ததன் பின்னர் அழகன் வம்சத்தாருக்கு வாரிசு இல்லாமல் ஆகின்றது. தென்காசியில் குலசேகரர், வீரபாண்டியன் என்ற இருவரும் இல்லாமல் ஆனவுடன் அங்கும் பட்டம் கட்டி ஆள வாரிசு இல்லாமல் ஆகின்றது. எனவே மாவுலிக்குப் பட்டம் கட்டப்படுகின்றது. இந்த மாவுலி குறித்த விளக்கம் இவ்வாராய்ச்சியுரையின் முன் பகுதியிலேயே விளக்கப்பட்டுள்ளது.

### பிற சேவகர்களின் முடிவு

அரசன் மகன் இறந்ததன்பின் ஒட்டக்காரன், கட்டியக்காரன் ஆகியோரும் உயிர்வாழ விரும்பாமல் மடிந்த செய்திகள் விளக்கப் பட்டுள்ளன. இவர்கள் அனைவரும் சிவலோகப் பதவியைப் பெற்றனர் என்றும் கூறப்பட்டுள்ளது.

"ஒன்றி யகலநின்ற ஒட்டக்காரன்
ஊட்டி தெறிக்கவே பாய்ந்திறந்தான்
இறையும் பிறையுங் கட்டியக்காரன்
ஏற்றுஞ் சமுதாட்டில் பாய்ந்திறந்தான்" (2448-2451)

என்று இறந்த முறை விளக்கப்பட்டுள்ளது.

"மூற்ற அழகனார் தம்முடனே
தம்பி சின்னப் பெருமாளுடனே
தையலா ரரசன் மகனும்
வெம்பு மோட்டன் கட்டியக்காரன்
மேவுஞ் சிவலோகம் வீற்றிருந்தார்" (2453-2457)

என்று அனைவரும் சிவலோகம் சென்றடைந்தமை இயம்பப்பட்டுள்ளது.

## குதிரை நடைபயிற்று வகை

தன்னிச்சையாகக் காடுகளில் அலைந்து திரிந்த விலங்குகளைப் பிடித்துப் பழக்கித் தன் தேவைக்குப் பயன்படுத்திக் கொள்வதை மனிதன் காலங் காலமாக வழக்கத்தில் வைத்திருந்தான். இந்த வகையில் இன்று பல விலங்குகள் மனிதர்களால் பழக்கப்பட்டு வளர்க்கப்பட்டு வருகின்றன. இத்தகு விலங்குகளில் முக்கியமானவை களாக மாடு, யானை, குதிரை ஆகியவற்றைக் குறிப்பிடலாம். வீட்டு வளர்ப்புப் பிராணியாக மாறிவிட்ட மாடுகளையும் வண்டியில் பூட்டவும், ஏர்கட்டி உழப் பயன்படுத்தவும் பழக்க வேண்டியுள்ளது. வளர்ந்த காளைக் கன்றுகளைத் தொழில் செய்யப் பழக்குதலை 'வசக்குதல்' எனக் குறிப்பர். இதனையே பாரதியார்,

"மாட்டை வசக்கித் தொழுவினில்
மாட்டி விட்டோமென்று கும்மியடி"

என்று பாடினார். மாடுகளைப் போன்று குதிரைகளையும் சவாரி செய்வதற்குப் பழக்க வேண்டியுள்ளது. வளர்ந்த குதிரைகள் சிலவற்றைச் சவாரிக்கென்று பழக்குதல் மிகவும் கடினமாக இருக்கும். கட்டவிழ்த்தலும், அதற்குத் தண்ணீர் காட்டலும் கூட, அதனை வளர்த்தவனுக்கே சாத்தியப்படாத ஒரு நிலை அமைந்து விடுவதுண்டு. சில குதிரைகள் பழக்கியவனைத் தவிரப் பிறனைத் தன்மீது ஏறி உட்கார விடாது. 'குதிரை வாகடம்' என்ற பெயருள்ள பல சுவடிகள் உள்ளன. இவற்றில் குதிரைக்கு வரும் நோய்கள், அதைத் தீர்க்கும் முறைகள் மட்டுமல்லாது, குதிரைகளின் வகை, குணம், அவற்றை அடக்கியாளும் முறை ஆகியனவும் விவரிக்கப்பட்டுள்ளன.

அடங்காத குதிரை ஒன்றை அடக்கிய அழகன் பெருமாளின் செய்கை இக்கதைப் பாடலில் விவரிக்கப் பெற்றுள்ளது. பின்னங் காலால் எத்திப் பித்தும், ஈரலும் கலங்க வைக்கும், தன்னை அன்புடன் பேணி வளர்த்தவனையே அஞ்சி நடுங்க வைக்கும், கடிவாளம் பூட்டவும், தண்ணீர் காட்டவும் விலங்கிட வைக்கும், அடங்காத பேய்க் குதிரை ஒன்றை அழகன் பெருமாள் அடக்கிச் சவாரி செய்கிறார். சன்னன் என்ற அப்பேய்க் குதிரையை குதிரைகளுக்குரிய பதினெட்டு வகையான நடையையும் நடக்க வைத்தும் காட்டுகிறார் அழகன். அப்பதினெட்டு நடைவகையாவன:

1. தாரை 2. சுற்றடி 3. நாகபந்தம் 4. சாய்ப்பு 5. முன் பாய்ச்சல் 6. பின் பாய்ச்சல் 7. கேடயம் 8. தாண்டுவிற்றல் 9. குறுகுதல் 10. வாய்ப் புல்லாரி 11. மயூகம் 12. சுவடிணை 13. வல்லவம் 14. வகுப்புக் கிள்ளை 15. கொள்ளுமார் 16. கொள்ளு 17. வஞ்சி 18. மரம் எனக்

குதிரை வல்லுநர்கள் கூறும் பதினெட்டு வகையான நடை பயிற்று முறைகளையும் அப்பேய்க்குதிரை மூலமாக அழகன் பெருமாள் நடத்திக் காட்டியதாகக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது (1264-1270). குதிரை சாஸ்திர முறைகளை அறிந்து அவற்றை அடக்கியாள்வதில் வல்லவராக அழகன் திகழ்ந்தார் என்பதுடன், குதிரைகளை நடைபயிற்றும் முறைகள் பதினெட்டு என வகுத்துள்ள தமிழரின் குதிரை சாஸ்திர அறிவையும் இக்கதைப்பாடல் வெளிக் காட்டியுள்ளமை தெரிகின்றது.

## தென்காசியில் பல தேசத்தவர்

இந்தியா 56 தேசங்களாக அமைந்திருந்தமையையும், ஒரு தேசத்தில் சுயம்வரம் போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுது இந்த 56 தேசத்து ராசாக்களும் கலந்து கொண்டனர் என்பதையும் இதிகாசங்களும், மற்றும் விக்கிரமாதித்தன் கதைகள் போன்ற பழங் கதைகளும் குறிப்பிடுகின்றன. தென்காசியில் பல தேசத்தவர்களும் கூடி இருந்தனர் என்பதும் மந்திரி இராசகுலனின் கூற்றால் புலனாகின்றது.

"சிங்களாதியர் குச்சல ரொட்டியர்
சீன ரீழர் மருடர் கர்நாடரும்
எங்குள் ளீர்களும் வந்தெதிர் நிற்கிறார்" (1203-1205)

என்றுகூறி 'அழகன் பெருமாள் பரியேறுவதில் வல்லவர்', இந்தத் தேசத்தவர்களெல்லாம் குழுமியுள்ள இச்சமயத்தில், அவர் பரியேற்றம் நடத்திக் காட்டுதல் மிகப் பொருத்தமான செயலாகும்' என்று கூறிக் குலசேகரரின் அனுமதியைப் பெறுகிறான் இராசகுலன்.

புலியூரிலிருந்து அரசாண்ட அழகனின் படையில், சீனர், கர்நாடர், ஈழர், மருடர், கேகையர், அந்தியர், ஒட்டியர் என்ற நாட்டவர்கள் இருந்ததைக் கதைப்பாடல் சுட்டுகின்றது.[44] ஒரு நாட்டின் படைப்பிரிவில் பல நாட்டவரும் பங்கேற்றிருந்தமையை இதன் மூலம் அறிய முடிகின்றது. போருக்குப் புறப்பட்ட சீவலவருடன் சென்ற படையில், குச்சலர், துளுவர், ஒட்டியர், மருடர், ராவுத்தமார் இருந்ததைக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. (836-837)

---

44 "சீனரொடு கர்நாட ரீழர்கள் மருடர் கேகையர் அந்தியர்
நிறமிகுத்திடு மறவ ரொட்டியர் இருபிறத்தி நெருங்கவே" (981-982)

## சீனம் பெற்றிருந்த சிறப்பிடம்

அண்டை நாடுகளான சீனம், சிங்களம், ஈழம் போன்ற நாடுகளினின்றும் அரசர்கள் தென்னகம் வந்தும், அந்நாட்டு மக்கள் தென்னகப் படை அமைப்புகளில் பணியாற்றியும் வந்தமை முன்னரே சுட்டிக் காட்டப்பட்டது. சீனப் பொருட்களும் தென்னகத்தில் புழக்கத்தில் இருந்தமையும், சிறப்பான ஒன்றாகப் போற்றிப் புகழப் பட்டதும் இக்கதைப்பாடல் மூலமாகப் புலப்படும் சிறப்புச் செய்தியாகும்.

சின்னத்தம்பி கம்புளிக் கிடாய்மீது ஏறிச் சவாரி செய்து விளையாடப் புறப்படுகின்றான். தாதிமார் பல விதமான ஆடை, அணிவகைகளை அணியச்செய்தும், பூணச்செய்தும் அணி செய்கின்றனர். இவற்றுள் சீனச் சரப்பளி, சீனப்பட்டு கொண்டு அணி செய்தது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

"புனைந்து சீனச் சரப்பளி பூட்டினார்" (2221)

"சீனப்பட்டு முகவெட்டுங் கட்டினார்" (2236)

என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. அணிவகையுள் சீனச் சரப்பளியும், ஆடை வகையுள் சீனப் பட்டும் பெற்றிருந்த ஏற்றமும், சீனருடன் இருந்த வணிகத் தொடர்பும் இதனால் தெற்றெனப் புலனாகின்றது.

## முப்புரி நூலணியும் மரபு

அந்தண குலத்தவர் தம் மார்பில் திருமுப்புரி நூலணியும் மரபைப் பின்பற்றுகின்றனர். இன்னும் சில சாதியர்களான ஆசாரிமார், செட்டியார் போன்றவர்களும் பூணூல் அணிகின்றனர். தெய்வ, அரசச் சிற்பம், செப்புச்சிலை அமைப்புகள் சிலவற்றில் பூணூல் அணிந்த நிலைகள் காணப்படுகின்றன. பாண்டியர் மரபில் வந்த அழகன் பெருமாள், சின்னத்தம்பி ஆகியோர் திருமுப்புரி நூலணிந்திருந்ததாகக் கதைப்பாடல் காட்டுகின்றது.

பேய்க்குதிரையை அடக்கிய பின்னர் வீதி உலா வரும் அழகனைக் கண்ட மகளிர் கூறுவதாவது:

"அழகன் பெருமாளைப் பாருமென்பார்
ஆணி லழகனைப் பாருமென்பார்
செழியன் பெருமாள்தன் திருமார்பு
திருமுப்புரி நூலும் பாருமென்பார்" (1338-1341)

எனக் கூறுவதாக அமைந்துள்ளது.

அழகன், சீவலவரின் அகால மரணம் கண்டு மனக் கொதிப்புடன் புலம்பும் திருத்தேவியர் அன்னாரின் வடிவழகைக் கூறி அழுகின்றனர். அப்போது,

"துய்யபூணூலு மணிமார்புந் தூணான தடம்புயமும்
பொற்பழகுங் கற்புமினி யெப்பொருளுங் காண்போம்" (2305-2306)

எனக் கூறிக் கதறுவதாக உள்ளது. இவ்வாறு அழகன், சீவலவர் தம் மணிமார்பில் பூணூல் அணிந்திருந்த குறிப்பு சுட்டப்படுகின்றது. இவர்கள் போன்று இளையவனான சின்னத்தம்பியும் மார்பில் பூணூல் அணிந்திருந்தது மற்றுமோர் இடத்தில் குறிப்பிடப்படுகின்றது.

சின்னத்தம்பி கம்புளிக் கிடாயின் மீதேறி விளையாடச் செல்வதற்காகத் தாதிமார் அவரை அணிசெய்கின்றனர். அப்போது "இட்ட தண்டைக்கு இணங்க ஏத்த சிலம்பை அணிவிக்கின்றனர். முப்புரி நூலணிந்த மார்பிலே மணிவடத்தைச் சார்த்துகின்றனர்"[45] எனக் குறிக்கப்பட்டுள்ளது.

இவற்றின் மூலமாகப் பிற்காலப் பாண்டிய மரபில் வந்து தென்காசியைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்த பாண்டிய மன்னர் பரம்பரையினர் மார்பில் திருமுப்புரி நூலணிந்திருந்தனர் எனக் கருத இடமுள்ளது. குறிப்பிட்ட சாதிகளுக்கு உரியதாகத் தற்போது இருந்துவரும் இவ்வழக்கம் நாடாளும் மன்னர்களாலும் பின்பற்றப்பட்டதாக இருந்தது என்பது தெரியவருகின்றது. இது எக்கால கட்டத்தில் சாதிச் சின்னமாக மாறியது என்பதும், மன்னர்கள் பூணூல் அணிந்ததன் அடிப்படைப் பொருள் யாது என்பதும் ஆய்விற்குரியன ஆகும்.

## சடங்கு செய்யும் மறையவருக்கு ரொக்கப் பணம்

வழக்கில் இருந்த மற்றும் ஒரு வழக்கத்தையும் இக்கதைப் பாடல் குறிப்பிட்டுச் சொல்கின்றது. அழகன், சீவலவருடன் சேர்ந்து உடன்கட்டையேற விரும்பிய திருத்தேவியரை வலம் வரச்செய்து, கட்டை மீதிலேற்றிய பின்னர் சடங்குகள் செய்த மறையவருக்குப் பணம் கொடுத்த வழக்கம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அதன் பின்னர் தீ மூட்டினர்[46] எனத் தெரிகின்றது.

---

45 இட்ட தண்டைக் கிணங்கச் சதங்கையும்
ஏத்த செம்பொற் சிலம்பு மணிந்தனர்
அணியு முப்புரி நூலணி மார்பிலே
ஆணிமுத்து · மணிவடஞ் சாத்தினார்" (2215-2218)

46 "வந்த மறையவருக்கும் ரொக்கம்
வாரித் தானமுந் தான்கொடுத்து
முந்து தீக்கடனுங் கழித்து
முழங்கிக் கனலையு மூட்டிவிட்டார்" (2438-2441)

## களரிப்பயிற்சி முறை

தென்மாவட்டங்களிலும் கேரளத்திலும் இன்றும் வழக்கில் இருந்துவரும் மிகச் சிறந்த தற்காப்புக் கலையான களரிப் பயிற்சி முறை பற்றிய குறிப்புகளை இக்கதைப்பாடல் தருகின்றது.

அழகனும், சீவலவரும் கரியேறல், பரியேறல், ஆயுதத் தொழிலுடன் பணிக்கர் சொன்னபடி சிலம்பு, களரிப் பயிற்சியிலும் தேர்ச்சி பெறுகின்றனர்.

நாராசத்தை (இரும்புக் கம்பி) உள்ளே செருகி வைத்த வாழை மரத்தை வெட்டுமாறு இராசகுலன் கூறுகிறான். வாள்வலியும், தோள் வலியும் மிக்க சீவலவர் நாராசம் உள்ளது என்பதையும் இராசகுலனின் வஞ்சகத்தையும் கபடத்தையும் நன்கு உணர்ந்து கொண்ட பின்னும், வாழைவெட்டும் செயலில் இறங்குகிறார். களரிப் பயிற்சியினால் தன்னால் வெட்ட இயலும் என்று அண்ணர் அழகனிடம் எடுத்துக் கூறுகிறார்.[47] களரிப்பயிற்சி முறைப்படி அவர் காலெடுத்து வைப்பதும், குதிப்பதும், முன்வரிசை, பின்வரிசையாக வருவதும், வாளெடுத்து வாழையை வெட்டிச் சாய்ப்பதுமான காட்சிகள் களரிப்பயிற்சி முறைகளைத் தெளிவுறக் காட்டுவனவாகும்.

"ஆலித் தெழுந்தா னிருகாலின் கெதிகொண் டெதிர் குதித்தான்
குதித்தான் லெகுக் கொண்டெதிர் குதித்தான் முன்னந்தம் பின்னந்தம்
முறைகொண் டொன்று மானி லெகுகொண்டே கட்டுஞ்சாரி வந்தான்
விடுத்த வாழை இடசாரி வலசாரியும் வந்தான்
நின்று மெய்யொடுக்கி முறைகொய்து கொய்து வைத்தான் காலை
காலிற் சவடுரைத்து மேலிட் டுரமெடுத்து நிமிர்ந்து
எதிர்கிட்டி நின்ற வாளைப் பத்தியோட வீசிவிட்டான்" (1427-1433)

என விவரிக்கப் பெற்றுள்ளது. களரிப் பயிற்சியினாலேயே நாராச வாழையைச் சீவலவரால் வெட்ட முடிந்தது. பிற்காலப் பாண்டியர் காலகட்டத்தில் களரிப்பயிற்று முறைகள் உச்சத்தில் இருந்தன என்பது இதன்மூலம் தெரிய வருகின்றது.

## சில சொல் வழக்குகள்

கதைப்பாடல் இலக்கியங்கள் நாட்டுப்புற மக்களின் காலக் கண்ணாடியாகும். பல பேச்சு வழக்குச் சொற்களையும், வழக்கிறந்து

---

47 "நார்வைச் சேறாங் கதலியூர் மெய்க்கவே களரிமெய்க்க
முந்தநான் வெட்டுவது தப்பினால் வெட்டிடுமெனக் கைதொழுதான்"
(1423-1424)

வரும் சொற்களையும், தென்மாவட்டத்துக்கே உரிய சொற்களையும், தற்போது வழக்கிலிருந்து மறைந்து விட்ட சொற்களையும் இக்கதைப்பாடல் காட்டுகின்றது. குறிப்பிடத்தக்க சில சொற்களைப் பற்றிய விவரங்களை இனிக் காணலாம்.

## இளமுறை

இளமுறை என்ற இச்சொல் இக்கதைப்பாடலில் பல இடங்களில் ஆளப்பட்டுள்ளது. இளையவர்களுக்குரிய பங்கு என்ற முறையில் அமையும் இளமுறை என்ற சொல் 313, 331, 349 ஆம் வரிகளில் ஆளப்பட்டுள்ளமையைச் சான்றாகக் கொள்ளலாம். இது போன்று இளமுறைக் கூறு என்ற சொல்லும் 317, 358, 1689, 1786 என்ற வரிகளில் பயின்று வந்துள்ளது. இதுவும் இளையவர்களுக்கு உரிய பங்குப் பகுதி என்ற பொருளில் குறிக்கப்பட்டுள்ளது. 'இளையவர் களுக்கு உரிய நாட்டுப்பகுதி' என்று பொருள்படும் இளமுறைத் தேசம் என்பதும் (302) ஆளப்பட்டுள்ளது. அரசர் குலத்தில் தோன்றியோரில் உடன் பிறந்தோர் பலராகவும், பெரியப்பா, சிற்றப்பா பிள்ளைகள் பலர் என்ற நிலையிலும் அமைந்து தாயாதிகள் ஆகின்ற அனைவரும், நாடாளும் உரிமை உடையவர்களாக இருந்திருக்கின்றனர். இவர்களுள் மூத்தவன் நாடாள முழுஉரிமை பெற்றிருந்த போதிலும், சிறியதந்தை பிள்ளைகளான இளையவர்களுக்கும் குறிப்பிட்ட சிறு பகுதிகளை ஆளும் உரிமையும் அளிக்கப்பட்டிருக்கிறது. இது இளமுறை, இளமுறைக் கூறு, இளமுறைத் தேசம் என்ற தூய தமிழ்ச் சொல்லால் குறிக்கப்பட்டது என்பது இக்கதைப்பாடல் வழி புலனாகும் புதிய செய்தியாகும். இன்றும் பங்கு பிரித்தல், பாகம் பிரித்தல், சொத்து பிரித்தல் என்று பொது மக்களிடையே வழக்கில் இருந்து வரும் சொற்களுக்கு 'இளமுறை, இளமுறைக்கூறு' என்ற நல்ல தமிழ்ச் சொல் வழக்கிலிருந்ததைக் கதைப்பாடல் காட்டுகின்றது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். இன்று இவ்வினிய தமிழ்ச் சொல் வழக்கொழிந்து விட்டது. பங்கு பிரித்தல், பாகம் பகிர்தல், சொத்து பிரித்தல் என்ற சொற்களே வழக்கிலுள்ளன.

## சொம்பாதி

சொம்பாதி (280), சொம்பகிர்ந்து (1781), சொம்பகிர (2290), சொம்பகிராது (169, 310) என்ற சொற்கள் கதைப்பாடலில் ஆளப் பட்டுள்ளன. நெல்லை, குமரி மாவட்டங்களிலும், மதுரை மாவட்டக் கிராமப் பகுதிகளிலும் இன்றும் இச்சொல் பேச்சு வழக்கில் ஆளப்பட்டு வருகின்றது.

"சொத்து சொம்மு ஏதாவது இருக்கிறதா?"
"இருந்த சொத்து சொம்மு எல்லாம் போச்சு"

என்று பேச்சு வழக்கில் இவை எளிய மக்களால் இன்றும் பயன் படுத்தப்பட்டு வருகின்றன.

'காசு, கீசு இருக்கா?
'பணம் கிணம் வேணுமா?

என்று வரும் கீசு, கிணம் என்பவற்றுக்குப் பொருள் இல்லாதது போன்று சொத்து சொம்மு என்பதில் வரும் சொம்மு வழக்கில் உள்ளதா? சொம்பாதி, சொம்பகிர்தல் என்பதில் சொத்தில் பாதி, சொத்து பகிர்தல் என்ற பொருளில் இக்கதைப்பாடல் ஆள்கின்றது. சொம்மு என்பதும் சொத்து என்ற பொருளிலேயே ஆளப்பட்டு வந்திருக்கிறது. எனவே 'சொத்து சொம்மு என்று இன்று வழக்கில் உள்ள சொற்களுக்கு 'சொத்தும் சொத்தாக உள்ள பிற 'இனங்களும்' என்ற பொருளில் வழங்கப்படுகின்றன எனக் கூறுவது பொருத்தமாக அமையக் கூடும்.

"சுமித்திரியாய்ப் பகிர்வதிந்தத் தேசத்தில் சொம்பாதி" (280)
"ஊரு முமக்குச் சொம்பாதி" (1660)

என்றுள்ள வரிகளில் சமபாதி, செம்பாதி என்ற பொருளில் அமைந்துள்ளது. இதே போது,

"தொடுப்பார் பகிரென்பார் சொம்பகிரா விட்டால் (306)
"பொதுவென்பார் சொம்பகிராதே விட்டாக்கால்" (310)

என்ற வரிகளில் 'சொத்து பகிர்தல்' என்ற பொருளில் வந்துள்ளதையும் அறிய முடிகின்றது. ஆக 'சொத்தும், சொத்தாக உள்ள பிற இனங்களும் என்ற பொருளில் வழங்கி வந்து, சமபாதி, செம்பாதி என்ற பொருளும் ஆளப்பட்டு இன்று, சொத்து சொம்மு என்பது 'பணம் கிணம்' என்று வரும் வழக்கு போன்று சொம்மு என்பதற்குரிய உண்மைப்பொருள் உணராது பேசி வரும் சொல்லாக மாறிவிட்டிருக்கிறது எனக் கூறலாம். சொம்பாதி என்பதற்கு செம்பாதி, சமபாதி என்ற பொருளும், சொம் என்பது சொத்து என்ற பொருளும் குறிப்பதாக அகராதிகளும் குறிப்பிடுகின்றன.

**இலங்கம்**

பாதாள அறை, இருட்டறை, சுரங்க அறை என்ற சொற்கள் அனைத்தும் ஒரு பொருள் குறிப்பனவாக உள்ளன. இதே பொருளில்

இலங்கம் என்ற சொல்லை இக்கதைப்பாடல் ஆளுகின்றது. இலங்கம் என்ற சொல்லுக்கு இணையான சூதானம் என்ற சொல்லையும் இக்கதைப்பாடல் பயன்படுத்துகின்றது. கதைப்பாடல் தோன்றிய காலத்தில் பாதாள அறை, இருட்டறை என்ற பொருளில் இலங்கம், சூதானம் என்ற சொற்கள் புழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். இவற்றையே கதைப்பாடல் எடுத்தாள்கின்றது. இலங்கம் என்ற இச்சொல் இன்று வழக்கிலிருந்து மறைந்து விட்டது. சூதானம் என்பது அறை என்ற பொருளில் அல்லாமல் பாதுகாப்பு என்ற பொருளில் இன்றும் மதுரை உட்பட்ட தென்மாவட்டங்களில் கிராமப் புறங்களில் வழக்கில் உள்ளது. அடுத்த தலைமுறையில் இதுவும் வழக்கொழிந்து போகக் கூடும்.

"சூதானமாகப் பார்த்துக் கொள்"
"சூதானமாகப் போய்வா"

என்று நாட்டுப்புறப் பேச்சு வழக்கில் 'பத்திரமாக' என்ற பொருளில் 'சூதானம்' என்பது ஆளப்பட்டு வருகின்றது.

இலங்கம் என்பது மறைவான அறை, இரகசிய அறை என்ற பொருளில் (1541, 1968) கதைப்பாடலில் ஆளப்பட்டுள்ளது.

இதே பொருளில் கட்டப்பட்டது என்ற பொருளும் இணைத்து இலங்கைக்கட்டு எனவும் (1668, 1672, 1673, 1580, 2053, 2359) கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. ஆழமாக உள்ளது 'குவாரி' என அழைக்கப்படும். அப்பொருள் படவும் 'குவாரிலங்கம்' என்றும் (2069) கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. இருட்டறையாகிய இலங்கத்தைச் சூதானம் என 1760, 2051, 2064, 2282 ஆகிய வரிகளிலும் கதைப்பாடல் பயன்படுத்தியுள்ளது.

### பேச்சு வழக்கு மாற்றங்கள்

இது நாட்டுப்புறக் கதைப்பாடல் என்பதால், பாடல் நடையில் எழுதப்பட்டிருப்பினும், எளிய, எளிதில் புரிந்து கொள்ளத் தக்க சொல்வழக்குகளை ஆண்டுள்ளது. பலபேச்சு வழக்குச் சொற்கள் வட்டார வழக்குக்கு ஏற்ப, எவ்வாறு உச்சரித்தனரோ அப்படியே எழுதப்பட்டுள்ளன. பேச்சு வழக்கு நடையென அழுத்தம் கொடுத்தும் சில சொற்கள் பதிவு செய்யப்பட்டுள்ளதால் இலக்கிய வழக்கு நோக்கில் அவை தவறானதாகக் கூடத் தோன்றுகின்றன.

சான்றுகள் : (அடைப்புக்குள் உள்ளவை சரியான வடிவம்). வங்கிசம் (2430) (வம்சம்), சரசோதி (3) (சரசுவதி), சுவடித்திருந்த (2419)

(சோடித்திருந்த), நாவிலோகம் (60) (நாவலோகம், நாவலந் தீவு), சாய்மரை (177) (சாமரை), கருவேலம் (309, 390, 971) (கருவூலம்), முகிழ்த்தம் (382) (முகூர்த்தம்), சூட்சி, சூட்சம் (1112, 1799, 2057) (சூழ்ச்சி) நாராங்கி (1808) (நாதாங்கி) ஆகிய சொற்களைக் குறிப்பிடலாம்.

## ஆடை, அணிகல வகைகள்

இலக்கியம், அது எழுந்த காலத்தைக் காட்டும் கண்ணாடி எனக் கூறுவர். இக்கதைப்பாடலும் தான் எழுந்த கால கட்டத்தைக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்கின்றது. அவ்வக்கால மக்கள் அணிந்த ஆடை, ஆபரண வகைகளை இக்கதைப்பாடல் குறிப்பிட்டுச் செல்கின்றது. இன்று இத்தகு ஆடை, அணிவகைகள் பல இல்லாது ஒழிந்து விட்டன.

சீனப் பட்டாடைக்கும், சீனச் சரப்பளிக்கும் (கழுத்தணி) இருந்த சிறப்பு முன்னரே உரைக்கப் பெற்றது. கொட்டாரக் கரையில் நெய்த பட்டாடையும் சிறப்பான ஒன்றாகக் கருதப் பெற்றதைக் கதைப்பாடல் மூலம் அறியலாம்.

கல்வி, ஆயுதப்பயிற்சிகள் பெற்ற தம்பியரை அருகிருத்தி மகிழும் குலசேகரர், அவர்களுக்குக் கொட்டாரக்கரைப் பட்டாடை நல்கி அக மகிழ்ந்ததாகக் கதைப்பாடல் கூறுகின்றது. அக்கால ஆடவர்கள் பலவிதமான அணிகலன்களை அணிந்தனர். வங்கு, வலையம், கடுக்கன், சரப்பளி, பதக்கம், மோதிரம், முன்கை வளை (200-204) சவடி, வச்சிரவடம் (1682-1684) ஆகியவற்றை அணிந்த்ததற்குக் குறிப்புகள் உள்ளன.

பரிசுப் பொருட்களில் நரிப்பல்லில் செய்த அணி உயர்ந்த ஒன்றாகக் கருதப் பெற்றதாகத் தெரிகின்றது.[48]

சிறுவர்கள் அணிந்த அணிகலன்களையும் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது.

ஒட்டியாணம், தண்டை, சதங்கை, சிலம்பு, மணிவடம், பதக்கம், புலிநகத்தாலி, நெற்றிப்பட்டம், வ்ச்சிரக் கடையம், கடுக்கன் ஆகிய அணிகலன்களைச் சிறுவர்கள் அணிந்திருந்தனர். (2213-2230)

---

48 "நல்லதென்று பணிந்துநின்ற சேவுகனை நோக்கி
நரிக்கொம்புண்டு மென்கையிலே திருக்கைச் சிறப்பணிந்தான்" (623-624)

விளையாடச் செல்லும் அரசகுலச் சிறுவர்கள் ஆட்டுக் கிடாயின் மீதேறிச் சென்றதாகக் குறிப்புக் கிடைக்கின்றது. அந்தக் கம்புளிக் கிடாயும் அணி செய்யப்பட்டது. அதற்கு அணிவிக்கப் பெற்ற அணிகலன்களாகச் செம்பொன்னாலான நெற்றிப் பட்டம், கவடி, வீர சதங்கை, கொத்துச் சல்லி, பொற்றண்டை ஆகியன குறிக்கப்பட்டுள்ளன (2235-2246).

நெற்றி, கழுத்து, காது, கை, தோள், விரல், இடுப்பு, கால் என்று பல இடங்களிலும் இவ்வணிகலன்கள் அணியப் பெற்றன.

## தூர அளவு பற்றிய குறிப்பு

பழைய தூர அளவுமுறையாகக் 'காதம்' என்பது பயன்படுத்தப் பட்டதற்குக் குறிப்புகள் கிடைக்கின்றன. சிறு தூர அளவுகளைப் பல முறைகளில் குறிப்பிட்டிருக்கின்றனர். கூப்பிடு தூரம் என்பது அவற்றுள் ஒன்று. ஒரு மனிதனின் குரல் ஒலி கேட்கும் தூர அளவை இது குறிப்பதாக அமைந்தது. இக்கதைப்பாடலில் இது போன்ற ஒரு தூர அளவு முறை குறிக்கப்பட்டுள்ளது. வீரசிகாமணிக் கோட்டை அண்மையிலேயே உள்ளது என்பதைக் குறிக்க,

"தூரமில்லை ஒரு கோழிப் பறவையிது" (879)

என உள்ளது. ஒரு கோழி பறந்து செல்லும் தூர அளவை இது குறிப்பதாகலாம்.

## கதைப்பாடல் மரபைப் பின்பற்றும் நிகழ்ச்சி அமைப்புகள்

அழகன், சீவலவரைக் குலசேகரர் வளர்த்ததும், ஆடை, அணிமணிகள் பூட்டி அழகு பார்த்ததும், கல்வி, ஆயுதப்பயிற்சிகள் அளித்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் (188-209) கதைப்பாடல் மரபைப் பின்பற்றி அமைந்த நிகழ்ச்சி அமைப்புகள் ஆகும்.

பேய்க்குதிரையடக்கிய நிகழ்ச்சியின் பின்னர் அழகன், சீவலவர் வீதி உலா வருவதான நிகழ்ச்சி அமைப்புகள் உள்ளன. (1308-1363)

வீதியில் குதிரை செல்ல, வேழமும் புடை சூழ, மாதர் வெண் கவரி வீச, மங்கையர் கீதம்பாட ஆதவர் போலத் தோன்றும் அழகனுந் தம்பிமாரும் காதலார் மடவார் சூழத் தென்காசி வீதியில் உலா வருகின்றனர்.(1308-1311)

வெண்குடை நிழல்தர, தோகையனையார் வெண்கவரி வீசுகின்றனர். கடலோசை போன்ற வாத்தியங்கள் முழங்குகின்றன. மடவார் வீதிதோறும் பன்னீர் தெளிக்கின்றனர். கும்பக் குடங்கள் வைக்கின்றனர். (1312-1333)

அழகன், சீவலவரைக் கண்ட மகளிர்,

"கலையும் நிலையும்போய் நிலை தளர்வார்
நாணத்தினைத் துடந் தயல் துடந்தே
நங்கைமார் கொங்கை மெலிந்து நிற்பார்" (1347-1349)

இத்தகு காட்சி அமைப்புகள் பிற்காலச் சிற்றிலக்கியமான உலா இலக்கியக் கூறுடனும், கதைப்பாடல் மரபொட்டி அமைந்துள்ளன.

திருத்தேவியின் தீக்கனவு நிகழ்ச்சியும், (1560-1574) பின்வருவதை முன் உணர்த்தும் உத்தியாக அமைந்து, கதைப்பாடல் மரபொட்டி அமைந்த நிகழ்ச்சியாகும்.

## யாப்பமைதி

நாட்டுப்புறப்பாடல் யாப்பமைதியில் இக்கதைப்பாடல் மிக எளிமையான நடையில், பேச்சு வழக்குச் சொற்கள் பயின்று வரப் பாடப்பட்டுள்ளது என்றாலும், இடையிடையே விருத்தங்களும், வெண்பாக்களும் அமைந்து, மரபுவழி யாப்பமைதியுடனும் பாடப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. 20 விருத்தங்களும், 3 வெண்பாக்களும் இக்கதைப்பாடலில் இடம்பெற்றுள்ளன. மரபு வழி யாப்பும், நாட்டுப்புறப்பாடல் யாப்பும் கலப்பு மணம் செய்து கொண்டு பிறந்தது போன்ற இக்கதைப்பாடல் யாப்புக் குழவி, பழமைக்குப் பழமையாயும், புதுமைக்குப் புதுமையாயும் புத்தொளி வீசித் திகழ்கின்றதைக் கதைப்பாடலைப் படிக்கும் அனைவரும் உணர இயலும்.

விருத்தங்களும், வெண்பாக்களும் கதைத்தொடர்ச்சி அமைப்புகளின் முடிவுரை போன்று பயன்படுத்தப்பட்டுள்ளன. வெண்பாக்கள் மூன்றிலும் முறையே மூன்று இடங்களில் தளைதட்டு கின்றது.

அவை :

"சொல்லவல்ல காவியநூல் சோராமல் - நல்லகுணபதியே" (14)

"தங்குமோ சர்ப்பினை செய்தக்கால்" (1836)

"மன்னவர்க்கு இறுதிவைத்த மந்திரியும் பிற்பகைகாண்" (2200).

நாட்டுப்புற யாப்பில் அமைந்த நடையமைதிகளும், வேறுபட்ட பலமுறைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளமையின், இனிய ஓசை நயத்துடன் இக்கதைப்பாடல் இலங்குகின்றது. படித்ததும் புரிந்து

கொள்ளக் கூடிய எளிய சொற்களுடன், எதுகை, மோனை நயத்துடன் ஒன்பான் சுவைபடவும் கதையை நடத்திச் சென்றிருக்கும் பாடலாசிரியரின் கவித்திறம் வியப்புக்குரியது.

வீரசிகாமணிக் கோட்டையுள் புகுந்து வெட்டி, இராசகுலன், வீரபாண்டியன், படை பரிவாரங்களை ஓட ஓடத் துரத்தி வெற்றி கொண்ட பின்னர், சீவலவர் வெற்றிப்படையுடன் புலியூர் மீள்கிறார். படை நடப்பது போன்ற கம்பீர நடையழகுடன் கூடிய யாப்பமைதியுடன் பாடல் யாக்கப்பட்டுள்ளது.

"விருதெனக்கய லெழுதிடைக்கிய மொருகொடித்திரள் சூழவே
"வீரமேவிய சீவலவர் மனுவாசி மீதினி லேறியே
சூழும்வாசி முன்னுடன் மதமீறு யானையோ ரன்பதும்
கொடுகடப்படை யொடுசெலக்குடை மடலடைக்கய மாடவே"

என்ற பாடல் வரிகள் சான்று.

சோகத்தைச் சொல்லும் ஒப்பாரிப் புலம்பலில் நெடிய வாக்கிய மின்றி. மூன்றுசொல், இருசொல் வரிகள் திக்கித்திணறி வந்து, படிப்பவர் மனத்திலும் அச்சோகத்தை எதிரொலிப்பனவாக அமைந்து சிறந்துள்ளன.

"இளமுறை யானதுந் தந்தாரில்லை
இனி யூராள்கிலோ மெனவே
இறந்தீர் தம்பி நீரென்பான்
நீராவியில் சூழ் வீர சிகாமணி
ஊர்தனிலே நீர்செய்த வல்லமை
நெஞ்சினிலே வைத்தல்லோ செய்தார்
வஞ்சக மென்பார்" (1959-1965)

குறுகிய வரிகளுக்குள் பல காட்சிகளை வடித்துக் காட்டும் நாட்டுப் புறப்பாடல் யாப்பின் நெகிழ்வுத் தன்மை சிறப்பாகச் சுட்டத் தக்கதாகும். சான்றாக, வீரசிகாமணிக் கோட்டையுள் குட்டரோகனாய் நுழைந்த ஒற்றனின் நடிப்பாற்றலும், பேச்சும் கண்முன் காட்சிகளைப் படைத்துக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

பணிவா னெவர் வரினும் - புணணைப்
பாருமென்பான் கிட்ட வாருமென்பான்
வாரீ ரொரு சிறங்கை - கஞ்சி
வார்த்தால் பிழைப்பேனெனக் கெஞ்சுவான்
கூரும் புண்ணொந் தழுவான் - முகங்
கோடிக் கொள்வான் புண்ணை மூடிக் கொள்வான்" (656-661)

என்ற வரிகளைச் சான்றாக்கலாம். வரலாற்று நிகழ்ச்சிகளை எளிய, இனிய தமிழ்நடையில் மரபுயாப்பு, நாட்டுப்புறப்பாடல் யாப்பு கலந்து ஓசை நயம்படச் சொல்லடுக்கி, கற்பாரைப் பிணிக்கும் வண்ணம் இக்கதைப்பாடலை யாத்துள்ள புலவரின் புலமைத்திறம் வியப்புக்கும், பாராட்டுக்கும் உரியதாகும்.

## ஆளப்பட்டுள்ள உவமை நயங்கள்

இலக்கியத்துக்கு, அணி (அழகு) சேர்ப்பவை உவமைகள் ஆகும். அதனாலேயே உவமைகள் உவமை அணி எனப்பட்டன. எடுத்துக்கொண்ட கருத்தைத் தெளிவுறுத்தவும், விளக்கப்படுத்தவும், அழகுபடுத்தவும், எளிமைப்படுத்தவும்., ஒப்புமைப்படுத்தவும் உவமைகள் உதவுகின்றன. இக்கதைப்பாடலில் எளிய மக்களுக்கும் விளங்கும் வண்ணம், அவர்கள் அன்றாடம் பார்க்கின்ற, பழகுகின்ற விலங்குகள், பறவைகளும், அநுபவ உண்மைகளும், பட்டறிவாலும், கேள்வி ஞானத்தாலும் அறிந்த இதிகாச, புராணக் கருத்துகளும் உவமை களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தெரியாததைத் தெரிந்த ஒன்றைக் கொண்டு விளக்குவதற்கு உவமைப் பொருள் பயன்படுத்தப்படல் வேண்டும் என்ற இலக்கண வரம்புக்குட்பட்டு, எளிமையும் இனிமையும் சேர்த்துக் கதைப்பாடலுக்குக் கலை நயமும், காவிய நலனும் சேர்ப்பதாக உவமைகள் ஆளப்பட்டுள்ளதை அறிய இயலுகின்றது.

இக்கதைப்பாடலுக்கு அணி சேர்த்துள்ள உவமைகளாவன:

1. "இராம லெட்சுமிணரைப் போல" (187)
2. "அகத்தில் வந்த சனிபோல்" (288)
3. "பணிந்தா னரக்கர்குலம் வேரோடு முடித்த
   பாதக னிலங்கையில் மகோதரனைப் போலே" (291-292)
4. "கயத்தில் போய்விழுந்த கடுமுதலை போல" (347)
5. "சீறிப்பாயு மெருதுக்குக் கொம்புசீவிக் கொடுத்தாப்போல்" (478)
6. "புலியைத் துடந்த மான்போல்" (566)
7. "அடைக்கோழிபோல் கத்துவேன்" (686)
8. "சேரி நாய்போல் திரிந்து" (689)
9. "வேட்டைப்புலி போலே" (861)
10. "ஆடிக்காத் தெழுந்த பூனையாமென" (957)
11. "ரெகுராமன் போலே மகிழ்ந்தார்" (957)

12. "கொடிய கடும்புலியை வாலுருவி விட்டாப்போல்" (1080)

13. "பணிந்தா னரக்கர்குலம் வேரோடு முடித்த
பாதக னிலங்கையில் மகோதரனைப் போலே" (1085-1086)

14. "ஏமன்விட்ட தூதனைப் போல்" (1097)

15. "பூசலிடவோ துணிந்து பூனையைப்போ லோடிவந்தான்" (1103)

16. "காட்டனைக்குக் கொப்பம் வெட்டினாப் போலே" (1541)

17. "கால தூதனைப் போலே" (1547)

18. "காலத் தூதுவன் போலே போனான்" (1553)

19. "ஓட்டுக்குள்ளே பட்டுநின்ற சிட்டுப்போ லிருந்தார்" (1761)

20. "வீணி லாட்டைத்துடர்ந்த புலிபோ லகப்பட்டோ மைய்யா" (1789)

21. "உருக்கிளர் வரைபோல் வருமல்லரை" (1856)

22. "விசந் தோன்றினாப் போலே தோன்றினான்" (1795)

23. "நெருப்புறு புழுப்போல்" (1913)

24. "பொருப்பென விழுவான்" (1917)

25. "பொரு மதகரி போல்" (1918)

26. 'பான்ற பொறியிலிரு கான்றபொறி புகுந்தாப் போலே' (2008)

27. "வெம்பு புலிபோல்" (2020)

28. மறத் தும்பிபோல் (2022)

29. பெட்டியு மூடியும் போல் (2025)

30. "விழுவா னடிமுறிந்திடு மரம்போல்" (2130)

31. "கன்று கதறினாப் போலழுது" (2373)

32. "காற்றாடி போலத் தள்ளாடிடுவான்" (2394)

33. "விசையன் கையி லிடியேறு போலே" (838)

என்றிவ்வாறாக 30-க்கும் மேற்பட்ட உவமைகள் அமைந்து, இக்கதைப் பாடலைச் சிறந்ததொரு செவ்விலக்கியம் போன்று ஆக்க முயன்றுள்ளன எனலாம்.

## உருவக அமைப்புகளின் பங்கும் பாங்கும்

கூற வந்ததை நேரடியாகக் கூறாமல், அதனை ஒத்த மற்றொன்றைக் கூறுவதன் மூலம், கருத்து வெளிப்பாடும், விளக்கமும் அமைய வருவனவற்றை, உருவகங்கள் என்பர். இலக்கியத்துக்கு நயமும்,

நலமும், சேர்க்கும் இவ்வுருவகமும் அழகுசேர்ப்பதால் உருவக அணி என்றே இலக்கண வல்லுநர்களால் அழைக்கப்பெற்று வருகின்றது. அள்ளித் தெளித்தாற்போன்று ஆங்காங்கு காணப்படும் உருவக அணிகள் இக்கதைப் பாடலுக்குத் தக்கதொரு இலக்கிய மதிப்பை அளிக்கச் செய்துள்ளன. எளிய விலங்குகள், வழக்கிலுள்ள பழமொழி போன்ற அமைப்புகள், இதிகாசக் கருத்துகள் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அவையாவன:

1. "எண்ண மில்லாம லிடிவந்து வீழ்ந்தக்கால்" (375)
2. "புல்வாய் புலியை வென்றிடுமோ" (1062)
3. "எலிப்பகை நாக முயிர்ப்பகை கெடாது" (1064)
4. "ஒடுங்காத வில்லுக்கு வில்விசையன் கையில்
உத்திரன் பாசுபதங் கொடுத்தாரே" (1067-1068)
5. "இளமறி குழையறி யாது" (1075)
6. "பேச்சுக் காமோ மரத்தின்முரண் வாச்சிக்கல்லோ தீரும்" (1749)
7. "சாண் காட்டுக் குள்ளே முழக்கம்பு வெட்டுவான் பாவி" (1792)
8. "தன்னிழல் தன்னைவிட் டப்புறம் போமோ" (1826)
9. "கோமடுப் புலியைப் புல்வாய் கொன்றிடுமோ" (2299)

என்றிவ்வாறான உருவக அமைப்புகள் இக்கதைப்பாடலுக்கு அணி சேர்த்துள்ளன.

## இதிகாச, காவிய, நீதிநூற் கருத்துகள்

இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களையும் நளன் கதை போன்ற காவியங்களையும், திருக்குறள் போன்ற நீதி நூற்களையும், இக்கதைப்பாடல் ஆசிரியர் கற்றுத்துறை போகியவர் என்பதை இக்கதைப்பாடலில் இத்தகு நூற்கருத்துகளை எடுத்தாண்டுள்ள திறத்தால் அறிய இயலுகின்றது.

'தம்பிமார் என்று எண்ணி இளமுறைக் கூறு தந்தால் அன்னார் நின்னைக் காட்டுக்கு ஓட்டி விடுவர்' என்று குலசேகரரிடம் எடுத்துரைக்கும் இராசகுலன், இதற்கு இராமாயணம், மகாபாரத, நளன் கதைத் தம்பிமாரைச் சான்று காட்டிப் பேசுகின்றான்.

"துன்றுங் கடுங்கானில் ஐவரைச் செல்லவிட்ட
திரியோதனன் தம்பி தன்மர்தா னல்லவோ
தமையன் றனையந்தக் காட்டிலே யோட்டினான்
வெம்பு கொடுங் கானிலே
விட்டதார் தம்பி புட்கர னல்லவோ
எக்குலத்தில் சம்பாதி சடாயுவை
போத்திக் காய்ந்தா னுடன்பிறந்தா னென்றே" (320-327)

எனத்தன் கருத்தை வலியுறுத்தப் பொருத்தமாக எடுத்துக் காட்டுகின்றான்.

திருத்தேவி தீக்கனவு கண்டதாகக் கூறி, இளமுறைக் கூறு பகிர இராசகுலனுடன் செல்ல வேண்டாம் என்று அழகனைத் தடுத்தபோது இராசகுலன், பெண்புத்தி கேட்கலாது என அழகனிடம் கூறும்பொழுது, இராமாயணச் சீதையையும், மகாபாரதத் துரோபதை யையும் சான்று காட்டுவதாகப் பாடலாசிரியர் படைத்துள்ளார்.

"கேளார்கள் பெண்புத்தியை உலகாளு மன்னவர்கள்
கேட்டல்லவோ திசைதரனுந் தாட்டிமையை யிழந்தான்
வாழார் வேல்விழிச் சீதைவார்த்தை தனைக்கேட்டு
வனத்திலன்று ராமர்பட்ட சளத்தை அறியீரோ
அறிவுடைய பஞ்சவர்கள் துரோபதைசொல் கேட்டு
அலக்கழிந்து திரிந்ததனை அறியவில்லையோ கண்டீர்"
(1645-1650)

என்கிறான்.

தூது பற்றியும், ஒற்றாடல் பற்றியும் திருவள்ளுவர் கூறிய திருக்கருத்துகளை இக்கதைப்பாடல் ஆசிரியர் தம் நூலில் சிறப்பித்துக் கூறியுள்ளார். வீரசிகாமணிக் கோட்டையுள் புகுந்தால் வெற்றி ஈட்டலாம் என்று ஒற்றறிந்து சொன்ன தூதுச் செய்தியை வைத்துச் சீவலவர் படை திரட்டிக் கொண்டு புறப்படும் நிலையைக் கீழ்க் காணுமாறு புலவர் புகழ்ந்துரைத்துள்ளார்.

"துணிவுடைய மன்னவர்க்குத் தூதுவர்கள் தாமேக
மணியெனமுன் சொல்லுமந்த வள்ளுவர்சொல் பழுதாமோ
பணிவுடனே மந்திரிதன் படைஉளவா ராய்ந்து சொல்லத்
திணிதடந்தோள் சீவலவர் சென்றுபொரத் துணிந்தாரே"
(782-785)

என்கிறார்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (குறள் : 389)

என்ற தமிழ்மறையின் கருத்தைக்கூறி கேடுகாலம் வந்துற்றபோது ஊழ்முந்த அழகனும், சீவலவரும் தென்காசி நோக்கிப் புறப்பட்டதை ஆசிரியர் விளக்கியுள்ளார்.

"உத்தகேடு காலத்துக் கூழ்வினைதான் முந்துமென
முற்றுமறை சொன்ன மொழியும் பழுதாமோ" (1160-1161)

என்று வினவுகிறார்.

கதைப்பாடலின் இறுதியில் தீயவை செய்த தீயவர்கள் அனைவரும் மடிந்ததையும், மறைந்ததையும் விளக்க வந்த கதைப்பாடல் ஆசிரியர்,

"பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்" (குறள்: 319)

என்ற குறட் கருத்தை உள்ளடக்கி,

"முற்பகை செய்தான்பி றர்சூடுந் தன்கேடும்
பிற்பகைகாண் பேனென்னும் பெத்திபோல்" (2197-2198)

எனப்பாடியுள்ளார். இதிகாச, காவிய, குறட் கருத்துகளில் ஊறித் திளைத்தவர் இப்பாடலாசிரியர் என்பதும், 'முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்றும் கொள்கைப் பிடிப்பாளர் என்பதும், இத்தகு நூற்கருத்துகளைக் கையாள்வதன் மூலம் தன் நூலைச் செவ்வியதாக்க முயன்றுள்ளார் என்பதும் தெற்றெனப் புலனாகும் உண்மைகளாகும்.

## ஆய்வுக்குரிய சில கருத்துகள்

### குலசேகரரின் குணவேறுபாடு

அழகன் பெருமாளும், சீவலவரும் இளமுறை கேட்பதை மன்னர் குலசேகரரிடம் இராசகுலன் கூறிவிட்டு, 'தேசம் பகுந்து நீர் கொடுப்பது முறையல்ல' என்று ஆலோசனை கூறும் மந்திரி என்ற வகையில் தன் கருத்தையும் வலியுறுத்திச் சொல்லி விடுகின்றான். கேட்ட குலசேகரர், அவர்கள் கேட்ட இளமுறைக் கூறினைத் தராவிட்டால் நமக்குள்ள மிகுதியான பகைவர்கள் எல்லாம் அவர்களுடன் சேர்ந்து கொள்வார்கள். கரந்தையிலிருக்கும் வீர மார்த்தாண்டன், மங்கைப் பதியிலுள்ள செய்துங்கன், வஞ்சி நாட்டான்,

மற்றும் முண்டன், தும்பிச்சியுடன், கயத்தாற்று வெட்டுமாறன் ஆகிய நம் பகைவர்களுடன் தம்பிமார் சேர்ந்து கொண்டு, நம்முடன் போர் தொடுத்து இளமுறையை வெற்றி பெற்று ஈட்டிக் கொள்ளக் கூடும்; இளமுறையுடன் தலைநகராம் தென்காசியையும் அவர்கள் கைப்பற்றி விடக்கூடும் என்று கூறுகின்றார். (340-350)

இக்கூற்று நெருடலான ஒன்றாக உள்ளது. அழகன், சீவலவரைக் குறித்து 'மகவாசை தீர்த்ததும் தம்பியர்கள் அல்லவோ' என்று கூறியும், அவர்களைத் தாயாய் வளர்த்தெடுத்துத் திருமணமும் செய்து வைத்துப் புலியூரில் இருந்து ஆள ஏற்பாடும் செய்து கொடுத்தவர் குலசேகரர். தம்பியர் மேல் அளவுகடந்த பற்றும், பாசமும், அன்பும், அக்கறையும் கொண்டிருந்ததால் இராசகுலன், வீரபாண்டியனின் வெறுப்புக்கும் ஆளானவர், அப்படிப்பட்டவர், இளமுறைக் கூறு தந்துவிடலாம் என்று கூறியும், பின் கருவை நல்லுரை இளமுறைக் கூறாகத் தந்தும் பின்னர்த் தேசம் பகிர்ந்து தருவேன் எனக் கூறுவதாகக் கதைப்பாடல் அமைந்துள்ளது. குலசேகரர் இளமுறைக் கூறு பகிர்ந்து தந்தது தம்பியர் மீதுள்ள பாசத்தாலா? பயத்தாலா என்ற ஐயத்தை மேற்சொன்ன கூற்று எழுப்புகின்றது. குலசேகரரை அண்ணர் என்ற நிலையில் அன்றி, அரசன் என்ற நிலையில் வைத்துப் பார்த்தால், அவர் பேசியது சரியே என்பதையும் புரிந்து கொள்ள இயலுகின்றது.

## சீவலமாறனின் செம்புக்கட்டியல்

ஒரே வீச்சில் நாராச வாழையைச் சீவலவர் வெட்டிய பின்னர், அழகனும், சீவலவரும் வாளெடுத்து வருவதைத் தடுத்து விடவேண்டும் என்று இராசகுலன் திட்டமிடுகின்றான். வாளுடன் அவர்கள் இருப்பின் அவர்களைக் கொல்வது அரிது என்பதைத் தெளிவாக இராசகுலன் அறிந்து கொள்கின்றான். குலசேகரரைக் கொண்டு தான் எண்ணிய காரியத்தை நிறைவேற்றிக் கொள்ள முனைகின்றான்.

> "வாய்த்ததம்பி மாருமக்கு அந்தரங்க மானால்
> வாளோடும் வருந்தொழிலை நாளோடும் நிறுத்தும்
> நிறுத்துமொரு கட்டியலை யெடுத்துவரச் சொல்லும்" (1470-1472)

நிருபர் பெருமானேயென்று இருகை தொழுது பணிகின்றான். உடன் குலசேகரரும், அழகன், சீவலவரிடம், "வெற்றி வடிவாளுடன் மூத்தவர்கள் இருக்கும்பொழுது, இளையவர்களான நீங்கள் அரண்மனைக்குள் வாளுடன் வரலாகுமோ? எனவே இனிக் கட்டியலுடன் மட்டுமே வாருங்கள். முற்றவெளி கடந்தபின் நீங்கள்

விரும்பியபடி வாள் வைத்துக்கொள்ளுங்கள்" (1482-1483) என்று அன்புக் கட்டளை இட்டு விடுகின்றார். அவரின் ஆணைப்படி அழகன் பெருமாள் மரத்தாலான கட்டியல் உண்டாக்கி, வண்ணம் பூசி, நண்ணிய கைப்பிடிக்கிறார். ஆனால் சீவலவரோ செம்பினால் கட்டியல் செய்து, கள்ள வாள் ஒன்றும் அதனுள் மறைத்து வைக்கிறார். கள்ள வாளிருக்கும் தோற்றம் வெளித் தெரியாமல், சாதிலிங்கத்தால் பூசி மெழுகி விடுகிறார். அன்பான அண்ணரின் கட்டளைக்கு மாறாகச் சீவலவர் இவ்வாறு செய்வது அண்ணர் மீது அவர் வைத்திருந்த மதிப்பிற்கும், மரியாதைக்கும் உகந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அண்ணர் என்ற நிலையில் மட்டும் அவரைக் கொள்ளாமல், அவர் ஓர் அரசர் என்ற நிலையிலும் சீவலவர் கருதிப் பார்த்திருக்கிறார். வஞ்சக மேகச் சூழலைக் கருத்தில் கொண்டு சீவலவர் முன்னெச்சரிக்கை உணர்வுடன் செயல்பட்டுள்ளதால், இது சீவலவரின் பண்புக்கு இழுக்கு என்றும், உடன்பிறப்புப் பாசத்துக்கு இழுக்கு என்றும் கருத இயலவில்லை.

## சீவலவரின் தற்கொலை முடிவு

சின்னப்பெருமாளாகிய சீவலவர் அறுபது மல்லருடனும் முனைப்புடன் போர் செய்கிறார். இறுதியில் மல்லன் ஒருவன் சீவலவரின் முடியைப் பிடித்து விடவே, நாக்கைப் பிடித்திழுத்து உயிர் துறந்தது சற்று நெருடலாக உள்ளது.

தன்தம்பி சீவலவரின் மரணம் கண்டு புலம்பும் அழகன் பெருமாள்,

"தீண்டாதவன் தீண்டாதவன் தீண்டின முடியென
மாண்டா னுயிர்த்தம்பி" (1923-1924)

என்று வருந்தும் பொழுது தான், சீவலவர் தற்கொலை செய்து கொண்டதற்கான காரணம் தெளிவாகப் புலப்படுகின்றது. 'எண்சாண் உடம்புக்குத் தலையே பிரதானம்' என்றபடி தன்தலையிலுள்ள முடியை ஒருவன் எட்டிப் பிடிப்பதென்பது தன்னையே, தன் வீரத்தையே அவமானப்படுத்தும் செயல் என்று சீவலவர் கருதி இருக்கக்கூடும். தன் வீரத்துக்கு இழுக்கான இந்த இழி நிலைக்குப் பின்னும் உயிரோடு இருக்கலாகாது என்றெண்ணி மாண்டிருக்க வேண்டும்.

போர் என்றால் புலியாக நின்ற சீவலவர், தன் அண்ணர் அழகனை விட அதி புத்திசாலியாகவும், அண்ணருக்கு ஏற்ற தம்பியாக அவரின் மெய்க்காப்பாளர் போன்று செயல்பட்டு, வீரசிகாமணிக்குப்

படைகொண்டு சென்று வெற்றி பெறல், நாராச வாழை வெட்டல் என்று அனைத்திலும் அண்ணரை ஈடுபடுத்தாமல் தானே முன்நின்று வெற்றி ஈட்டிக் காட்டிய, படைக்கு முந்திய அம்மாவீரன் மல்லருடன் நடந்த போரிலும் முதல் மரணம், அண்ணருடையதாக இல்லாமல் தன்னுடையதாக ஆக்கிக் கொண்ட தீரம் நினைந்து, நினைந்து போற்றற்குரியதாகும்.

## உண்மையான வரலாற்று நிகழ்வு

இந்தக் கதையின் கருவான பிற்காலப் பாண்டியர் காலத்தில் நடந்த இளமுறைக் கூறு தொடர்பான போராட்ட நிகழ்ச்சி உண்மையாக நடந்திருக்க வேண்டும். இதைப் புலவன் தன் கைவண்ணத்தால் கதைப்பாடலாக மாற்றியிருக்கிறார். பல வரலாற்றுச் செய்திகளைத் தன்னுள் அடக்கி வைத்திருக்கும், பல மரபுக் கூறுகளையும், பண்பாடுகளையும் வெளிப்படுத்தும் இக்கதைப்பாடல், சுவடி மூலமாகக் கிடைத்தது தமிழரின் நற்பேறு என்றே கருதவேண்டும். வரலாற்றுக் கதைப்பாடல்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவாகக் காணப்படும் இந்நாளில், இந்த வரலாற்றுக் கதைப்பாடல் கிடைத்திருப்பது பிற்காலப் பாண்டியர் வரலாற்று நிகழ்ச்சிகளை அறியப் பேருதவியும் பெருந்துணையும் புரிவதாகும். உடன் பிறந்தோர் மட்டுமல்லாமல், பெரியப்பா, சிற்றப்பா பிள்ளைகளான தாயாதிகளும் நாட்டைத் தம்முள் பாகுபடுத்திக் கொண்டு ஆட்சி செய்தனர் என்பதும், ஆனால் தலைமைப் பொறுப்பு மூத்தவன் ஒருவனிடமே இருந்தது என்பதும், மற்றையோருக்கு ஆளும் உரிமை மட்டுமே இருந்ததே தவிரத் தம்முடைய உடைமையாக ஆக்கிக் கொள்ளும் உரிமை அளிக்கப்படவில்லை என்பதற்கும், பிற்காலப் பாண்டியர் நாட்டை ஆண்ட முறை இதுவென்பதற்கும், உரிமையாக்கிக் கொள்வதற்கான முயற்சிகள் அவ்வப்போது நடைபெற்றன என்பதற்கும் ஆன வரலாற்றுச் சான்றாக, காலப்பதிவாக இக்கதைப்பாடல் சுவடி திகழ்கின்றது என்பது பேருண்மையாகும். இத்தகு வரலாற்றுப் பதிவுகளான கதைப்பாடல்கள் கால வெள்ளத்தாலும் கரையானாலும் அழிந்துபடும்முன் அச்சு வாகனம் ஏற்றுதல் தமிழரின் முக்கியக் கடமையாகும்.

கி.பி.1422 முதல் 1463 வரை பொன்னின் பெருமாள் என்ற சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் தென்பாண்டி நாட்டை ஆட்சி செய்ததைக் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் உறுதிப்படுத்துகின்றன. "மான கவசன்" என்றும் இவன் அழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இவன் அழகன் பெருமாளின் தந்தையாகிய பொன்னின் பெருமாளாக

இருக்கக்கூடுமா என்பது ஆய்வுக்குரியது. இம்மன்னன் சங்கரனார் கோயில், திருக்குற்றாலம், முதலைக் குளம், வீரகேரளம் புதூர் முதலான ஊர்களில் தன் பகைவரை வென்று புகழெய்தியதாக இவன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது.இவன் திருக்குற்றாலப் போரில் சேதனை வென்றான் என்பது அக்கிரகாரச் செப்பேடுகளால் தெரியவருகின்றது (Travancore Archaeological series Vol.I, pp.126 and 133).

இவன் விந்தனூர் முதலான ஐந்து ஊர்களில் அகரங்கள் அமைத்து அந்தணர்களுக்கு அளித்தமையும், திருப்புடைமருதூர், திருக்குற்றாலம் இவற்றிலுள்ள சிவாலயங்களில் மண்டலம் அமைத்தமையும் திருநெல்வேலியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு அர்த்தயாம வழிபாட்டிற்கு நிவந்தங்கள் விட்டமையும் இவன் மெய்க் கீர்த்தியால் அறியப்படும் செய்திகளாம். தென்காசிப் பெருங் கோயிலையும் இம்மன்னன் புதுப்பித்து, நாள் வழிபாட்டிற்கும், ஆண்டு விழாவிற்கும் தேவதான இறையிலியாகப் பல ஊர்கள் இவ்வரசனால் அளிக்கப் பெற்றுள்ளன. (T.A.S. Vol. I pp. 91, 92, 93 and 101)

விசுவநாதப் பேரேரி என்ற ஒரு ஏரியையும் குடிகளின் நலன் பொருட்டு வெட்டியதும் தெரிய வருகின்றது.[46] (T.A.S. Vol. I. p.51)

அழகன் பெருமாள் பராக்கிராம பாண்டியன் என்ற பாண்டிய மன்னன் ஒருவன் கி.பி.1473 முதல் 1506 வரை ஆட்சி செய்ததாகத் தெரிய வருகின்றது. இவன் அவிட்ட நட்செத்திரத்தில் பிறந்ததாகக் கல்வெட்டுச் செய்தி குறிப்பிடுகின்றது. கரிவலம் வந்த நல்லூரில் கிடைத்துள்ள கல்வெட்டொன்று கி.பி.1471 ஆம் ஆண்டு சீவல்லப சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரில் ஆறு வீடு கட்டும் மனைகளை வழங்கிய செய்தியினைக் குறிப்பிடுகின்றது.[47] 1474 ஆம் ஆண்டினதாகிய கன்னியாகுமரிக் கல்வெட்டுகளில் இவன் பராக்கிராம வீரபாண்டியன் என்றும் அழைக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது[48] (Sewell, Historical Inscriptions of Southern India, p.227). கதைப்பாடல் குறிப்பிடும் அழகன் பெருமாள் இவனாக இருக்குமா என்பது ஆய்வுக்குரியது.

---

46 பாண்டியர் வரலாறு T.V. சதாசிவ பண்டாரத்தார், பக்.161-164

47 A Topographical List of Inscriptions by V-Rangachari III Tinne 298

48 பாண்டியர் வரலாறு, ம. இராசசேகர தங்கமணி, பக். 624-625

* * *

# அழகன் பெருமாள் கதை
## ( மூலம் )

ஹரி:ஓம்
நன்றாக
குருவே துணை

## அழகன் பெருமாள் கதை

சிவமயம்

### விநாயகர் வணக்கம்

பரிவுபெறும் அழகம்பெருமாள்[1*] கதையை
இன்னிலமேல் பரிவாய்க் கூற
விரிவுபெறுஞ் சரசோதி[2] மென்மேலும்
என்னருகில் விருப்பஞ் செய்ய
அரியபுகழ்ப் பாரதப்போர்க் கதைபோலே
இக்கதையை யறிந்தே பாடக்
கரியமுகத் தொந்திவயற் றைந்துகரத்
தெந்தசரண் காப்ப தாமே.

பைத்தலை அரவங்கொன்றை பயிரவி பயில்வெண் டிங்கள்
மொய்த்தசெஞ் சடையார்[3] பாத முறையுடன் மேவி
னாளுங்
கொத்தலர்க் கரியகூந்தல் குலவரை மடந்தை[4] யீன்ற
மத்தமர்க் களிற்றின்செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

### வெண்பா

வல்லபுகழ்த் தென்காசி வடிவழகன் தன்கதையைச்
சொல்லவல்ல காவியநூல் சோராமல் - நல்லகுணபதியே
ஐங்கரனே குஞ்சரனே செஞ்சொல் கணபதியே
இக்க தைக்குக் காப்பு.

### விருத்தம்

புழுகொழுகு துளபமணி மால்மருகர் முருகர் பதம்போற்றி
னாளும்
வழுவில்லா நெறிதவறான் மால் குமாரசுவாமி மனமகிழ
வேண்டி
வழுதிகுல னழகம்பெருமாள் கதையை யின்னிலமேல்
வாழ்க நன்றாய்
எழுதி வைத்தோர் பொருள்விரித்துப் பாடினபே ரினிதூழி
வாழிதானே

---

* இத்தகு எண்களின் விளக்கங்களைச் சொல் விளக்கக் குறிப்புகளில் காண்க,

கடவுள் துணை. குருவே துணை.

ஹரி:ஓம்
நன்றாக
குருவே துணை

# அழகன் பெருமாள் கதை

சீர்கொண்ட தென்காசி தனிலிருந் தரசுபுரி
தென்னவன் கொற்கைநகர் மன்னவன் பெருமாள்
தார்கொண்ட புயமைந்தன் வடிவழகன் பெருமாள்
தம்பி சீவலதேவர் தன்கதையைக் கூற
ஏர்கொண்ட ஐங்கரனும் நால்வாய்[5] முக்கண்ணும்
இருசெவியு மொருகொம்பு முடையகரி முகனே
ஆர்கொண்ட வேணி அரனுதவு திருமகனே
அஞ்செழுத் தனுதினமும் நெஞ்சில்வைத் தோனே

## செந்தில் வேலவர் வணக்கம்

வைத்த சிறுபயறு பொரியப்ப மவலிளநீர்
வருக்கைப் பலாச்சுளை சர்க்கரை பருப்பும்
மெத்தநுகர் குடவயத்தனுக் கிளையவீரா
விண்ணவர் வணங்குமுகில் வண்ணன் மருகோனே
கொத்திதளி வைத்தசடை நித்தனருள் புதல்வா
குமர குருபர முருக சமரமயில் வீரா
சித்திரமத வேளழகன்தம்பி சின்னப் பெருமாள்
தென்னவர்கள் கதைபாட முன்னுதவி புரிவாய்
முன்னுதவி வாகைமுகில் தன்னை விலங்கிட்டோன்[6]
மூரி மகரக்கொடியை பேரின்மிசை வைத்தோன்[7]
கன்ன னழகன்பெருமாள் மன்னன் திருத்தம்பி
காவலவன் சீவலதேவர் கதைகூற
வண்ணமயி லேறிவரும் பன்னிருகை வேலா
வள்ளிமண வாளனுயர் வெள்ளிமலை வீரா
தென்னுலவு நீபமலர்[8] துன்னுமணி மார்பன்
செந்தில்வரு கந்தனையென் சிந்தனைசெய் வேனே
சிந்தைமகிழ் பூதந்தன்னை முந்துபணி கொண்டோன்[9]
செம்பொன்முடி யோடுபிறந் தம்புவி புரந்தோன்
சந்திரகுல வடிவழகன் தம்பிசின்னப் பெருமாள்
தங்கள் கதையைப் பாட வந்துதவு வாயே

## சிவன் பார்வதி வணக்கம்

அந்திமதி வாணிலவு தந்தசடி லேசர்
அங்கயக்கண் ணம்மையொரு பங்கிலுறை பெம்மான்[10]
வந்திதரும் பிட்டுக்கு மண்சுமந் திட்டோன்[11]
மாமதுரை நகர்மேவு சோமசுந் தரனே
தொடித்தலைகொண் டிந்திரன் முடித்தலை
புடைத்தோன்[12]
தேன்மருவு நீபமலர் தாமன்மது ரேசன்
தென்ன னழகன்பெருமாள் மன்னன் கதைகூற
பார்மகளு மாகிமுது நாமகளு மாகி
பரணிதனில் ஏடுகொண்ட வாணிசர சோதி
பூமகள் மனக்குரிய கோமகளு மாகி
பூவிலுறை பார்பதியென் நாவிலுறை வாயே.

வேறு

## கதைப்பாடல் வரலாறு

நாவிலோகம்[13] பெறுந் தீவிலுயர் கொற்கை
நகர்வழுதி பொன்னின் பெருமாள் குமாரர்
மேவலர்கள் பரவு குலசேகரப் பெருமாள்
மிக்காக வருந்தம்பி வீர பாண்டியனும்
...லவி... பெருமாள் மைந்தனழகன் பெருமாளும்
தம்பி சீவலதேவர் தாமுஞ் சின்னத்தம்பியும்
பூவுலகில் வாழும்நாள் மூத்தகுல சேகரர்
பொன்னின்முடி புனைந்தரசு பூண்டிருந் ததுவும்
இருந்த வடிவழக னிளமுறைக் கூறு[14]கேட்க
இராசகுல தேவனும் வீர பாண்டியனும்
தரும்பகை யறிந்தழகன் பெருமாள் தனக்கு
தம்பி சீவலதேவர் விண்ணப்பஞ் செய்ய
பொருந்தியது கேட்டழகன் துலுக்கன் குறிச்சியிலே
போனதுவு மந்திரியும் வீர பாண்டியனும்
வந்தளம் வீரசிகாமணியில் வந்ததுவும்
வடிவழகன் சாய்மலையில் வந்திருந் ததுவும்
சாய்மலையி லிருந்துதம்பி சீவலவ ரெதிர்த்து
தரியலரை வெட்டித் துரத்திவிட் டதுவும்
வாய்மதஞ்சொல் மந்திரியும் வீர பாண்டியனும்
மதகரியும் பரியும் விட்டோடி வந்ததுவும்
போய்முனை யிழந்தீர்க ளென்றுகுல சேகரர்
புன்னகை புரிந்திடவு மந்திரி பணிந்து
நீர்மன மகிழ்ந்திடக் கூட்டிவருவே னென்று

நெட்டூரன் சாய்மலையில் வந்திருந் ததுவும்
தன்னைநிக ரொவ்வாத அழகனுந் தம்பியும்
சர்ப்பினை[15]செ... ய மந்திரிசொ லூற்பனமாய்[16] நம்பி
பின்ன மில்லாம[17] லவர்கள்கூட வந்ததுவும்
பேய்க்குதிரை[18] யேத்தியவர் நோக்கி நின்றதுவும்
மன்னவ ரிருப்பு நாராசமற[19] வெட்டியதுவும்
வாள்வலியு மங்கவர்கள் தோள்வலியுங் கூற
இன்னபடி யென்றுகுல சேகரர்க் கோதியவன்
இச்சை தணியத்தணிய நச்சுமொழி பேசி
நச்சுவாய் மந்திரியும் வீர பாண்டியனும்
நமக்கிவர்கள் சீரிலவே றொதுக்கிடமு மில்லை
நிச்செய மென்றுகுல சேகரறி யாமல்
நிருபரிரு[20] பேரையுங் கொல்லத் துணிந்து
வைத்தபொன் னுடமையுந் தேசமும் பாதிதர
வாருமென் றழகனையுந் தம்பியையுங் கொடுபோய்
அச்சமற மல்லரை விட்டுயிர் முடித்ததுவும்
அதை அறிந்தே வெட்டுமாறன் வந்ததுவும்
வெட்டுமாறனும் படையும் வந்தது கேட்டு
வெகுண்டு குலசேகரர் முனிந் துரைத்ததுவும்[21]
இஷ்டமுறு தம்பிமார் பட்டதை[22] யறிந்து
இராசகுல தேவனை வெட்டி விட்டதுவும்
பட்ட மன்னருடன்[23] தேவிமார் மடிந்ததுவும்
பாரவாள் தன்னில் சின்னத்தம்பி பட்டதுவும்
அட்டதிசை[24] புகழ்காசி மாவலி புரந்ததுவும்
அம்புவியி லிக்கதையை யான்பாட லுற்றேன்

## அவையடக்கம்

பாடலுற்றே னேழுதிசைச் சீரு மறியேன்
...கொடைபுனையா வினைக ளொக்கும்
கூடு ( விட்ட ) பாவலர்சொல் வேத்திமைக ளறியேன்[25]
குறித்ததொகை காலமிடம் நிறைத்திடுஞ்சொல்
நீடுமையந் தனைமுதற்கு முரிப்பொருளும்
நிக்களத்து மகப்பொரிளுனொடு[26] பிறப்பொருளு[27] மறியேன்
தேடுதமிழ் முதலெருத்துப் பாகவிமு றாக
தெண்டி[28] சொன்ன முப்பத்து ரண்டறமு மறியேன்
அறிவா லுயர்ந்த முத்தமிழ்வாணர் சபையில்
அழகன்பெருமாள் கதையை யான்பாட லுற்றேன்
மறி[29]யாடுஞ் சங்கர னரனாடு சபையிலொரு
துள்ளுசிரம் போய்நின்று துள்ளுவதை யொக்கும்
பொறி[30]யாடு படனாக மாடுவது கூட

பூநாகம்[31] நானாடுவே னென்ப தொக்கும்
நரையாடுஞ் செங்கமல நாண்மலர்க்[32] கிணையாய்
நற்கயத்[33] தாம்பல்மலர் நிற்பதுவு மொக்கும்
நிற்பரமாய் ஓடிவருங் குதிரைக்கு முன்னோடி
நிருமித்த சப்பாணி யொருமிப்ப தொக்கும்
சிற்பனூல் வல்லவர்கள் வகுத்த வுருவைப்போல்
செய்வேனென் றொருகுசவன் கைவிரவ தொக்கும்
நற்பவளம் விலைகூறி விற்பவர்கள் முன்னே
நண்பினுடன் விலைகூறு மண்பவள மொக்கும்
பொற்பதுமை மன்னவ ரழகன்பெருமாள் கதையை
புகலநான் துணிந்த [துணி]வெவரும் பொறுப்பீரே.

## வேறு

### கதைப்பாடலாசிரியர் வரலாறு

பொறுத்த பொறையறிவு வரித்தனத்தினோடு பிறந்தோன்
பொருத்து பல்கலைத் தொழிலும் படித்தறிந்த சமத்தன்
நிறுத்தபுகழ்ச் செழியனுக்குச் சேரன் சோழனுக்கும்
நீள்சிலம்பத் தொழில்பயித்து மேனாதிக் குலத்தோன்
நரைத்திவலை துளித்தருளுஞ் சந்தனத்தார் மார்பன்
நம்பினவர் தஞ்சமெனும் வஞ்சமறி யாதான்
சின்னப் பெருமாளுட னழகன்றனைச் சேவித்திருந்த
சிலம்பத்தொழில் பயித்திவிற்ற பணிக்கன் மாவுதித்தோன்
பணிக்கன் குமாரன் தோப்பி லணைஞ்ச பெருமாள்சொல்
ப(ா)ல னழகன் துணைவன் நாகுத்தன்மந்தன்
கணக்கதிய வளமைதிகழ் செந்தில்நகர் முருகன்
கஞ்சமலர்[34] தாள்பரவுந் தம்பி சீவலவன்
மணத்தமல்லித் துடர்மார்பன் மாந்தை நாராயணன்
மைந்த னழகிய நம்பி கவிராச னருளால்
இணைத்தமலை புயத்தழகன் சீவலவர் கதையை
எவரு மகிழ்ந்திடக் காவியம் பாடினானே

### வாழி! வாழி!

காவியம் பயிலும்நூல் மறைவாணர் வாழி
கவிராசர் வாழி மிகு புவிராசர் வாழி
பூவுலகில் வாழி மனுமுறை நீதிவாழி
புயல்[35]வாழி சிவசமைய முனிவோர்கள் வாழி
மேவலர்கள் பரவு குலசேகரப் பெருமாள்

விருதரசன் மணவாளன் வடிவழகன் பெருமாள்
பாவலர்கள் புகழ்தம்பி சீவலவர் கதையை
படிப்பவருங் கேட்பவரும் நீடூழி வாழி

## பாண்டியர் பரம்பரைச் சிறப்பு

நீடுதமிழ்ப் பாண்டிவள நாடுதனிற் புரந்தோன்
நிருபர (வி) சேகனுயர் மதுரைநகர் மன்னன்
மாடமணி கூடலில்நின் றாடல்புரி சிவனை
மாறியாடக்[36] கண்ட வழுதிகுல[37] திலகன்
தேடும்வைகை நதியடைக்கக் குட்டைதலை[38]வைத்தோன்
சிற்பரனை யன்றுமொரு கைப்பிரம்பா லடித்தோன்[39]
கூடியெழு கார்முகிலை யாடல்விலங் கிட்டோன்
கொத்தமகா மேருவில் வரைக்கயல் பொறித்தோன்
பொறிக்கமுறு தமிழ்ப்பாடல் புவிக்கணியான் வகுத்தோன்[40]
புலவருட னிலங்குசங்கப் பலகைதனி லிருந்தோன்[41]
மறுக்கமுடையாள் கதவைத் தெறித்தவிரல் தறித்தோன்[42]
வடிவுடைய செங்கனக முடியொ(டு) பிறந்தோன்[43]
சறுக்காத பூதந்தனை மறுத்தேவல் கொண்டோன்
தடங்கரைக் கடந்தாளில் வடிவம்பலம் நின்றோன்[44]
குறித்தகழை வனத்தூடு புன்னைவனந் தனிலும்
கொங்குலவு நரையிதழி சங்கரனைக் கண்டோன்[45]

## தென்காசிநகர் வளம்

சங்குலவு யிலங்குசெங்கை மங்கையர்பந் தடிக்கும்
தனிமாடக் கொடியுமுயர் மணிமேடைக் கொடியும்
தெங்கிளநீர்க் குலையுமிளம் பைங்கதலிக் கொலையும்[46]
தேர்க்கழகு காட்டவருஞ் செங்கதிரோன் றனக்கு
மங்குலகு வளர்கமுகின் பூவரியைப்[47] பிடுங்கி
வானரங்க ளெடுத்துமெள்ளச் சாய்மரைக[48] ளிரட்டும்

## தென்காசி மன்னன், குலசேகரப் பெருமாள் பரம்பரை

கொங் (கு) லகு பொங்கர்செறி[49] தென்காசி மன்னன்
குலசேகரப் பெருமாள் மைந்தரிரு பேரில்
மைந்த ரிருவரில் மூத்தபொன்னின் பெருமாள்தன்
மக்கள் குலசேகரரும் வீர பாண்டியனும்
குந்திதரு தன்மனும்[50] வீமனும் போல்வார்கள்
குலசேகரர் மூப்புக் கொண்டிருந்தாரே

புந்திமகிழ் தென்காசி தனிலிவர்க ளிருக்க
புலியூரிலே தன்மப் பெருமாள் குமாரர்
இந்துகுல திலகன் வடிவழகனுந் தம்பியரும்
இராம லெட்சுமிணரைப் போலிருந் தாரே

**வேறு**

குலசேகரர், தாயாதி மக்களை வளர்த்தல்

இராம லட்சுமிணர் போலிருக்கு மிளையோர்களைத் துணையாய்
யான்வளப்பன் எனவே வளத்த குலசேகரப் பெருமாள்
காமிகுத்த புலியூரில் வைத்து முறை யோதிவித் திடவே
காவியத்தி னோடு நாடகத்துறை நன்னூல் கத்தனரே
(ஆ)மெனச் சிலம்(பு)போர் பணிக்கர்[51] சொன்னவாறு கத்தனரே
வேறாயுதத் தொழி லாரிவர்க்கு நிகராமெனக் கை விரைவார்
ஏமமிக்க[52] பரிமேவல் கற்றனர் பின் வாரனுப் பிடரின் மேல்
ஏறல் கற்றனர் கண்ணாமெனத் தமையனார் வளர்ப்பவ்ரே

**வேறு**

ஆடை, அணிமணிகள் பூட்டி அரசாள ஊரும் ஒதுக்குதல்

வளந்தார் சிலம்பத்தின் வல்லமை கண்டு
மன்னர் குலசேகரப் பெருமாளும்
உள்ள மகிழ்ந்தே திருத்தம்பி மாரை
உத்த புயத்தோ டணைத்துத் தழுவி
அனைத்துவிர லாழியொடு[53] முன்கைவளை பூட்டி
ஐம்பொற் றிகழ்முடிச் சாற்றுங்[54] கொடுத்து
கணித்த புயத்துக்கி வங்கு[55] வலையத்தினோடு[56]
காதுக்குக் கொத்துக் கடுக்கனு மிட்டார்
இட்ட சரப்பளி[57] தும்..மப் பதைக்கம்[58]
எடுத்தான் கொடுத்தே யுடுத்தானதே யுலாத்தான்
கொட்டாரக்கரை நெய்த பட்டாடை நல்கி
குளுந்தமொழி பேசித்தன் பக்கத்தில் வைத்தான்
வைத்தா னிருந்தா ரழகனுந் தம்பியும்
மல்லுக்கும் வில்லுக்கும் வல்லவர்க ளென்றே
கத்தத் துரோகி ராசகுல தேவன்

கண்டு பொறாமற் தலைகவிழ்ந் தானே
தலை கவிழ்ந்தே வீரபாண்டியனும் நின்றான்
தாயாதி யாளப் பொறுப்பாரு முண்டோ
நிலைமை தவறாத குலசேகரர் புலியூரில்
நீடூழி வாழ்ந்திரு மென்றே யனுப்ப
அனுப்புந் தமையனைத் தொழுது விடைகொண்டே
அழகனுந் தம்பியுஞ் சின்னப் பெருமாளும்
நினைக்குமுன் புலியூரிலே வந்தி ருந்தார்

## தம்பியருக்கு மணமுடித்தல்

நிருபரிரு பேர்களு மிருக்கின்ற நாளில்
இருக்கு முறைப்படி சொன்ன வடிவழகன் சில கன்னியரை
இருவருங் கைப்பிடித்திட மனமியத்தி
செருக்குப் புலியூரில் தம்பியரை யிருத்தி
தென்காசி தன்னில் குலசேகர ரிருந்தார்

## குலசேகரர் தென்காசியிலிருந்து அரசாளுதல்

தென்காசி யூர்நல்ல பொன்காசி யென்ன
தேசம் புரந்த குலசேகர ரிருந்தார்
அன்பான திருத்தம்பி வீர பாண்டியனும்
அல்லிமலர் வல்லிவுணர் வில்லவ ராயனும்
வில்லவ ராயனுங் காளிங்க ராயனும்
மிக்காக மந்திரி ராசகுல தேவன்
பல்லவ ராயனுஞ் செய்துங்க ராயனும்
பண்புடைய சீவல கண்டிய ராயனும்
கண்டகாரியஞ் சொல்லு மந்திரிக ளாகவே
காசினி[59] புரந்தகுல சேகர ரிருந்தார்

## சின்னப்பெருமாள் இளமுறைக் கூறு கேட்கக் கூறுதல்

புண்ட ரீக[60] மலர்முகத் தழகனுந் தம்பியும்
புலியூரிலே வாழ்ந்திருக்கின்ற நாளில்
இருக்கும் படைக்கும் யானைக்கும் குதிரைக்கும்
எப்போதும் அண்ணர் பணங்கொடுப் பாரோ
செருக்கும் பசும்பொன் றனக்கென் றிருந்தால்
சீமையும் வாண்மையும் ஆண்மையும் நடக்கும்
நடக்கின்ற காவிடறு மென்பதறி யீரோ
நாளையொரு காலமொரு வேளை வராதோ

இடுக்கம்[61] வராம லிருப்பவரு முண்டோ
எப்போது போலே யிருக்குமோ சொல்லீர்

## குலசேகரரின் மந்திரி இராசகுலதேவனிடம் கூறுதல்

சொல்லுமென் றடிதொழுத சின்னப்பெருமாள் தன்னை
சுந்தரத் தோளழகன் பெருமாளும் நோக்கி
நல்லதல்லோ தம்பிநீ சொன்ன காரியம்
நம்முடைய யிளமுறைத் தேசமே போதும்
தேசமுழு தாண்ட அண்ணாவி குலசேகரர்
திருவுள மறிந்த மந்திரியுடனே சொல்லி
நேசமுடன் வாவென்று வடிவழகன் சொல்ல
நின்றடி வணங்கி விடைகொண் டயல்நடந்தான்
நடந்து துரைமக்கள் புடைசுத்தவே தென்காசி
நன்னகர் புகுந்து சின்னப் பெருமாளும்
திடம்பெரிய மந்திரி ராசகுல தேவனும்
சித்திரக் கூடத்தில் வந்திருந் தாரே
சீவல தேவனென யாவரு முரைக்க
மெத்தப் பயந்தோடி ராசகுல தேவன்
வேந்தர் பெருமாள் திருமுன்வீழ்ந்து தெண்டனிட்டான்
தெண்டனிட் டடிவணங்கி வாய்மலர் புதைத்து
செங்கையொடு முந்தியு மொதிக்கியயல் நின்றான்
மண்டலத் தரசர்தொழும் பொன்னடி வருந்தியென்
வாசலி லெழுந்தருளி வந்த காரியமென்
வந்த காரியமேது திருவுளம் பகருமென
மந்திரி ராசகுல தேவனுரை செய்வான்
சிந்தைமகிழ்ந் தருகு வாவென்றே யழைத்து
சீவலவர் தான்வந்த காரியஞ்சொல் வாரே.
காரியஞ்சொல் மந்திரியில்லா வாசலு மில்லை
காவலர்க்கு மந்திரிமார் கண்ணின்மணி யல்லவோ
வீரியத்தை மறந்துசெய்யும் காரியத்தை நினைந்தே
வேந்தருக்கு நல்லபுத்தி யாந்துரைக்க வல்லாய்
வல்லவர்கள் மந்திரிமா ரென்பதை யறிந்துன்
வாசலிடை வந்தோம்நாம் ராசியமாய்ச்[62] சொல்லும்
அல்லாதெங்கள் வகைதுகையு மொனக்கு
நன்றாய்த்தெரியும்
அண்ணர்குல சேகரர்தன் செவிபொறுக்கச் சொல்லி
பொறுக்கு மிளமுறைத் தேசம்தர வேணுமெனவே
புகன்றமொழி தனைக்கேட்டு ராசகுல தேவன்
மறுக்க மறந்து வாய்புதைத் தடிவணங்கி
மனதிலொன்றும் வாக்கிலொன்றும் சொல்லத்
துணிந்தானே

துணிந்துநிற்கி விளமுறைத் தேசம் வருங்காண்
சுமித்திரியாய்ப்[63] பகிர்வதிந்தத் தேசத்தில்
சொம்பாதி[64]
வணங்கியுங்கள் காரியஞ்செய்வே னொருவனிருக்க
மறுப்பதென்ன திருவுளத்தில் நினைத்தபடி முடிப்பேன்
முடித்திடுவே னினைத்தபடி எழுந்தருளு மெனவே
முகிணகை புரிந்துதம்பி சீவலவர் எழுந்தார்
வடித்த புலியூரில் வந்து படிப்படியே சொல்ல
வடிவழகனுங் கேட்டு மனமகிழ்ந் தானே

## இராசகுலதேவனின் வஞ்சகம்

இருந்தான் வந்தான் ராசகுல தேவன்
இசைக்குமன்ன ரிருவருக்கு மகத்தில்வந்த சனிபோல்
திருந்துகுல சேகரர்தன் கோவிலுக்கால் சென்று
சென்றுள மகிழ்ந்துபடை நின்றடி பணிந்தானே
பணிந்தா னரக்கர்குலம் வேரோடு முடித்த
பாதக விலங்கையில் மகோதரனைப்[65] போலே
துணிந்தா னிருந்தவரை எல்லாரையும் விலக்கி
சுத்திலுந் தன்மனுடர் தங்களை நிறுத்தி
தங்கள்குல சேகரரும் வீர பாண்டியரும்
தானும் தனித்திருந் தரசன்முகம் நோக்கி
உரைத்தமொழி கேளுமென்று விரைந்துரைக்க லுற்றான்.

வேறு

மந்திரியின் தந்திர மொழிகளும் குலசேகரரின் கூற்றும்

விருத்தம்

உத்தோர் வயத்தி லுதித்தோரை யல்லாமல்
மற்றுமொரு தம்பியரை மன்னவரும் நம்புவரோ
இற்றவரை[66] யல்லா ரி ( ளமு ) றைகேட்டா னெனவே
கொற்றவர்க்கு ராசகுல தேவனுங் கூறலுற்றான்

வேறு

உத்தா ரிளமுறைத் தேசந் தங்களுக்கென்றே
ஓங்கு கருவைநல்லூர்ச் சீமை கேட்கிறார்
கொற்ற முடையவர்க் கெப்படித் தானென்று
கொடுத்தால் நாளையுந் தொடுப்பார் சொம்பகிரென்பார்
தொடுப்பார் பகிரென்பார் சொம்பகிரா விட்டால்
துறட்டித்[67]தினஞ் சண்டை மூட்டிக்கொண்டே நிற்பார்
அடுத்த குதிரையும் யானையும் பங்கென்பார்
அல்லால் கருவேல[68] மெல்லார்க்கும் பொதுவென்பார்

பொதுவென்பார் சொம்பகிராதே விட்டாக்கால்
போச்சு தடியேற்கு மூச்சேது கடவாது
மதியால் பெரியவ னழகனுந் தம்பியும்
வாழ்வா ரிளமுறை தரச்சொன்னா ரெனச்சொன்னான்
சொன்ன (மொழி) கேட்டுக் குலசேகரர் தானந்த
துன்மந்திரி முகம்பார்த் தேது சொல்லுவார்
இன்னஞ் சிறுபிள்ளை யல்லவே தம்பிமார்
இன்று கொடுக்கலா மிளமுறைக் கூறென்றார்
என்ற மொழிகேட்டு ராசகுல தேவன்
இன்னங் கேளுமொரு விண்ணப்பஞ் சொல்கிறேன்
துன்றுங் கடுங்கானில் ஐவரைச் செல்லவிட்ட
திரியோதனன் தம்பி தன்மர்தா னல்லவோ
தம்பிதா னல்லோ பரதனி ராமர்க்கு
தமையன் றனையந்தக் காட்டிலே யோட்டினான்
வெம்பு கொடுங் கானிலே
விட்டதார் தம்பி புட்கர னல்லவோ
எக்குலத்தில் சம்பாதி சடாயுவை
போத்திக் காய்ந்தா னுடன்பிறந்தா னென்றே
உட்கலந்து மரத்தில் முளைத்த புல்ல...
ஊறிப்போய் நிற்பார் தாயாதி மாரல்லோ
அல்லா லுடன்பிறந்த வீர பாண்டியன்
ஆகு மிளமுறை அவர்க்கென்றா லடுக்குமோ
நல்லபலா நிற்கக் காஞ்சூரை[69] நாட்டுமோ
நம்பக் கணக்குண்டோ தாயாதித் தம்பிமார்
தாயாய் வளத்தீ ரெடுத்தீ ரினிமேலும்
சனுவாய்[70] நடத்துவ தெல்லார்க்குஞ் சம்மதம்
தேசம் பகுந்துநீர் குடுப்பது முறையல்ல
சித்தமெனச் சொன்னான் ராசகுல தேவன்
சித்த மெனச்சொன்ன மந்திரிதனைப் பார்த்து
சீறிக் குலசேகரப் பெருமாள் சொல்வார்
மெத்தப் பகைவ ரவருடன் கூடுவார்
வீர மார்த்தாண்டன் கரந்தையி லிருக்கிறான்
இருக்கிறான் மங்கைப் பதிதன்னில் செய்துங்கன்
இவனல்லால் வஞ்சி நாடனுங் கூடுவான்
வெருக்குள்வார்[71] முண்டன் தும்பிச்சி யுடனந்த
வெட்டு மாறனுங் கயற்றாற்றி லிருக்கிறான்
வெட்டு மாறனு மிருக்கிறான் கயற்றாற்றில்
கயத்தில் போய்விழுந்த கடுமுதலை போல
கடுக யிவருந்தா னவருடன் கூடுவார்
செயித்துக் கொள்வார் தம்பிமா ரிளமுறை
தேச மல்லாமல் தென்காசியு மென்றான்
என்றா னினிச்சித்த மென்றுகை கூப்பியே

இராசகுல தேவன் பேசாமலே போனான்
வென்றிப்புனை வீர பாண்டியனுஞ் சென்றான்

### இராசகுலதேவன், வீரபாண்டியனின் சூழ்ச்சி

வேறோரிடத் திருவருங் கூடிப் பேசுவார்
பேசு கின்றே னொருகோடி யுத்திரம்[72]
பேசப் பார்த்துமென் பேச்சுக் குள்ளாச்சில்லை
நேச மான அழகனுந் தம்பியும்
நிச்செய மிளமுறைக் கூறு கட்டுவார்
கட்டுவார் பின்னைத் தென்காசிச் சீமையும்
கட்டி நம்மையும் வெட்டித் துரத்துவார்
தட்ட வேணு மிவரைச் சமயத்தில்
சதிக்க[73] வேணு மெனக்கது சம்மதம்
சம்மத மென்றே ராசகுல தேவன்
தகைக்கொப்பா யந்த வீர பாண்டியனுந்தான்
அம்மை பாகர் குற்றாலர் திருவாணை
அஞ்சாதே யென்று சத்தியமாய்ச் சொன்னான்

### சூழ்ச்சியறிந்து அழகனுந் தம்பியருந் தப்புதல்

சத்தியஞ் செய்திரு பேருங் கூடியே
சம்ம தித்துச் சதிக்கத் துணிந்ததை
உத்தியா[74] லறிந்தோர் சொல்லக் கேட்டுமோர்
ஒட்ட னோடிப் புலியூரிலே சொன்னான்
ஒட்ட னோடிப் புலியூரிலே சொல்ல
உறுதி கேட்டா ரழகனுந் தம்பியும்
கேட்ட போது மனது கலங்கியே
கேடு சூழ்ந்துதென் றெண்ணி யிருந்தனர்
எண்ண மில்லாம விடிவந்து வீழ்ந்தக்கால்
என்செய் வோமிது முன்செய்த பாவங்காண்
அண்ணர் சர்ப்பினை செய்ய நினைப்பரோ
அந்த மந்திரி தந்திர மிதுவென்பார்
தந்திரத் தினுட னிந்தச் சமையத்தில்
தப்ப வேணுமென் றழகனுந் தம்பியும்
முந்தப் பாலூருக் கணியானை யழைப்பித்து
முகிழ்த்தங்[75] கேட்டுக்கொண் டொருமித்துப் பிறப்பிட்டார்

### விருத்தம்

பிறப்பட்டந்த மந்திரிதான் பொல்லாத நினவெடுத்தான்
அறக்குலையுண்[76] டழியாம லப்பறப்போ போமெனவே

திறப்படவே வடிவழகன் செப்புதலுஞ் சின்னப்பெருமாள்
மறப்படையுந் தானுமாய் வழிநடக்கத் துணிந்தாரே.

நடை
வேறு

ஒருமித்துக் கொண்டெழுந்து தம்பி சீவலவ தேவர்
ஊரு முண்டடைத்துக் கோவில்பூசையுங் கூடியபின்
கருமத்தையு நினைத்துத்தங்க ளண்ணரையும் அனுப்பி
கருவேலமுந் தம்பிமாரையும் பரிகலமு[77] மொதுக்கி
பரிகலமு மொதுக்கிப் பிறங்காட்டாப் புலியுடனே
பண்புடைய சேவகர் நூத்தன்பது பேர்கூட
இதற்கு வகையேது யிந்தநேரம் பிறப்பிடுவோம்
என்றுசின்னப் பெருமாளு மிசைந்துமன மகிழ்ந்து
திருவரையில் கச்சைகட்டிப் பொன்னுடை வாளிறுக்கி
செங்கைதனக் கிணங்குபொன்னின் சிங்காடி வில்[78]பிடித்து
மருவலரை[79] வெட்டநல்ல அழகன் பெருமாளும்
மறப்படையுந் திறப்படவே பிறப்பிட்ட சிங்காரம்
சிங்கார மதரூபன் சின்னத்தம்பி தனக்கு
செம்பொற் கச்சைகட்டிக் கையிலுடை வாளுப்பிடித்து
மங்காத சின்னத்தம்பி தனைப்பரி மேலேற்றி
முன்னப்பரி முப்பது முன்னெண்ணிக்கையும் பிடித்து
பிடித்த கலப்பானை தம்பிக்கை செம்புடனே
பொட்டகமுந் தட்டுமிட்டுங் கட்டுமெட்டா யெடுத்து
மலர்ந்தபுக ழழகன்தம்பி சீவலவ தேவர்
மல்லகதி நம்பிரான்மேல் கல்லணை வைத்தேறி
கல்லணைய புயத்தழகன் றம்பிமாரும் படையும்
கள்ளரைப்போல் நடக்கலுற்றா ராத்தங்கரை வழியே
மெல்லப்பேசும் வழிமறிச்சல் நட்டுத்திட்டை வழியே
விட்டுவிடு மந்தவழி கிட்டவு மொண்ணாது
மேற்குநோக்கி நடந்தார் சித்தாத்தங் கரைவழியாய்
திட்டெனவே நடந்தபடை பணப்புளியூர் தனிலும்
செல்லாமல் வழுதியூ ரிடைகாவி லேறி
காவி விழியார்கள் மடலேறு மதரூபன்
கன்ன னழகன்பெருமாள் மன்னவனுக் கிணையாய்
சீவலவ தேவரும் பின்னிளைய தம்பியான
சின்னத்தம்பியும் படையும் பாவூர்க் கணியானும்
பாவையர்க ளென்னுகரி பரிவாரத் தாரும்
பண்புடைய சேவுகரும் நண்புடைய பேரும்
மேவுபிறஞ் சாய்ந்துவந்தா ரென்றரசர் தம்மை

## துலுக்கன் குறிச்சியில் தஞ்சமடைதல்

மினவவந்தாப்[80] போலேதான் வெண்கதிரோ னுதித்தான்
வெண்கதிரோ னுதித்து வெயிலெங்கினு மெரிக்க
வினைவிளைத்தார் தங்கள்குல வேந்தரொளி மங்க
துங்கபுயன் வடிவழகன் றம்பிமாரும் படையும்
துலுக்கன் குறிச்சியிலே தான்வந் திருந்தாரே.

வேறு

வந்திருந்தா ரழகன் பெருமாளுடன் றம்பிமாரும்
மறப்படையும் பரிகரியு மிரைத்தமொழி[81] கேட்டு
பந்திபந்தி யாய் ( வந் ) த கரையாளர் கூடி
பால்தயிர்நெய் யரிசிகறி யு ( லு ) ப்பைகளுங்[82] கூடி
உலுப்பைகளுங் கொண்டுவந்து கண்டுதெண்ட னிட்டு
ஊருக்கரை யாளர்[83]நின்ற நேரத்திலே வீரன்
மலர்க்கமலம் போலு முகத்தழகன் பெருமாளும்
மனமகிழ்ந்து முடிதூக்கி அனைவரையும் பாத்து
அனைவருந்தான் கேளுமினி நாங்கள்வந்த வாறு
அண்ணல்வாசல் மந்திரிதான் பின்னஞ்செய்த[84] வாறு
வினையமில்லா தெங்க ளிளமுறைக் கூறுகேக்க
விடையமிட்டான்[85] மந்திரியும் வீர பாண்டியனும்
பாண்டியர் குலத்துக்கெல்லாம் பரிவிழைக்கத்[86] துணிந்து
பத்திரமாய்த் தங்களிலே சத்தியமுஞ் செய்து
ஒட்டன் தீபரமாய்[87] வந்துசொல்வார் வழியே
போர்ந்தோம்
போர்ந்தோம்நீர் மனந்துணிந்து வைத்திருந்தா லிருப்போம்
போமொன்றா லிப்பொழுதோ ரயனூர்க்கும் போவோம்
அந்தரமாகச் சொல்லுமென் றழகன் கேட்க
அடிதொழுது நின்றி ( ற ) ஞ்சிக் கரையாளர்
கரையேறி யெப்படியு மிளமுறைக் கூறுமக்கு
கருவைநல்லூர் வாங்கிடுவோ மரசர் திருவாணை
அரசிழந்து போகாம லிருந்தருளு மெனவே
அழகனுந் தம்பியுந் துலுக்கன்குறிச்சி தனிலிருந்தார்

விருத்தம்

இருந்துநீங்க ளரச ரிருவரையுங் கொல்லத் துணிந்து
பொருந்தாத மந்திரியும் புகழ் வீர பாண்டியனும்
திருந்தாத மனந்திகைக்கச் சின்னப் பெருமாளுட னழகன்
குருந்தார் சூழத் துலுக்கன் குறிச்சியில் வந்திருந்தாரே.

நடை
வேறு

## இராசகுல தேவனின் துர்போதனை

இருந்தா ரழகன் பெருமாளுடன் தம்பிமாரும்
இந்தராத்திரி போனார் துலுக்கன்குறிச்சி விடிய
பொருந்தாதவர் போனகாரியஞ் சும்மா போமோ
என்று பூதலத்தோர் சொல்லிக் கொள்வதை மந்திரி கேட்டான்
கேட்டான் ராசகுலதேவன் போனது மெய்யோ
என்றுகேட்டு நின்றாரை விசாரியுங்கோ வென்று சொன்னான்
ஓட்டன் விசாரித்துவந்து மெய்தானென்று சொல்ல
விரைந்தோடிக் குலசேகரப் பெருமாள் முன்புசென்றான்
செய்யாத காரியஞ் செய்யத்துணிந்தா லாமோ
சும்மா தேசம்பகிர்ந்து குடுக்கவுஞ் சம்மதித்தீரே
வென்றிபெற நின்று வா ( ய் ) மலர் ( த ) ன்னைப் புதைத்து
ஒருவிண்ணப்பஞ் செய்தானே அண்ணர்க்கு நின்னயமாக[88]
அய்யா அவரைப் பொதுவற நம்பிவிட்டீரே
நானு மப்போதே சொன்னேனே சர்ப்பினை செய்வார்க ளென்றே
சர்ப்பினை செய்தா ரழகனுந் தம்பிமார்தானும்
நடுச்சாமத்திலே போனார் துலுக்கன் குறிச்சியிலென்றான்
கல்போல் மனத்தான் குலசேகர ரதுகேட்டு
என்ன கன் ( ம ) ம்[89] விளைந்துதென் றெண்ணினார் கண்ணீர்மலங்க
கண்ணீர் மலங்கவுங் கண்டந்த மந்திரி சொல்வார்
இருகண்ணின் மணிபோல் வளத்தவரென்று எண்ணாமல்
மண்ணின்மே லாசைபடைத் தும்மைக்கொல்லத் துணிந்தால்
சொல்லும் வாயேது நம்புமோ தாயாதித் தம்பிமார் தன்னை
தம்பிமார் தும்பிச்சி நம்பிக்கை கொண்டல்லோ போனார்
அது ( வு ) மல்லாமல் இராசதள மட்டுஞ் சொல்வார்
பண்பில் பகைவருடன் கூடப்பாத் திருந்தோமே
சீறிப்பாயு மெருதுக்குக் கொம்புசீவிக் கொடுத்தாப்போல்
போகவிட்டே யினியிருப்பது காரிய மல்ல

மிஞ்சிப் போகாமல் மீட்டிக்கொள்வதே காரிய மென்றான்

வேகமுடனிந்த ராசகுல தேவன் சொல்ல
அந்தவேந்தர் குலசேகரப் பெருமா ளிதஞ்சொல்வார்
சொல்லாமல் போனவ ருன்னையும் நம்மையும் தேறார்
தலைதொட் டாணையிட்டுக் கொடுத்தாலு மீண்டிங்கு வாரார்
எல்லாம் பதறாமல் செய்வதே காரியமென்ன
அந்த ராசகுலதேவ னின்னமோர் விண்ணப்ப மென்றான்

### அழகன், தம்பியரைப் பிடிக்க எண்ணுதல்

விண்ணப்ப மென்னுடனே வீரபாண்டியர் தம்மை
இந்தவேளை யனுப்பிடும் நாளையெல்லாங் கூட்டிவாரோம்
கண்ணுக் கிணைய ரிணங்கிவர மாட்டோ மென்றால்
பின்னைக் கட்டியும் வெட்டியுங் கைப்பிடியாய்க் கொண்டு வாரோம்
கொண்டு வாரோ மதையானையோ ரன்பது மல்லால்
நல்லகுதிரை மூவாயிரங் காலாளு மென்னுடன் கூட்டும்
மீண்டினா ரென்றால் குதிரைகள் முப்பதுஞ் சேர்த்தே
அந்த வேந்தரையுங் கைப்பிடியா யிங்கேகொண்டு வாரோம்
என்றான் குலசேகரப் பெருமா ளதுகேட்டு
வாடா ராசகுலதேவ னுன்னோ டிணங்கியும் வாரான்
நின்று நகைத்திட வெட்டித் துரத்தவும் போறான்
இதுநிச்செய மொங்களுக் கொத்ததைச் செய்யுங்கோளென்றார்
உங்களுக் கொத்ததென்றார் குலசேகரப் பெருமாள்
அதை யுற்பனமாய்க் கேட்டு[90] ராசகுலதேவனும் வீரபாண்டியனும்
தங்களுக் கேத்திடு மந்திரிமாரையுங் கூட்டி
போனவர் தம்மைப் பிடிக்கப் படைகொண்டு போகலுற்றாரே

வேறு

### பிடிக்கப் படை புறப்படுதல்

போகலுற்றார் ஒருமித்துப் பிறப்பிட்டார்
பொன்னும் பாண்டியும் நாட்டுக்கு வாச்சானும்
மேக மொத்தவன் செங்கோட்டைப் புலியும்
வெட்டும் வன்னிய னிரட்டைக் குடையானும்
ரெட்டைக் குடையானுந் தாவிக்கு வேலியும்
வெத்திப்போர் செய்யுங் கொத்தக் கோழி மாரும்
முரட்டு வன்னிய னாண்டு கொண்டானும்போர்
மீண்டுங் குண்டையங் கோட்டு மறவரும்[91]

மறவருக் கிரங்கோட்டையி லுள்ளோரும்
வலையருங் குலசேகர தேவனும்
குறவரு மந்த சேத்தூர்த் திருவனும்
குதிரை மேல்வரு மந்திரி மார்களும்
மந்திரி வில்லவ ராயன் காளிங்கன்
மத்தன் செய்துங்கன் சீவல கண்டியன்
தந்திரஞ் சொன்ன ராசகுல தேவன்
தானுந் தளகத்தன் வீர பாண்டியனுந்தான்
பாண்டியன் குதிரைப்படை முன்னூறும்
பாயு மதகரி ஒன்பது முன்செல்ல

## இசைக்கருவிகள் முழங்கச் செல்லல்

கூண்டத்[92] தம்பட்டம் யானைமேல் கூச்சத்தம்
குதிரைமேவி டம்மான[93] மிடிக்குடன்
டமிக்கி[94] மேள[95] மிராச கிடிபிடி[96]
திண்டிமம்[97] படகந்[98] துடி[99] மல்லாரி[100]
சுமக்கும் பேரி[101] தடாரி[102] முரசுடன்[103]
தூரங் கேக்குந் தவில்சின்னம்[104] வீரணம்[105]
சின்ன வீராண மல்லாரி தொண்டகம்[106]
திமிரி[107] பம்பை[108] கனக சுவடென
வண்ணமேகத் திடியேறெனக் கொட்டும்
வாச்சியம் பதினெட்டும் முழங்கவே
முழங்கும் பூரிகை நாகசுரஞ் சங்கு
முடுகு சின்னம் நவுரி கொம்பெக்காளம்[109]
உளம்புங் கார்கட லார்த்தெழுந்தாப் போலே
ஊதும் வாச்சிய மொக்க முழங்கவே

## ஏந்திச்சென்ற ஆயுதங்கள்

ஒக்க வாக்கிய வில்லுங் குழலுங்கை
உண்டையும்[110] வெடியும் படை வாணமும்
சக்கரமுங் கைவாளும் பரிசையும்[111]
தண்டும் வேலுங் கைக்குந்தமு[112] மீட்டியும்
ஈட்டியும் வில்லும் பூட்டு கட்டாரியும்[113]
ஏந்தும் வல்லய காரரு[114] முன்செல்ல

## படை கடந்த இடங்கள்

ஆட்டுத் திட்டை வழியுங் கடந்தப்பால்
ஆடியோடிக் களங்காடு தான்விட்டு
( கரிசக் ) குளமதில் கோட்டையுந் தான்விட்டு

கடையமுங் கடந்தப்பால் பிறப்பட்டார்
வாடையைப்போல் பறந்த பெரும்படை
வஞ்சியூரு மாத்தூருந் தான்விட்டு
தானஞ்சேர் செம்பொனேரி கலிங்கனும்
தாழ்வில்லா யீச்சங்காடு கடந்துபோய்
வேனல் சூழுங் கரிசலுந் தான்விட்டு
வில்குறிச்சியும் விட்டுப் பிறப்பட்டார்
அப்புறத்து யாரலுங் கிணறும்விட்டு
ஆய்ந்த சங்கரனார் கோவிலும் விட்டு
செப்பும் வீர சிகாமணிக் கோட்டையில்
சென்றி ருந்தனர் பாளைய மாகவே.[115]

### விருத்தம்

சென்றிருந்த மன்னவர்கள் சேரத்துலுக்கன் குறிச்சியிலே
என்றிருந்த மந்திரியு மியல்வீர பாண்டியனும்
வென்றிருந்த படையோடு வீரசிகாமணி தனில்போய்
( பன்றி ) வலை யிட்டாப்போல் பாளையஞ்செய்
திருந்தாரே[116]

### நடை
### வேறு

### தம்பி சீவலவரின் வீர வேண்டுகோள்

பாளையமாய் வீரசிகா மணிதனில் வந்திருந்தார்
பார மந்திரியுடனே வீர பாண்டியனும்
தூசி ( யா ) கத் தூதனோடித் துலுக்கன் குறிச்சியில்போய்

தும்பிபோல் பறந்துசொல்லத் தம்பிசீவலர் கேட்டு
தம்பி சீவலர் கேட்டுக் கெம்பீரத் துடனெழுந்து
தமையனுடன் சொல்லுவார் சமையஞ் சமையமென
வம்பனந்த மந்திரியும் வீர பாண்டியனுமாய்
வலியச் சருவிவந்தார் புலியைத்துடந்த மான்போல்
புலியைத் துயிலெழுப்பிப் பூசலிட வந்தவரைப்
பூட்டுமென்கை வாளுக்கிரை பூட்டிவெட்ட வாச்சுதென்று
கலையும்[117] புலியும்போலே வலியத்துடந்தார்[118] தம்மை
காடத்தனையுஞ் சுத்தி யோடத்துரத்தி வெட்டி
வெட்டியவர் கொண்டுவந்த கரியும்பரியும் கொண்டு
மீண்டுவருவே னனுப்பும் வேண்டும்பணிவிடை யென்றான்

### அழகனும், தம்பியரும் சாய்மலை செல்லல்

கேட்டழகன் தம்பிசொன்ன திட்டமெல்லாங் கேட்டிருந்து

கைப்பிடித்துக் கிட்டவைத்து மெய்[119]தடவிச் சொல்லலுத்தார்
உத்தெதிர்த்த மந்திரியுங் கொத்தவீர பாண்டியனும்
ஒட்டிப்பொரும் வேளையி லெதிரிட்டுப்பொரக் கோட்டையில்லை
மத்துமோ ருதவியில்லை சேவுகர் நூற்றன்பதுபேர்
வந்துபரி முப்பதுதான். தந்திரமாய் வெல்லவேணும்
தந்திரத்தி னாலெதிர்த்த மந்திரிதனைத் துரத்தி
சளப்படுத்த[120] வேணுமினி பிறப்படுங்கோ வென்று சொல்ல
முந்துதம்பி சீவலவர்தாமுஞ் சின்னத்தம்பி தானும்
மூத்தஅழகன் பெருமாள் பாத்தருளிச் செய்தபடி
படிவாங்கி[121] யுண்டிருக்கும் பாலூர்க்கணியானுஞ்[122] சொல்ல
பரிவான தேவிமாரும் பரிகலமு[123] மொதிக்கி
வடிவழக னுடன்தம்பி சீவலவர் சொல்ல
மன்னவர்முன் சாய்மலையில் வந்தா ரழகனும்
மலையாமல் சாய்மலையில் குடியான பேர்கூடி
வரிசைதவ றாதபடி அரிசிஉலுப்பை கட்டி
கலையாலுயர் கந்தமிழழகன் பெருமாள் தன்னையும்
கண்டுதெண்ட னிட்டுநிற்க நன்றென மகிழ்ந்துசொல்வார்

வேறு

சொல்லுங் காரியங்க ளுண்டும் நாளைவாரும் பேசிக்கொள்ள
சுகமே யிருங்கோவென்று முகம்பார்த் துரைத்தனுப்ப
நல்லதென் றவரும்போனா ரழகனுந் தம்பிமாரும்
இராமரும் தம்பியும்போல் சாய்மலையில் வீத்திருந்தார்

வேறு

இராசகுல தேவனின் கூற்று

சாய்மலையில் வாங்கிப் போனா ரழகன் பெருமாளும்
தம்பிமாரு மென்றோ ரோட்டன்[124] வந்துசொல்லக் கேட்டு
சோமகுல தீரன் வீரபாண்டியனை நோக்கி
துன்மந்திரி ராசகுல தேவனுரை செய்வான்
தேவர்தொழுங் குற்றாலர் திருவுளமுண் டுமக்கு
சிக்கிக் கொண்டார் நாளை யொருமிக்கப்படப்[125] போறார்
வாவுபரி[126] முப்பது சேவுகர்நூத் தன்பதுபெயர்
வந்துநம்மோ டெதிர்த்திடிலென் வல்லமையைப் பாரும்
வல்லத்தானோ[127] நமக்குச் சாய்மலையில் கோட்டை

மட்டித்தாரை[128] நாழிகையில் தட்டித் தகர்த்திடலாம்
மெல்லப் போகலாமினி விசாரமில்லை[129] யென்றான்
வீரபாண்டியனுங் கேட்டுக் காரியமென் றிருந்தான்

### வேவு பார்க்க ஆளனுப்புதல்

இருந்தார்கள் வீர சிகாமணியி லிவரிருக்க
ஏத்தமுள்ள சாய்மலையில் வீத்திருந்த மன்னர்
தரித்த தரிவாகவந்த வடிவழகன் பெருமாள்
தம்பி சீவலதேவர் தன்முகத்தைப் பாத்து
பாத்திருப்ப தேதுதம்பி வீர சிகாமணியில்
படையிருக்க நாமிருப்பத் தடவில்லைகா ணினிமேல்
வார்த்தைகற்ற சேவுகரி லொருத்தனைத் தூதனுப்பி
வகைதுகையாய் உளவறிந்து வரச்சொல்லு மென்றுரைத்தார்
உரைத்தமொழி நல்லதென்று தம்பி சீவலதேவன்
ஓவியம்போ லருகுநின்ற சேவுகனை நோக்கி
பருத்தபெரும் படையிருப்பி லுருமாறிப் புகுந்து
பாரி படுக்களமு மந்தச் சேவகர் கண்முழிப்பும்
சேவுகர் கண்முழிப்பு முள்காவலுங் கண்டறிந்து
சீக்கிரத்தி லாளனு (ப்பு) ராத்திரிக்கு வருவோம்
தீபரமாய் நாங்கள்வந்து கதவுதன்னைத் திறந்தால்
திறந்துவிடு[130] கதவையென்றான் நல்லதென்று பணிந்தான்
நல்லதென்று பணிந்துநின்ற சேவுகனை நோக்கி
நரிக்கொம்புண்டு மென்கையிலே திருக்கைச்சிறப் பணிந்தான்
செல்லெனவே விடைகொடுத்தார் வீரசிகா மணிக்கே
சேவுகனும் போகவொரு கோலமெடுத் தானே

வேறு

### ஒற்றன் பூண்ட மாறுவேடம்

எடுத்தா னொருகோலம் - மேனி
எங்கும் பறங்கிப்புண் பத்தினாப்போல்
கடுத்தான் முகமுஞ் - சற்றே
கைகா லெங்குந் துணிசுத்தினான்
சுத்துங் கரித்துணியும் - ஒரு
துண்டம் பழந்துணிப் போர்வையுமாய்
பத்தும்[131] புண்ணு னொந்தழுவான் - கையில்
பாத்திரம் போலொரு சட்டி கொண்டான்
சட்டிதனை யெடுத்தான் - கையில்
தடிக்கம்பு மூன்றிக் கொண்டே நடந்தான்

கிட்ட நின்றார் நகைக்க - காலைக்
கிந்திக் கிந்தி[132] மெள்ளவே நடந்தான்
தெருநாலுஞ் சுத்தியந்தச் சாய்மலையூர்
நெடுங்கோட்டை வாசல் வந்தான் - சற்றே
நின்றா னிருந்தா னெழுந்திருந்தான்
இருந்தான் கருங்காகம் - வலம்[133]
ஏகக் கண்டான் கள்ளன் போகலுற்றான்

## ஒற்றன் கடந்த இடங்கள்

பரந்த உடைங்காடும் - கல்
பரும்புங் கடந்தா னொதுங்காமல்
ஒதுங்காமல் நீலியனூர் - அந்த
ஊர்விட்டு சிங்கக் கரந்தைவிட்டு
கரங்கூரு சிங்கத்தைப் போல் - ஈச்சங்
காளிங்க னோடை தனைக்கடந்தான்
தானந் தருஞ்சிவனார் - எங்கள்
சங்கரனார் கோவிலுங் கடந்தான்
போனான் கருவை நல்லூர் - விட்டுப்
பூனைபோல் வீர சிகாமணிக்குள்
மணியானை நின்றுலவும் - கோட்டை
வாசலுக்குள் சென்றிருந்து கொண்டான்

## ஒற்றனின் நடிப்பு

பணிவா னெவர் வரினும் - புண்ணைப்
பாருமென்பான் கிட்ட வாருமென்பான்
வாரீ ரொரு சிறங்கை[134] - கஞ்சி
வார்த்தால் பிழைப்பேனெனக் கெஞ்சுவான்
கூரும் புண்ணொந் தழுவான் - முகங்
கோடிக்[135] கொள்வான் புண்ணை மூடிக்கொள்வான்
மூடி முழிக்குமுன்னே - வந்து
முன்னின்றவரைப் பாத்துங்களைப்போல்
வேடிக்கையாய்த் திரிந்தேன் - நானும்
வேசைகிட்டக் கெட்டு வீறழிந்தேன்[136]
அழிந்தேன் பரங்கிப் புண்ணால்[137] - வேளைக்கு
ஆசை கொண்டோர்க்கு உண்டோ ரோச மென்பான்
செழுந்தேன் மொழியாற்கு - நானுந்
தேடியிடும் பிள்ளைபோல் திரிந்தேன்
திரிந்தேன் முடிச்சவிழ்த்தும் - பொன்
திருடியுங் கன்னமிட்டுங் கொடுத்தேன்
பிரிந்தா லுயிர் தரியேன் - காமப்

பேய்கொண்டு கேட்டதெல்லாங் கொடுத்தேன்
கொடுத்தேன் பணத்தை யெல்லாம் - வாங்கிக்
கொண்டாள் பரங்கியைத் தந்துவிட்டாள்
ஒடுவாய்[138] பரங்கிப் புண்ணும் என்
உடலையுங் கண்டுபின் தள்ளிவிட்டாள்
விட்டா ளொரு சட்டியும் - கையில்
வேப்பங் குழையையுந் தந்தாளென்பான்
நெட்டூரி[139] தாய்க்கிழவி - என்னை
நித்தங் குரங்காட்டங் கொண்டா ளென்பான்
கொண்ட பயலானேன்[140] - அவள்
கொட்டின கொட்டுக்கெல்லா[141] மாடுவேன்
சண்டையிடத் துணிவாள் - பிறந்
தள்ளுவள் தள்ளிக் கதவடைப்பாள்
அடைக்கோழி போல்சுத்துவேன் - அவள்
ஆயிரம் வைதாலும் நான் போகேன்
நடைக்கே[142] யிருந்து கொள்வேன் - சேரி
நாய்போல் திரிந்துநான் பேயானேன்
பேயானே னவளாலே - கொண்ட
பெண்டாட்டி தன்னையுந் தள்ளிவிட்டேன்
மாய மருந்துமவள் - மஞ்சள்
வாடையு மென்னை மசக்குதென்பான்[143]
என்பா னெவர் வரினும் - இதுக்கு
ஏதுசெய்வே னண்ணே சொல்லுமென்பான்
அன்பான மோகனப் பெண் - எனக்கு
அட்டமத்துச் சனியானா ளென்பான்
ஆனாலுந் தேவடியார் - சந்தம்[144]
ஆகா தொருக்காலு மாகா தென்பான்
தானே புலம்பிக் கொள்வான் - சற்றே
தள்ளாடி மெள்ள எழுந்திருப்பான்
எழுந்து தடியூன்றி
இடக்கையினில் சட்டி தனையெடுத்தான்
தடுமாறி யுள்புகுந்து
தந்தப் பரிவேழந் தனைப்பார்த்து
இருக்கும் படைவீரர் - தொழில்
உற்பன மாகவே பாத்து நிற்பான்
செருக்கும் படையிருப்பை - சுத்திச்
செல்வா னெல்லோரையும் பாத்துநிற்பான்
நிற்பா னிவன்களவை - சுத்தில்
நின்றா ரொருத்தருங் கண்டறியார்
மற்போர் செய்வார் குதிப்பார் - சிலர்
மல்லுக்[145] கெமக்கெதி ரில்லை யென்பார்
இல்லாத சூதாடுவார் - தங்கள்
ஈட்டியும் பட்டையமுங் குழலும்

வல்லைய முங்கிடக்க - தங்கள்
வங்கணக் காரரு[146] மாய்ப்போவார்
போவார் விறகெடுப்பார் - கூடிப்
பொங்கியுண்பார் சிலர் புல்லறுப்பார்
தீபாவளி வந்தது போல் - எண்ணை
தேய்த்துக் கொள்வார் வெந்நீர் வார்த்துக் கொள்வார்
கொள்வா ரரிசி கறி - சிலர்
கூடி நிற்பார் கவி பாடி நிற்பார்
வாள் ( வார் ) முற்றடிப்பார் - டம்
மான மடிப்பார் தவிலடிப்பார்
அடிப் பாய்ந்திடுங் குதிரை - குளுப்
பாட்டிடுவார் தண்ணீர் காட்டிடுவார்
இடிபோல் முழங்கி நிற்கும் - மதை
யானையை விட்டுத் தண்ணீர் காட்டிடுவார்
நீராடுவார் குளிப்பார் - கூடி
நின்று கிளியாந்தட்டு[147] மறிப்பார்
உள்ளேறியே திரிவார் - வில்
உண்டை தெறிப்பார் நிதான மென்பார்
தானா வெனப்படிப்பார் - பெண்கள்
தம்மோ டிருந்து விளையாடுவார்
மேனாள் விதியறியார் - மத
வேழம்போல் நிற்பா ராள்வீரர்
ஆள்வீரரைப் பார்ப்பான்
முன்நிற்கா னிதுசீவல தேவர்க் கென்பான்
வாழ்வீர பாண்டியரோ - அந்த
மந்திரி ராசகுல தேவனோ
குலசேகரர் தாமோ - படை
கொண்டு வந்தாருண்டோ சண்டையென்பான்
சிலைவீர னாணழகன் - தம்பி
சீவல தேவரெங்கே சொல்லுமென்பான்
சொல்லும் படைவீரர் - இவன்
சூட்சி[148] யறியாமல் சீச்சீ யென்பான்
மெல்லமெல்ல நடப்பான் - படை
வீடெல்லாஞ் சுத்திப்போய்ப் பாத்து நிற்பான்
பார்ப்பான் குதிரையெல்லாம் - யானைப்
பாகரைப் பாத்துத் தலையசைப்பான்
பேர்போன சேவுகரே - நாளைப்
பேயும் நரியும் பிடுங்கு மென்பான்
நரிபோலே ஊளிடுவீர் - அண்ணே
நாளைக் கிருப்பீரோ நீங்களென்பான்
தெரியுந் தெரியு மென்பான் - தம்பி
சீவல தேவர்க்கு வாய்த்து தென்பான்
வாய்ப்பாக வந்து நன்றாய் - வெட்டு

வாய்த்து தென்றேதன் மனதெண்ணுவான்
ஆய்ப்பாடிப் பூனையைப் போல் - அண்டி
அங்கங்கே நிற்பா னழுது கொள்வான்
அழுவான் ஒருமடி சோறெனக்கு
ஆர்தரு வாரெனக் கெஞ்சி நிற்பான்
தொழுவான் படை யிருப்பை - சுத்திச்
சோதித் துளவெல்லாங் கண்டுகொண்டான்
கண்டா னிரா முழிப்பு - உள்
காவலு மில்லையென்றே யறிந்து
கொண்டா னிராசீயமாய் - சொல்லிக்
கூட்டி வாவென்றொரு ஆளைவிட்டான்

## உள்ளாள் சொன்ன செய்தி

விட்ட உள்ளாள் ஓடி - அதி
வேகமாய்ச் சாய்மமலை யூர்புகுந்து
சிட்டர்[149] பரிபாலன் - தம்பி
சீவல தேவர்க்கு விண்ணப்பஞ் செய்வான்
செய்வாளை மீன்குதிக்கும் - கொற்கைத்
தென்னவன் வீர சிகாமணிக்குள்
இவ்வேளை போய்ப் புகுந்தால் - மதையானையோர்
ஒன்பதும் வான்பரி முந்நூறும்
முன்னேகைக் கொண்டிடலாம் - படை
முத்துங்[150] களப்பெலி யிட்டிடலாம்
சொன்னே னெனப் பணிந்தான் - அந்தத்
தூத னுரைத்த படிதுணிந்தான்

விருத்தம்

## அழகன்பெருமாள் போருக்கெழ எண்ணுதல்

துணிவுடைய மன்னவர்க்குத் தூதுவர்கள் தாமேக
மணியெனமுன் சொல்லுமந்த வள்ளுவர்சொல் பழுதாமோ
பணிவுடனே மந்திரிதன் படைஉளவா ராய்ந்துசொல்லத்
திணிதடந்தோள் சீவலவர் சென்றுபொரத் துணிந்தாரே

நடை
வேறு

## சீவலவர் கூற்றும் அழகன் ஏற்பும்

துணிந்துதம்பி சீவலவ ரெழுந்துமன மகிழ்ந்து
துணைவ னழகன் பெருமா ளிணையடியை வணங்கி

பணிந்து சொல்வார்வீர சிகாமணிக் கோட்டை புகுந்து
பத்தலரைத்[151] துரத்திவெட்டிக் கொத்தமத[152] களிறும்
கொத்தமத களிறுமவர் கொண்டுவந்த பரியும்
கொண்டுவருவே னாளைக் கண்டருளு மென்ன
உத்ததிருத் தம்பிசொல்ல அழகன்பெரு மாளும்
உன்னைவிட்டு நாமிருப்ப தென்னபடி யென்றார்
என்னபடி யென்றுதிரு வுளத்திலெண்ண வேண்டாம்
இருபேரும் போனா லிருந்தபரிவார மலைக்கும்
சின்னத்தம்பியும் நமது பரிவாரத் தாரும்
தேவியரைத் தனியிருத்திப் போவதட வல்லவே
அடலரசர் பெருமாளிங் கெழுந்தருளி யிருந்தால்
அடியேன்போய்ச் செயங்கொண்டு விடியுமுன்னே வருவேன்
படைமுகத்தி லெனக்கவசம்[153] வந்தாலும் ஓமக்கு
பன்னுதமிழ் மாறன் முன்னுதவி யுண்டு
உதவிசெய்வார் குற்றாலர் நமக்கவசம் வரவொட்டார்
ஒன்றுக்குஞ் சலியாம லிருந்தருளு மென்றான்
குதிரைபத்துச் சேவுகர் முப்பதுபேரு மிருத்தி
கும்பிட்டுக்கொண் டண்ணரையு முன்பிட்டுக் கொண்டிறஞ்சி
இறைஞ்சிநின்ற தம்பிதன்னைத் திருமார்போ டணைத்து
இருகையாரத் தழுவிப் பிரிசமுட[154] னனுப்ப

### சீவலவர் போருக்குப் புறப்படுதல்

நிறைந்தபுக ழழகன்தம்பி சின்னப்பெருமாள் தானும்
நேசமுட னாசார வாசல்வழி போர்ந்தார்
போர்ந்துநின்று பாவூருக் கணியானை நோக்கி
பூப்பரிசங்[155] கேட்பளவில் நாள்பார்த்துச் சொல்லுவான்
வேந்தர் பெருமாளேயொரு விண்ணப்பங் கேளும்
வெத்திதரு மிராகுதைய மத்திசையி லிருந்தான்
இருந்தபலன் காச்சிமணம் போரில்வெத்தி கொடுக்கும்
எழுந்தருளு மென்னமன மகிழ்ந்துமுடி துலக்கி
திருந்துபொன்னி னுடைதிருத்திப் பட்டுக்கச்சை கட்டி
திருவரையி[156] லழகுபெறச் சுரிகையுஞ்[157] சேர்த்திறுக்கி
சேருமலர்த் தாளிணைக்கு வீரக்கழ லணிந்து
செங்கைவிர லாழியிட்டு முன்கைவளை பூட்டி
ஆருமுந்த னழகுகண்டு கண்ணேறு வருமென்று
அச்சுடைய மணிமார்பில் வச்சிரச்சோ டணிந்து
அணிந்துநின்றார் தனைப்பாத்துச் சீக்கிரத்தி லோடி
ஆடல்பரி கொண்டுவாருந் திடத்துடனே யென்றான்
துணிந்துகடும் புரவிதனக் கிணங்குகுசை[158] இறுக்கி
துய்யநெற்றி மயிர்முடித்துக் கொய்யுளையுஞ்[159] சேர்த்து

திருந்துமயில் சேணம்வைத்துக்[160] கல்லணையுஞ்[161] சேர்த்து
செக்கர்மணிச் சோடுகட்டிப்[162] பலகறையுஞ்[163] சேர்த்து
பிரிந்திடுங்கால் வீரதண்டை சதங்கைமணி யுடனே
பலசவடி மணியிலங்கு முகப்பட்டு மணிந்து
முகமிட்ட சிங்காடி[164] யுடனம்பும் பொதிந்து
முட்டாத குதிரையின்மேல் பட்டையஞ் சேர்த்திறுக்கி
செகமெய்க்கத் தூதுவர்கள் கொண்டுவந்த பரிமேல்
சிந்தை மகிழ்ந்தேதம்பி சீவலவ ரேற
ஏறிப் புறங்காட்டாப்புலி தன்னுடனே நின்ற
ஏத்தமுள்ள சேவுகர் நூத்திருபது பேருடனே
கூறுங் குச்சலர் துளுவரொட்டியர் மருடர்
குதிரைமேல் ராவுத்தமா ரிருபதுபேர் வரவே
வரும்நாளில் விசையன்கையி விடியேறு போலே
வாச்சியத்தைச் சிலபேர்கள் தோள்சுமந்து வரவே
திருமேவு மணிமார்பன் தம்பி சீவலதேவர்
சென்றாடும் பரிநடத்தக் கண்டாரு மகிழ
கண்டிருக்க முடியாது வீர சிகாமணிக்குள்
கரு ( சல்கார )ன் படும்பாடென அயலொதுங்... போல்
விண்டல.... லெழுந்தபரி தேரோடு மொதுங்க
வெய்யவனும் மத்தவனும்; வெற்பினிடை செல்ல
செல்லும்படை பெருகிவரச் செந்தூள் பரந்ததுபோல்
செக்கர்வான் மஞ்சள்வெயி லொக்க வொளிவீச
வெல்லும் படையுடனே தம்பி சீவலவர் தாமும்
வீரசிகாமணிக் கோட்டை நோக்கி நடந்த

## படை கோட்டையுள் புகுதல்

நடந்தார்கள் சாய்மலையில் குடியான பேர்களும்
நாங்களும் வாரோமெனவே வான்பரிக்கு முன்னே
துடந்தவரை முகம்நோக்கித் தம்பி சீவல தேவர்
சொல்லுவார் நில்லும்நில்லு மன்னருக்குத் துணையாய்
துணையாக யிரும்பொழுது விடியுமுன்னே வருவேன்
தூசிப்படை[165] கைகலந்து மோசம்வந்து தென்றால்
பணையாம[166] லண்ணரையுந் தேவிமார் தனையும்
பதிக்கிவெட்டு[167] மாறனிடத் தொதிக்கிவிடு மென்றான்
ஒதிக்கிமுந்தி வாய்புதைத்து நின்றவரை நோக்கி
ஓட்டன்வழி காட்டச்சென்றார் காட்டுவழி யாக
கதித்தபெரும்[168] படையோடு மூரையணு காமல்
காட்டுவழி யாய்நடந்தார் வேட்டைப்புலி போல
புலிபோலே வரும்படையுந் தம்பிசீவல தேவர்
பொழுதுபுகுந் தஞ்சாறு நாழிகை சென்றளவில்
நலியாமல் வந்திப்புளி மூட்டினில் வந்தொதுங்கி
நற்புடைய சேவுகரைக் குப்பஞ்செய்து[169] நின்றான்
குப்பமிட்டு நின்றவர்கள் கச்சைகளுங் கட்டி

கூர்த்தமுளை வாங்குமதில் சேர்த்திருக்கிக் கொண்டு
துப்பாக்கிக் குழலெடுப்பார் கையில் திரிபிடிப்பார்
தூரநின் றதட்டிக்குத்தும் நேரிசங்[170] கையெடுப்பார்
எடுப்பார் கைவில்லு மம்புஞ் சக்கரமு... லும்
ஈட்டியுங் கைக்குந்தமுமுன் னீட்டிய கை ( வா ) ளும்
அடுக்காக நின்ற பிறங்காட்டாப் புலியுடனே
ஆயுதப் பட்டார் குதிரை ராவுத்தமார் சேர
உடனே யெழுந்திருந்தார் தம்பி சீவலவர் திறமும்
உற்றவந்திப் புளிமுட்டை விட்டுப் பிறப்பிட்டார்
திடமாகவே யெழுந்து வடகிழக்காய் நடந்து
சென்ற படைதனை நிறுத்தி நின்றுகொண்டு சொல்லுவார்
சொல்லுமந்த வீர சிகாமணிக்கோட்டை
யெங்கேயென் ( ன ) த்
தூ....மில்லை ஒருகோழிப் பறவையிது வென்ன
நல்லதென முடிதுலக்கிச் சேவுகரை நோக்கி
நாங்கோட்டை புகுந்துவெட்டி லாளறிய வேணும்
ஆளறிய வேணுமினி கோடாலி யெனும்பெயர்
அல்லாருங் கூறுமென நல்லபெயர் கூறி
மேளகாரரை நோக்கிக் கோட்டைபுகு மளவில்
மேகத்திடிபோல் முழங்கும் வாச்சியமென் றுரைத்தான்
உரைத்தவாய் மூடுமுன்னே கோட்டைவாச லடுத்தார்
அந்த... ரெல்லா முண்டுறங்கும் வேளையிது வென்ன
நிரைத்தமணிக் கதவுதன்னைத் தெறித்திடிலு... பாய
நித்திரை ...த்திருந்த கள்ளனத் தாமா யெழுந்து
எழுந்து மெள்ளக் கதவுதன்னைத்... திறந்துவிடிலும்
இடிஇடித்தாப் போல்முழங்கும் வாச்சியத்தி னுடனே
கொழுந்துவிட்டு நடந்தபடை குலிவியிட்டு[171] முழக்கி
குத்து குத்தெனவே கோட்டைபுகுந் தாரே.

வேறு

## போர்க் காட்சிகள்

கோட்டைக்குள் புகுந்தபடை நாட்டுக்கு வாச்சானை
வெட்டி
கொத்தளத்தில் கிடந்த கொத்திக் கோழியாரைக் குத்தி
வேட்டைப் புலிபோல் புகுந்துஆட்டுக் கிடைபோல் பரந்து

விண்ணைத் தொட்டு நின்றகோட்டை மண்ணைப்பத்தி
யேறுவாரும்
மண்ணைப் பத்தி யேறுவாரைக் கண்ணை ...விழுவாரும்
வட்டப் ( பெட்டி ) மூடியும்போல் வெட்டுப்பட்டு
விழுவாரும்
எண்ணைக்குடம் போலிருந்த பெண்ணைப்போட்
டோடுவாரும்

ஈட்டியுங் கைவேலும் போட்டுக் காட்டில்விழுந்
தோடுவாரும்
விழுந்தபூத் தேவருக்கென் றெழுந்திருப்பாரைக் குத்தி
வெட்டிவிழக் கண்டுபுல்லுக் கட்டுக்கு ளொதுங்குவாரும்
எழுந்து குருதிசோர விழுந்து புரளுவாரும்
எட்டுத்திக்கு மோடியோடி முட்டுத்தட்டு விழுவாரும்
முட்டுத் தகந்திடவிழுந் தெட்டுப்பல்லுப் போச்சென்பாரும்

மூளையுங் குடலுஞ் சிந்தப் பாளையம்போட்
டோடுவாரும்
கிட்டிவெட்டும் வெட்டுத்தப்பிக் குட்டியச்சுவ[172]
( ரொண்டு ) வாரும்
கெம்பீரமாய்த் தான்கிடந்த கம்பிளியைப்போட்
டோடுவாரும்
ஓடித் தப்பு வாரைச்சென்று கூடிக்குத்து வார்கள்சிலர்
உச்சிக் கொண்டோ மென்றுதம்மை மெச்சிக்
கொள்ளு வார்கள்சிலர்
கொடித்திட்ட கூடாரத்திலோடிக் குத்துவார்கள் சிலர்
கொத்தளத்தி லேறுவாரைக் குத்தித் தள்ளுவார்கள் சிலர்
குத்தித் தள்ளுவாரைச் சென்று பத்திக் கொள்ளுவர்கள்
சிலர்
குரங்குகள்போல் கெஞ்சத் தரங்களறுப்பார் சிலர்
தந்திரமா யானைபோலே நித்திரைகொண் டோடுவாரை

தலையை யறுத்துக் கொண்டு குலிலியிடுவார் சிலர்
குலிலி முழக்கங் கேட்டு வலையரொதுங்கி யோட
கொண்டையன் கோட்டை மறவர்[173] தொண்டு
தொண்டே[174] யேறிவிழ
கலையும் புலியும்போலே மலையிற் திரிவா னோட
காலிற் கடுமை கொண்ட தாலிக்கு வேலியோட
வேலியிட்டாப் போல்வளைந்து நாலுதிக்குமே யோடி
விரட்டிச்சில பேர்குத்த ரெட்டைக் குடையா னோட
பால்குளத் தாருமந்த முல்லைப்பெருந் தாளியாரும்
பறக்கச் செங்கோட்டைப்புலி உறக்கப் பிராந்திலோட[175]
உறக்கத்தை விட்டெழுந்து ராசகுல தேவனோட
ஒண்டிஒண்டிக் கள்ளரைப்போ விண்டஞ்செடியிற்[176]
புகுந்தார்
அறுத்துக் களப்பெலியிட் டுறுக்கித் துடந்து குத்தும்
ஆரபாரங் கேட்டெழுந்து வீரபாண்டியனு மோட
பாண்டியன் குதிரையானைப் பல்லக்குக் கூடாரக்குடை
பாரச்செம்பு தம்பிக்கைக் கிடாரத்தொடு கொப்பரைகள்
வேண்டியபேர் கொள்ளைகொள்ள ஆண்டியைப்போ
லோடக்கண்டு
மீண்டுகொண்டான் வன்னியரி லாண்டுகொண்டா
னும்படையும்
ஆண்டுகொண்டா னும்படையு மீண்டுகொண்டது நமக்கு

ஆட்டுக்கிடை யென்றபுறங் காட்டாப்புலி வந்தெதிர்த்தான்
தாண்டும்பரி தன்னைக்குத்தி ஆண்டுகொண்டானைத் துரத்தி
சரங்கொண் டறுத்திடு முக்கிறங் கோட்டையார் படையும்
படைவாணமுங் குழலு மிடையர் கவணுங் கல்லும்
பந்திபந்தி யாய்நெருப்புச் சிந்திவரக் கண்டொதுங்கி
உடையா ருடையபடி கடைகாலும் பாலுமென
உத்தகரியும் பரியும் பத்தினாரென் றோடிப் போனார்
பத்தில்லாத மந்திரியைச் சத்தும்[177] நம்பொண் ணாதெனவே
பாலுஞ்சோறு மென்றுசொல்லிக் காளிங்கன் புலம்பியோட
வெத்திபுனை செய்துங்கனும் வீரபாண்டியனு மோட
மேவலரைக் கண்டொதுங்கிச் சீவலகண்டிய னோட
ஓடுவார்கள் கோட்டையைவிட் டாடுமாடு சாய்வதுபோல்

உண்டை படுருண்டவரைக் கண்டுதட் டழிந்து நிற்பார்
சாடையாகத் தப்பிவிட்டோம் வீரபாண்டியனை யென்பார்
தந்திரத்தி னாலேதப்பி மந்திரி பிழைத்தா னென்பார்
மந்திரியைக் கண்டுகொண்டால் சந்துசந்தாய்ப் பிளப்பே னென்பான்
மறக்குலச் சேவகரை யிறக்கக் குடுத்தா னென்பான்
சந்தைக் கூட்டங் கண்டாவின்னம் வந்துகூடப் போறா ரென்று
தனித்தனி யெல்லாரும் வனத்திடை ஓடிப் போனார்

விருத்தம்

ஓடிப்போனாரைக் கூட்டிவருவே னென்றுரைத்துச் சேனை
கூடிப்போய் வீர சிகாமணிக் குள்ளே
தேடித்தான் அழகன்தம்பி சீவல தேவர்வெட்ட
ஆடிக்காத் தெழுந்தபூனை யாமென ஓடிப்போனார்

வேறு

வெற்றிபெற்ற படையின் செயல்கள்

ஓடிப்போனா ரென்றுகூடிக் கூடித்தேடிப் பார்த்தார்
மதமீறுங் கடற் களித்தானைக ளன்பதுஞ் சேர்த்தார்
தேடாம லோடிப் பிடித்தார் குதிரை முன்னூறும்
எங்குந் தேடியுங் கண்டாரில்லை யந்தவீர பாண்டியனை
இயலும் படிவந்து கைக்குள் ளகப்பட்டுக் கொண்டான்
இன்றைக்கெப்படித் தப்பினானோ அந்தவீர பாண்டியனும்
அயலும்புயலு மறியாம லோடிப் போவானோ
பின்னை யங்கெங்குங் கூடார மெங்கெங்குந் தேடியுங் காணார்

வில்லுங் கட்டாரியும் பட்டையமுங் குழலுங் கிரிசும்
கோணாத குந்தமு மீட்டியும் பூட்டுப் பத்திரமும்
ஒக்கக் கூட்டி யெடுப்பார் சுமப்பார் மலைபோல் குமிப்பார்
மலையாமல் கொத்தக் குடையும்[178] மகரக் கொடியும்
கொற்கை மன்னவன் பல்லக்கும் பொன்னின் காளாஞ்சியும்[179] பூணும்
அலையாரமுங் கருவேலமுஞ்[180] சாளிகைப் பொன்னும்[181]
அண்ணர்க்கா மெனவேதம்பி சீவலதேவர் முன்வைப்பாம்
பார மன்னவன் வீரபாண்டியன் பொன்னுடை வாள்
கைப்பரிசையு மீதென்று சீவலதேவர் முன்வைப்பார்
போர்தனில் வென்ற ரெகுராமன் போலே மகிழ்ந்தார்
ஒக்கப் பிறப்பட்டா ரானைமேலி டம்மான முழங்கிடத்தானே

வேறு

## வெற்றிப்படை தம்மிருப்பிடம் மீளுதல்

ஆனை மேலி டம்மானம் வானிடியேறு போலே முழங்கவே
அதிரு மத்தளமுரசு கொக்கரிதிமிரி பம்பை முழங்கவே
கான வீணை மல்லாரி பேரி தடாரி பேரிகை சங்கநீள்
கனக தப்பொடு நவுர[182]சல்லரி[183] துடிமுரடொலி பம்பையே
சீனரோடு கர்நாட ரீழர்கள் மருடர் கேகையர் அந்தியர்
நிறமிகுத்திடு மறவ ரொட்டியர் இருபிறத்தி நெருங்கவே
விருதெனக் கய லெழுதிடைக்கிய மொடுகொடித்திரள் சூழவே

வீரமேவிய சீவலர் மனுவாசி மீதினி லேறியே
சூழும் வாசி முன்னூறுடன் மதமீறு யானையோ ரன்பதும்
தொடுகடப்படை யொடுசெலக்குடை மடலடைக்கய மாடவே
வீளி வாய்மட மாதர்சாய்மரை வீசி யாருடி வணங்கவே
விசைய லட்சிமி நடமிடத்திரு மகள்களித்தெதிர் காணவே
வாளி கூர்முகில் தம்பிசீவல தேவர்சாய்மலை நாடியே
வரநினைந்திடு மளவினில்கரு மறவரொத்திர ளோடவே

ஏழு பாய்பரி ஆடுசூரிய னீதுகாணவும் வந்தனன்
இளவெயிற்கதிர் கொளவுதித்தனன் எனஒருத்தன்முன் னோடினான்
ஓடினான் ஒருதூதன் மனமகிழ்ந்தோடிச் சாய்மலை நாடியே
உளமகிழ்ச்சி முன்வரவரத் தொழுதழகனுக் கிவை யோதினான்

சூடினார் முதல்வாகை மாலிகைதம்பி சீவல தேவர்தான்
தொடு கடப்படை யுடனெதிர்த்தவ ரடுகளத்திடை வீடினார்[184]
வீடினா ரவரோடினார் சிலர் வீரபாண்டிய னோடவே
மிகவும் வெத்தியு ளிளவலுக்கென மிசைகுதித்துரை யாடினான்
ஆடினான் ஒருதூதன் மனமகிழ்ந்தோடிச் சாய்மலை நாடியே
அழக னப்பொழு துளமகிழ்ச்சியோ டிளவலுக் கெதிர்போதுவான்
போது வேளையில் வாசி மேல்வரு தம்பி சீவல தேவரும்
புரவி விட்டெதிர் தமைய னைத்தொழத் திருநிலத்தி லிறங்கினான்
காதல் கூர்தற வோடியே யிருதாளிலே விழுந் தம்பியை
கதிர்மணிப்புய முறவணைத்தழ கனுமகிழ்ச்சியை யேவினான்
தாது சேர்புய மாலை யானுயர் தம்பிசீவல தேவரும்
தமைய னைச்சிவி கையிலிருத்தி முன்வரு கடப்படை சூழவே
நீதி யானுயர் சாய்மலைப்பதி மேவி னாரிரு பேர்களும்
நில்லெனத்திகழ் புகழ்தழைத்திட அரமனைக்கு ளிருந்தனர்.

விருத்தம்

இருந்தார்வீர சிகாமணிக்கு ளிருந்த படையைத் துரத்தி வெட்டி
திருந்தார் கொணர்ந்த கரிபரியுஞ் சேரத் திரட்டிச் சீவலவர்
பொருந்தார் வணங்கச் சாய்மலையூர் புகுந்தே சின்னத் தம்பியுடன்
வருந்தா திருந்த அழகனையும் வணங்கி மகிழ்வுத் திருந்தனரே.

வேறு

இராசகுலதேவன் குலசேகரரிடம் கூறியவை

இருந்தார்கள் சாய்மலை யூரி லிவரிருக்க
இராசகுல தேவனுடன் வீர பாண்டியனும்
வெருண்டோடியே வீர சிகாமணியை விட்டு
விடியு மளவுங் காட்டுக்குள்ளே கிடந்தார்
கிடந்தா ரொரா லுங்கு[185] மெறும்புங் கடிக்க
கிழக்கு வெளுக்கு முன்னே தானெழுந்து
அடந்த உடைங்காடும் இண்டஞ் செடியும்
ஆடு கிடந்ததன் வேகத்தைக் கண்டு

கண்டு கண்டேநின்று பக்கத்தி லோடி
கையத் தட்டிநின்று கூப்பிடு வார்போல்
மண்டுஞ் சிறகை யடித்தே கழுது[186]
வளைந்தே செஞ்சாவல் முழக்கொடு கூவ
கூவியது கோழியென் றெல்லோரு மோடி
கூடித் திரண்டு செடிதோறும் தேடி
தாழ்வில்லா மந்திரியும் வீர பாண்டியனும்
சலிப்போடும் வந்தா ரினத்தோடன் கூடி
கூடியே தென்காசி யூரிலே சென்று
குலசேகரப் பெருமாளை வணங்கி
நாடியே மந்திரியும் வீர பாண்டியனும்
நாணித் தலையைக் கவிழ்ந்து நின்றாரே
தலைகவிழ்ந்தே நின்றவர்களை நோக்கி
சளப்பட்டு வந்தவர்கள் போலவே நின்றீர்
நிலைகுலைந்தீ ரென்று குலசேகரர் சொல்ல
நின்று தொழுதே ராசகுல தேவன் சொல்வான்
சொல்வ தடியேன்கள் வீர சிகாமணியிற்
சோமத்துடன்[187] போயிருந்தது கேட்டு
மல்லுவுந் திண்புயத் தழகனுந் தம்பியும்
வாங்கியே சாய்மலை தனிற்சென் றிருந்தார்
சென்றிருந்தா ரென்று நாங்களு மிருந்தோம்
தென்னவனே தம்பி சீவலவ தேவர்
நின்றபெரும் படைதனைக் கூட்டியே மெள்ள
நித்திரை மயக்கத்தில் வந்துபுகுந் தாரே
புகுந்தந்த நாட்டுக்கு வாச்சானை வெட்டி
பிறப்பட்டுக் கொத்தக் கோழியாரைக் குத்தி
மிகுந்தே மறவரை வளைத்தே யறுக்க
வெகுண்டந்தக் கோட்டையை விட்டோடிப் போனோம்
போனார் கரியும் பரியளுங் கொண்டு
போகட்டு மென்று பிறஞ்சாய்ந்து வந்தோம்
என்னென்று கேளு மெதிர்த்துப் பொருதால்
இருபேரு மொருகளத்திடைப் பட்டு விழுவார்
பட்டு விடுவா ரிருபே ருமக்கு
பட்சமுள்ள[188] தம்பிமா ரென்றெண்ணி நின்றேன்
மட்டிலவரைப் போக விட்டுவிடு வேனோ
மன்னவனே யென்று மந்திரி பணிந்தான்

## குலசேகரரின் கடுமொழிகள்

மந்திரிதான் சொன்ன வார்த்தையைக் கேட்டு
மன்னர் குலசேகரப் பெருமா ளுரைப்பார்
சந்திரகுல திலகன் அழகன் பெருமாள்தன்
தம்பி சீவலதேவ னாண்பிள்ளைச் சிங்கம்
சிங்கத்தை மதையானை வெல்லத் துணிந்தால்
செல்லுமோ புல்வாய்[189] புலியை வென்றிடுமோ
எங்கே கிடந்தென்ன ஒருகூடு கூடியும்

எலிப்பகை நாக முயிர்ப்பகை கெடாது
கேடுகால மல்லவோ நாமன்று விலகவும்
கேளாதே போனீர் சளப்பட்டு வந்தீர்
ஒடுங்காத வில்லுக்கு வில்விசையன் கையில்
உத்திரன்[190] பாசுபதங்[191] கொடுத்தாரே
கொடுத்தீர் பரியுங் கரியு மவர்க்கு
கூடினீ ரெல்லோரும் பேடியாய் வந்தீர்
அடுத்துக் கெடுக்கவே நில்லும் நில்லுமென்று

## இராசகுலதேவனின் சமாதான வார்த்தைகளும் புறப்பாடும்

அஞ்சாத ராசகுல தேவனுரை செய்வான்
செய்வது திருந்தச் செய்யென் றறியேனோ
தென்னவனே அவர்கள் மன்னவர்க ளல்லவோ
அல்லாம விளமறி குழையறி யாது
அவரேது செய்தாலும் நாம்பொறுக்க வேணும்
வல்லார்கள் கொடுபோன யானையுங் குதிரையும்
வரும்நாளை யவர்களுங் கூடவரு வார்கள்
கூட்டி வருவேனென் தாட்டிமை பாரும்
கொடியகடும் புலியை வாலுருவி விட்டாப்போல்
தீட்டின மரத்திலே கூர்மை பாத்தவரை
கைவலிமை காட்டினான் கட்டியக் காரன்
கதையாய் முடிந்திடு மெனக்கடவ தல்ல
சென்றழைத் தோடி வருவேனென்று பணிந்தான்
பணிந்தா னரக்கர்குலம் வேரோடு முடித்த
பாதக னிலங்கையில் மகோதரனைப்[192] போலே
துணிந்தா னழைத்தோடி வருவேனென வேதான்
சூட்சிகொண்டு ராத்திரிதன் வீட்டினில் வந்திருந்தான்
பொழுது விடியு முன்னே தானெழுந் திருந்து
போனான் மன்னவ ரிருந்தசாய் மலையை நோக்கி

### விருத்தம்

நோக்கமறிந்து மன்னவரும் நூல்வல்லுரைத்த துடப்பொருளும்
போக்கி வுணர்த்திவிக்கும் பொருமிக் காட்டிடுவார்
ஆக்கமறிந்தே ராசகுலன் ஆணழகன் பகையறிந்து
ஊக்கமுடனே கூட்டிவர வொருமித்தெழுந்தான் சாய்மலைக்கே.

### நடை

## இராசகுலதேவன் அழகன்பெருமாளைச் சந்தித்தல்

சாய்மலையூர் தனைநாடிச் சந்திரகுல மன்னவர்க்கு

ஏமன்விட்ட[193] தூதனைப்போல் இராசகுல தேவன்வந்தான்
வந்தா னழகன் பெருமாள் மன்னன்மணி வாசலிலே
சிந்தை கலங்கினாப் போலச் செய்யமுகம்[194] வாடிநின்றான்
வாடிநின்ற மந்திரியை வாசல் காவலர்கள் கண்டு
ஓடிஅழகன் பெருமா ளுடனேதான் சொல்லலுற்றார்
சொல்லலுற்றேன் ஆண்டவனே நம்மைத் துரத்திவிட்ட மந்திரிதான்
நல்லவன்போல் வந்துநின்றான் நம்முடைய வாசலிலே
பூசலிடவோ துணிந்து பூனையைப்போ லோடிவந்தான்
ஓடிவந்தான் மந்திரிதா னுயிரிழக்கவோ அறியேன்
கூடவந்தா ரொருத்தரில்லை கொத்தவனே யென்றுரைத்தான்
என்றமொழி கேட்டவுட னெழுந்துதம்பி சீவலவர்
நன்றுநன்று மந்திரிதான் நம்முடைய வாசல்வந்தான்
வந்தவனை முந்தமுந்த மறலிக்கிரை[195] யிட்டிடுவேன்
பிந்திவந்தார் தன்னுயிரும் பேய்க்கும் நரிக்குங் கொடுப்பேன்
கொடுக்கமனந் துணிந்தருளுங் கொத்தவனே யெனப் பணிந்தான்
அடுக்கநின்ற தம்பியைப்பாத் தழகன்பெருமாள் சொல்வார்
சொல்லறிய மன்னவர்க்குச் சூட்சிசொல்லு மந்திரியை
கொல்லுவது முறைமையல்ல குத்தம்வந்து சுத்திடுங்காண்
சுத்திலிருந்தார் நகைப்பார் சூட்சியல்ல விட்டுவிடு
மத்தவனை வரவழைத்து வார்த்தைசொல்லக் கேட்டிடுவோம்
அறிந்துகொல்ல வேணுமென்று அழகன்பெருமாளுஞ் சொல்ல
சிறந்ததம்பி சீவலவர் சீக்கிரத்தி லழையுமென்றார்
அழையுமென்ற சொல்கேட்டு அருகுநின்றோ ரழைத்திடவே
குழைவுடனே மனம்நடுங்கிக் கொண்டரசர் முன்புசென்று
சென்றரசர் பெருமானைச் சென்றடைந்து வாய்புதைத்து
குன்றனைய புயமொடுக்கிக் கும்பிட்டுக்கை கட்டிநின்றான்

## அழகன் பெருமாளின் ஆதங்க மொழிகள்

கட்டிநின்ற மந்திரியைக் கண்டழகன் பெருமாள் சொல்வார்
இட்டமுள்ள அண்ணரையு மெங்களையும் வேறு கண்டாய்
கண்டதுண்டோ யெங்களையும் களைந்திடவோ மனந்துணிந்தாய்
உண்டுறங்கும் வேளையிலே உனக்குப்பயந் தோடி வந்தோம்

வந்தவரைத் துரத்திவெட்டி மறப்படையுங் கொண்டு வந்தாய்
சியறிந்திட நாங்கள் செய்ததுண்டோ குறையுனக்கு
குறையுனக்கே யல்லாமல் குத்தமில்லை யெம்மிடத்தில்
இறைவர்திருக் குத்தாலர் இத்தனையுங் கண்டிருந்தார்
இருந்தோமே சாய்மலையி லிங்குவந்து துடந்ததென்ன
பரிந்துளவும் பாற்றனையோ படைபிறகே[196] வருவதுண்டோ
வருவதெல்லாங் கண்டிருப்போ மந்திரிநீ வந்ததென்ன

## இராசகுலதேவனின் கபட மொழிகள்

கருமமுண்டோ சொல்லெனவே கள்ளரைப்போ லேக்கமுற்றும்
ஏக்கமுற்று வாய்புதைத்து ராசகுல தேவன் சொல்வான்
பாக்கியமுத்தை யெனக்களித்தீர் பாலுஞ்சோறு முண்ணவைத்தீர்
உண்டு சுகிக்கவைத்தீர் உமக்குரண்டு[197] பண்ணுவேனோ
அண்டர்தொழுங் குற்றால ரறிவாரெந்தன் மனக்கருத்து
கருத்துடையார் நீங்கள்முன்பு கற்றரெனக் கவர்கள்பின்பு
இருத்து மிளமுறைக்கூறுக் கென்னசொன்னேன் கேளுமினி
கேளுங் குலசேகரர்தான் கேட்டதெல்லாங் கொடுப்பமென்றார்
மீளவும்நீர் பிறஞ்சாய்ந்து விட்டுவரக் காரியமேன்
காரியஞ்செய்வோர் தமையும் காலாளும் பரிகரியும்
வீரபாண்டியர் தமையும் விட்டாரும்மைக் கூட்டிவர
கூட்டவந்தோம் சின்னப்பெருமாள் கோட்டைபுகுந்தே யறுத்தார்
நாட்டுக் கரிபரியும்விட்டு நாயனென்றே ஒதுங்கிநின்றோம்
நின்றவரி லொருத்தனுண்டோ நேரிசங்கை[198] யெடுத்தவர்கள்
அன்றுபிறங் காட்டாப்புலி ஆள்மேல்முள்ளு கிழித்ததுண்டோ
மீளவுந்தான் குலசேகரர் விட்டாரும்மைக் கூட்டிவர
வருவதுவே காரியங்காண் மன்னவரே யெனப்பணிந்தான்
இருபேரும் வாருமென்று ராசகுல தேவன்சொன்னான்

## அழகன் பெருமாள் தம்பியர் புறப்பாடு

சொன்னமொழி தனைக்கேட்டுச் சொல்வார்தம்பி சீவலவர்
இன்னமிங்கே நாமிருப்போ மிவடம்[199]விட்டு வருவதில்லை
உன்னைநம்பி நாங்கள்வந்தா லுயிர்க்கிறுதி வந்திடுங்காண்
வந்திடும்நீர் போமெனவே மந்திரிநூ றாணையிட்டு
அந்தணனையுங் கடந்தா னப்படிவாரா தெனவே
அப்படி வாராதெனவே ஆணையிட்ட மந்திரியின்
மெய்ப்புடன் சொல்லத்துணிந்தான் விலகினன் பாலூர்க்கணியான்

கணியான்சொல் கேளாமல் காவலவ ரிருபேரும்
துணிவுடனே யெழுந்திருந்து சோமத்துடன் போகலுற்றார்

விருத்தம்

உத்தகேடு காலத்துக் சூழ்வினைதான் முந்துமென

முற்றுமறை சொன்ன மொழியும் பழுதாமோ
பத்துடை யார்க்குப் பழம்பகையென் றெண்ணாமல்.

தெத்துடைய[200] மந்திரிபின் தென்னவரும் போகலுத்தார்
போகலுற்றார் சாய்மலைவிட்டுப் புரவல
னழகன்பெருமாளும்
பொருமத களிற்றானையும் படையும் புரவியும் நெருங்க
மேகமொத்த டம்மான முழங்கவே மேவலருந்தம்பி
சீவலதேவரும்
வெம்புலி போல்வருஞ் சின்னத்தம்பி தன்னுடனே
உடனுறையுந் தேவியரும் பரிவாரமும் பாவூர்க்
கணியானும்
ஒல்லென நடந்தார் நீரியநல்லூர் கடந்தார்
இடமுள்ள சிங்கக்கரந்தை விட்டு ஈச்சன்காளிங்க
னோடைவிட்டு
இறையவர் சங்கரநயினார் கோவிலும்விட்டு இப்பால்
பிறப்பட்டு
முந்திய கருவைநல்லூருவிட்டு வழுதியூர் கடந்து
நாவலரும்புகழ் நயினா ரிடைக்காலில் வந்திருந்தார்
வந்திருந்தா ருன்குலத்தவ ரென்று சந்திரனையும்
வரவிடுவே னென
ஏழுபாய்பரி தேரோன் கதிரவன் மேற்றிசை புகுந்தான்

குலசேகரரைச் சந்தித்தல்

புகுந்தான் மறுநாள் குலசேகரர் போயெதிர்கொள்ள
அழகன்
புறவிலேறுவேன் காண்பேனென யிரவி புகுந்தான்
இமைக்குமுன் சென்றுரைத்தனன் தூதனேறினர்
சிவிகையிலே
எழுந்தந்த மந்திரி ஒருதூதனை ஏகினான் குலசேகரர்
திருமுன்
நடந்தார் குலசேகரப்பெருமாள் நவமணிபோல்
சிவிகையிலேறி
நாவலர் கொண்டாட மடந்தையர் சாய்மரை வீச

துடந்தே பாவலர் வாச்சிய முழங்கத் தொழுதே பாவலர்
வணங்க
தூண்டிய பரிமேல்வரும் வீர பாண்டியனும்

உடனேவரும் பிரதானியுந் தளகத்தரும் படையும்
ஒல்லையி லெழுந்தாட்டை வெளியிலெதிர் வந்தார்
கடகரி பரியுங்குடையுங் காலாளும் நிரைநிறுத்தி
கவிஞ்சிட்டுக் கொண்டே யிருபிறமும் பவிஞ்சிட்டு[201] நின்றார்
நின்றார் செந்தூளி யெழுந்திட வந்தா ரழகன் பெருமாள்
நேரலர் தொழவருந் தம்பி சீவலதேவரும் படையும்
வந்தார் மதகளிறுடன் படையும் வந்திடு முன்னறிந்து
வானத் திடிபோல் முழங்கும் டம்மானத் தொனியும்
வாம்பரி விட்டிறங்கி நடந்தே வந்தடி பணிந்தார்
தானக் களிமாமதை யானையும் மானக்குலசேகரர் தாளினில்
தணிந்திடு மனத்தழகனுந் தம்பியும் பணிந்திடு மளவில்
பணிந்திடுந் தம்பிமா ரிருவோரையுங் குலசேகரர் மார்புறத் தழுவி
பங்கயக்கண் நீர்சொரிய நின்றிங்கிளய புதல்வரர்
துணிந்தேயெனை மறந்தேக நினைந்தீர் சொல்லீர் பிழையேதென் றறியேன்
சொல்லிய மூடுமுன்னே மந்திரிவந்தடி தொழுதான்

வேறு

### மந்திரி இராசகுலதேவனின் தந்திரச் செயல்

தொழுத மந்திரி ராசகுல தேவன்
சொல்லுவான் குலசேகரர் தம்முடன்
வழுதிநம் மழகன் பெருமாள் மன்னன்
வாய்பரி யேறு மாண்பிள்ளைச் சிங்கங்காண்
சிங்களாதியர் குச்சல ரொட்டியர்
சீன ரீழர் மருடர் கர்நாடரும்
எங்குள் ளீர்களும் வந்தெதிர் நிற்கிறார்
இன்றுபோல் சமையங் கெடையா தென்றான்
என்று மந்திரி சொல்ல அழகனும்
இசைந்து நல்லதென்றார் குலசேகரர்
நின்றசாணி[202] ஒருத்தனை நோக்கியே
நிமைக்குமுன் நம்பிரான் கொண்டுவா வென்றார்
நன்றெனச் சொல்லி ராசகுல தேவன்
நம்பிரா னல்ல சன்னனென்றே சொன்னான்

### பேய்க்குதிரையின் பேய்க்குணம்

சன்ன னென்பதொரு பேய்க்குதிரை தான்
சாணி தன்னையுங் கிட்டவர வொட்டாது
முன்னே நின்றாரைக் கடிக்கும்பின் வீசிடும்
முன்னங்கால் வெட்டிக் கொண்டனு மானிக்கும்
அனுமானித்திடும் பேய்க் குதிரையை
அலங்கரித்துக் கொடுவாரு மென்றனன்
பின்னங் காலா லெறிந்த யெறிபட்டு

பித்துமீர லுங் கட்டுங் கலங்குவார்
கலங்கி நிற்பார் மலங்குவார் சாணியார்
கடிவாளம் பூட்டவுந் தண்ணீர் காட்டவும்
விலங்கிட் டார்கள் தெருவில் நடந்திட
வீட்டி லோடுவார் சூட்டின்மே[203] லேறுவார்
மலங்கு வார்கள் தெருவில் நடந்திட
மதை யானையைக் கண்டனு மானிக்கும்

## பேய்க்குதிரையை அணி செய்தல்

சனுவாய் நின்றதோர் சாணி யொருவன்போய்
சன்ன னுக்கு முகப்பட்டுங் கட்டினான்
கட்டினான் கடிவாள மிறுக்கியே
கன்னச் சல்லி[204] யிருபிறந் தூக்கியே
மட்டில் லாததோர் தாப்பணிவார்[205] கட்டி
வாய்த்திடுந் தண்டு வாய்க்கியமுஞ் சேற்றான்[206]
சேர்த்திடுஞ் சிங்கக் கல்லணையும்[207] வைத்து
செம்பொன்னங் கவடியு[208] மிலங்கவே
கொத்துச் சல்லி சதங்கையுங் கட்டியே
குஞ்சந் தூக்கிக் குதிரை மணிகட்டி
கட்டு மட்டாகச் சன்னாகமு[209] மிட்டு
காலு நாலுக்குந் தண்டையும் பூட்டியே
கொட்ட மிட்டுவரும் பேய்க் குதிரையை
கொண்டுவந்து விட்டா னந்தச் சாணியும்

## குலசேகரரின் கோபமும் அழகனின் ஆறுதலுரையும்

சாணி தன்னைக் குலசேகரர் நோக்கி
தம்பிக்கு நம்பிரான் கொண்டுவரச் சொன்னோம்
வீணிற் பேய்க்குதிரை கொண்டு வாவென
விட்டதார் கொண்டு போவென்று கோவித்தார்
கோவித்த குலசேகர மன்னனை
கும்பிட்டுக் கொண்டழகனுங் கூறுவான்
ஏவிப் பாருமென் வல்லமையுஞ் சற்றே
யானல்லாற் பின்னை யாரிதை யேறுவார்

## குதிரை நடை பயிற்று வகை

ஏறுவா யென்று மன்னன் விலகவும்
எதிரே நின்ற குதிரைக்கு முன்சென்றான்
மாறில்லாத அழகனைக் கண்டந்த
வாசி[210] கொஞ்சி[211] வலக்காலை வெட்டுமாம்
வெட்டு வாலைக் குசை[212]தன்னை நெகிழ்த்தந்த
வேந்தன் கையில் கசைதன்னை வாங்கியே
கிட்டநின்ற குதிரையைக் கும்பிட்டு
கெதிகொண்[213] டங்க வடிமிதித் தேறினான்
ஏறில் லாத கெதியில் நடத்தியே
ஏற விட்டு மயூக்கெதி[214] காட்டியே

தாறு மாறில்லா வானங் கெதியிலே
தாண்ட விட்டுச் சதகெதி மூட்டியே
மூட்டி விட்டதோர் சாலகம்[215] போலவே
முந்தி யோடநின்ற வீதி விட்டனன்
தாட்டியங் கொண்டு மீளத் திருப்பியே
தாரை சுற்றடி நாகபந்தஞ் சாய்ப்பு
சாய்ப்பு முன்பாச்சல் பின்பாச்சல் கேடயம்
தாண்டுவிற்றல் குறுகுதல் கேடயம்
வாய்ப் புல்லாரி மயூகம் சுவடிணை
வல்லவம் வகுப்புக்கிள்ளை கொள்ளுமார்
கொள்ளு வஞ்சி மரமென வல்லவர்
கூறுஞ் சாதி பதினெட்டுங் காட்டினான்

## அழகன் பெருமாள் பேய்க்குதிரையை அடக்குதல்

மிக்க சாரி வருகின்ற வீதிபோய்
மீளுங் கண்ணுக்குக் காணாமல் பாய்ந்திடும்
பாய்ந்திடுமோ ரறுபத்து நாலடி
பார்வீழ்ந்திட நின்று நடந்திடும்
தாண்டிடு மனுமானித் தெழும்பிடும்
தாவித் தாவிச் செந்தூளி யெழச் செல்லும்
செல்லும் விண்ணிடை யணில் மிதித்திடும்
சேறுபாய விலாளி குனித்திடும்[216]
மலர்போல் கொஞ்சிக் கொஞ்சி நடந்திடும்
வாய்க் கயத்தை யதைக்கிக்[217] கடித்திடும்
கடிவாளங் கடிக்குங் குதிரையை
கால்கொண்டே தட்டித் தூவாளத்தே விட்டான்
செடியுங் காடுஞ் செந்தூளி யெழக் கண்டார்
தென்னனையுங் குதிரையுங் காண்கிலார்
கண்டிலென் றம்பிதன்னை யென்றெண்ணியே
கண்ணீர் சிந்தக் குலசேகரர் நின்றார்
அண்டி நின்ற பெரும்படை வீரரும்
அரசனுக் கிதுவோ விளையாட் டென்பார்
ஆட்டுத் திட்டையும் நிற்றூளி யாச்சென்பார்
அய்யய்யோ அவசம் வந்து போச்சென்பார்
கூட்டிவந்தான் ராசகுல தேவன்
கொல்லாமல் கொன்றான் குதிரையை விட்டென்பார்
என்பார் கண்டிரு கண்கள் களிக்கவே
எற்று மீரலும் பிற்றுங்[218] கலங்கவே
அன்பில்லாத கடும்பேய்க் குதிரைக்கு
அண்டத்தில்[219] நுரை வெண்டயிர் போலவே
சிந்தும் வேர்வை ஆறாக வோடவே
தேக்கம் பூப்போல் வாய்க்குள் நுரைக்கவே
வந்தா னந்தக் குதிரையு மன்னனும்
கலங்கி நின்ற குலசேகரர் கண்டு
கையமத்த அழக னிரங்கினான்
அலங்காரப் புயத்தோ டணைத்தே யந்த

அழகனுக்குப் பலபணி பூட்டினான்
பூட்டி மீளப் புரவியி லேற்றியே
புலியூரில்சென் றிருமென் றனுப்பினான்
ஆட்டுத் திட்டை வெளிவிட்டுத் தப்பியும்
அழகனுஞ் சென்றான் தென்காசி வீதியில்

விருத்தம்

அழகனுந் தம்பியரும் வீதி உலா வருதல்

வீதியில் குதிரைசெல்ல வேழமும் புடையுஞ்சூழ
மாதர்வெண் கவரிவீச மங்கையர் கீதம்பாட
ஆதவர் போலத்தோன்று மழகனுந் தம்பிமாரும்
காதலார் மடவார்சூழத் தென்காசி வீதிற்சென்றாரே

வேறு

வீதிதனில் வந்தார் வாம்பரிமேல்
விண்ணின் மதிபோல் வெண்குடை நிழற்ற
சோதி மணிக்குடை தானெருங்க
தோகை யனையார் வெண்கவரி வீச
வீசப் பாவாடை விண்ணில் செல்ல
வெத்திக் கயல்கோடி முன்னடக்க
ஓசைக் கடல்போல் வாச்சியமுழங்க
ஒற்றை வலம்புரி வளை கலிப்ப
கலிக்குங் குழல்வீணை யாழ் முழங்க
கடிய புலவர்கள் கீதம் பாட
ஒலிக்குந் துடி மத்தள முழங்க
உருவம்போல் நின்று மடவா ராட
ஆடு பரியேறிச் சின்னத்தம்பி
அழகன் பெருமாள் தன்முன்னே செல்ல
தேடும் புகழ்தம்பி சீவலவர்
தேசி மேலேறித் தூசிவிட
தூசிப் படைமுன்னே தானடக்க
சூழு மதகரி பின்னே செல்ல
செல்லும் வீதியெல்லா மடவார்
செம்பொன்னால் தீயேந்தி நிற்பார்
செல்லும் வீதிக் கும்பக்குடங்கள் வைப்பார்
சுண்ண மிறைப்பார் பன்னீர் தெளிப்பார்
சேலை யுடுப்பார் செம்பொன் னணிவார்
தேடி அழகன் தன்பின் செல்லுவார்
க ( ணி ) ப்பா ரெதிராடிக் கும்பிடுவார்
காச்சிகார் வந்தா னழகனென்பார்
அழகன் பெருமாளைப் பாருமென்பார்
ஆணி லழகனைப் பாருமென்பார்
செழியன் பெருமாள்தன் திருமார்பு
திருமுப்புரி நூலும் பாருமென்பார்
பாரு மதிமுகத் தழகை யென்பார்

பவழக் கனிவாயைப் பாரு மென்பார்
காரை[220] விலங்கிட்ட மேக மென்பார்
கருணைக் கடலிவன் காணு மென்பார்
காணத் தவஞ்செய்த மடவா ரெல்லாம்
கலையும்[221] நிலையும்போய் நிலை தளர்வார்
நாணத்தினைத் துடந் தயல்[222] துடந்தே
நங்கைமார் கொங்கை மெலிந்து நிற்பார்
மேவும் பரியெதிர் தாவச் செல்வார்
வேட்டையுடன் சென்று மிகுத்திடுவார்
தாவும் பரிமீதில் வாரதிவர்
தம்பி சீவல தேவர் என்பார்
தேவர் தருவென்பார்[223] பரிமேல் வந்த
சின்னத் தம்பிகா ணிவரே யென்பார்
தம்பக் குள மடவா ரிவரோ
தம்பிப் பெருமாள்தன் செல்வர் என்பார்
நாமு மிவர்கள்பேர்க் குடியா னோட
நாட்டில் வெகுகோடி சனங்க ளென்பார்
நாட்டுத் திருப்பேரை யெடுத்துரைப்பார்
நம்புங் குடிக்கிவர் தன்ம மென்பார்
தோட்டு மலர்க்குழலா ரிவ்வா றுரைத்து
துயரமுற்று மையல் பூண்டு நிற்க

## புலியூர் மீளுதல்

பூண்ட அழகன் பெருமாள்
புரவிதனை மெல்லவே நடத்தி
தீரன் திருத்தம்பி மாருடனே
சென்று புலியூரிலே யிருந்தார்
இருந்தார் குலசேகரப் பெருமாள்
ஏற்றக் கருவை நல்லூரும் விட்டார்
திருந்த யிளமுறைக் கூறுமக்கு
தேசம் பகுந்துபின் தருவோ மென்றார்
தருவோ மெனச்சொன்ன வார்த்தைகேட்டு
தம்பி அழகனுஞ் சம்மதித்து
மருவும் புகழ்தம்பி சீவலவர்
மகிழும் படிக்குநல் வரிசைசெய்தார்
பொய்யொன் றறியாத மன்னவர்கள்
புலியூரிலே சென்றிருக்கும் நாளில்
நாளு மிவர்மேலே கரிசம்[224] வைத்து
ராச குலதேவன் விடைய மிட்டு[225]
மீள இவர்கையில் வாளெடாமல்
விலக்க வேணுமென் றேதுணிந்தான்

நடை

இராசகுல தேவனின் பிறிதொரு சூழ்ச்சி

துணிந்து வாய்புதைத்துப் பணிந்த ராசகுல தேவன்
அதிசூர னான சிகவீரபாண்டிய னோடுரைப்பான்
இணங்கியே நடக்க நினைந்திடாத சுத்தவீரர்
இவரெதி ரிட்டெதிர் பிடித்தால் வாளில்
பிலமொருத்தர்[226] காணோம்
காணச் சமைய மிருப்பாணிக் கிடைசெலுத்தி நடுவோம்
நட்டக் கானக் கதலிவெட்டி வாளுக்க வீமானங்
கொடுப்போம்
பூணிப் பொலிபுயத்தா னாணுக் கழகன் சித்த மறிவோம்
என்னப் போதக் கவடப்புத்தி போதித் தன்னவனு
மிசைந்தான்
தானைத் தலைவருத்தி யாற்றுக் கருகுநிற்கும் வாழை
தன்னைச் சாடச் சிலர்விடுத்தா ரோடிச் சிலர்போய்
வெட்டிவந்தார்
சீனப் பணிகள் வெகுமானந் தொழில்படித்த கொல்லன்
கையாற்றிரட்டி நாராசத்தை நிறுத்தினார்கள் கதலி
நடுவே
வேருக் கொடுத்தணைத்துப் பாரக் கதலிதன்னைக்
கொடுபோய்
தென்றல் வீசு மாசாரத்தில் வாசல் வெளியில் நாட்டி
வைத்தார்
பாரிட் டரசர் நிற்குமூரில் தெருவில் நட்டவாழை
தன்னைப் பாப்பார் சிலர்குதிப்பா ராடிச்சிலர் மதத்தால்
கூடி
கூடித் துடைகள்தட்டி யாடிக்கொள்வார் வட்டமிடுவார்
சிலர் கோளத் துரைகள்நட்ட வாழைக்கருகு சுத்தி
வருவார்
மாடத் தெருவை மூட்டி யாடல்பரி நடத்தி வருவார்
சிலர் வாழைக் கருகுநிற்கும் ஆளைப் புடைவிலக்கி
விடுவார்
வாய்வெட் டல்லாது வெட்டுவார் கிட்ட வொருத்தர்
காணோம்
என்று வாசிப்புகளுடன் தென்காசிப் பதியில் நிற்குமளவில்

## சின்னப்பெருமாள் நாராச வாழையை வெட்டிவிடுதல்

ஆய்விட் டெமைவளத்த தாயுங் குலசேகர ரெனவே
தினமந்திப் பொழுதில்வந்து சந்தித்தேகு மந்தநாளில்
தம்பி சீவலவர் தாமு மழகன் பெருமாளும்
அன்று சந்தித்தேக வந்தார் முந்தக் கதலிநட்ட தறிந்தார்
நம்பொண்ணா திரும்பைக் கம்பு நாராசம் போல்திரட்டி
ஏற்றி னார்களெனப் பூட்டுவ ரழகன் கேட்டான்
கேட்டுநின்று நகைகோட்டி மந்திர வாளுருவி
எதிர்கிட்டி வாழைதன்னை வெட்டவே துணிந்தா னழகன்
வெட்டு வாய்த்துதென்று பூட்டுவா ரழகன் சொல்லவே
சென்று விலக்கினான் றமையன் வலக்கண்ணான
சின்னப்பெருமாள்

பெருமைத் தமையன்மன மொருமித்ததை யறிந்து விலக்கி
நின்று பேசுவான் மனதில் மாசில்லாத சின்னப் பெருமாள்
நிருமத்தரிய வித்தை பரிசுத் தெளியதுக்கே மாறி
கெஞ்சிநின்ற கொல்லர் செய்வதென் றல்லாது வெகுமாயம்
மாயத் தொழிலறிந் துபாயத்துடனே வெட்டி விடுவேன்
என்கை வாளிற் பிலமு மிருதோளிற் பிலமு மண்ண ரறிவீர்
வாழை தன்னை வெட்டுவதுக் கென்னை விட்டு நின்று பாரும்
பார் மெய்க்கவே பணிக்கமார் மெச்சிய தொழிலும் படித்தேன்
ஒருபட்ட மோசம் வரவொட்டே னென்சமத்துப் பாரும்
நார்வைச் சேறாங் கதலியூர் மெய்க்கவே களரி மெய்க்க
முந்தநான் வெட்டுவது தப்பினால் வெட்டிடுமெனக் கைதொழுதான்
தொழுததம்பி தன்னைத் தழுவி மார்பினுட னணைத்து
தம்பி சொன்னபடி செய்யென்று மன்ன னழக னகலநின்றான்
ஆலித் தெழுந்தா னிருகாலிற் கெதிகொண் டெதிர் குதித்தான்
குதித்தான் லெகுக் கொண்டெதிர் குதித்தான் முன்னந் தம் பின்னந்தம்
முறைகொண் டொன்று மானி லெகுகொண்டே கட்டுஞ் சாரி வந்தான்
விடுத்த வாழை யிடசாரி வலசாரியும் வந்தான்
நின்று மெய்யொடுக்கி முறை கொய்து கொய்து வைத்தான் காலை
காலிற் சவடுரைத்து மேலிட்டுரமெடுத்து நிமிர்ந்து
எதிர்கிட்டிநின்ற வாளைப் பத்தி யோட வீசிவிட்டான்
நிலத்தடி யுலக்கைபோலு மிரும்பு நாராசம்
வெட்டில்நேர்த்தது கதலி தூகாத்தது விழுந்ததில்லை
விழுந்திடாது நின்ற குழைந்த வாழைதன்னைக் கண்டார் - சிலர்
சிலர் வெட்டுத் தப்பியது கிட்டிப் பாருமென நின்றார்
மொழிந்தவாயுதடு சுழிந்து மூடுமுன்னே யரசன்
முடுகி வாளா லசைத்திடவும் வாழை விழுந்ததுவே
வாழை விழுந்தது கண்டாரு மதிசெயித்தார் குதித்தார்
நின்ற மன்ன னழகன்தம்பிதன்னைத் தழுவிமெல்ல நடந்தான்
ஏழை மந்திரியும் வீரபாண்டியனுஞ் சலித்தார்

## குலசேகரரின் பாராட்டு

துடந்திலங்கு மார்பனந்தக் குலசேகரர் முன்புசென்றார்
சென்றுகை குவித்துநின்று திருமுகங் கண்டருளி
ஒருசிங்கம்போ லழகன்தம்பி சீவலவர் நின்றார்
வென்றிவேந்த னெதிர்நின்ற ராசகுல தேவன்
சொல்வான் விதுர னழகன்தம்பி சதுரன் விக்கிர வாள்வீமன்
வீரன் வாளெடுக்கில் நூறுகோடி படைசாயும்
மல்லால் வெல்லும் வாளிரும்புங் கல்லுங் கற்றாழை போல்மடியும்
பார வாள்வலியும் வீரன் றோள்வலியும் பாரில்
பாதத்தூளில் நிகராகும் வாள்வீம னென்றார்
என்று கேட்டிருந்தே னின்றுகண்டே னொருபுதுமை
நல்லயீட்டி*போலடித்துக் கூட்டியே இரும்பைத்திரட்டி
நின்றபார வாழை ஒன்றிலதில் தனைச்செலுத்தி
நாங்கள் நிறுத்தி விட்டோமதைத் தறித்துவிட்டா னொருவெட்டால்
தறித்துவிட்டான் மனங் கறுத்துவிட்டா னில்லையழகன்
வெறுத்த மந்திரி தானுரைத்த வார்த்தையெல்லாங் கேட்டே
அந்தவேந்தன் குலசேகரன் வாய்த்ததம்பி மாரைத் தழுவி
தழுவிமார்போ டணைத்தழகன் தம்பி சின்னப்பெருமாள்
தம்பி தனக்குநல்ல செம்பொன் மணிகள் மலர்கொடுத்து விட்டார்
அந்தவேளை தனிலனுப்ப அழகனுடனே சின்னப்பெருமாள்
என்னும்வீரப் புலிபோலந்தப் பாரப்புலியூரில் சென்றிருந்தார்

## இராசகுலதேவன் பின்னுமொரு யுக்தி செய்தல்

சென்றவர்கள் தானிருக்க ராசகுல தேவன்
செய்யகுல சேகரன் பையநின்று சொல்வான்
இன்றிரும்பு நாராசந் தடிபருமத் திணக்கி
ஏற்றிநட்ட வாழைதன்னை மாற்றிவெட்டி விட்டான்
வெட்டிடுவார் வாளெடுத்துக் கிட்டவர லாமோ
வேந்தர்பெரு மானேயொரு அந்தரங்க மல்லவோ
விருப்பமுற்று யோகற்றி விருப்பவரும் நினைப்பார்
வாய்த்ததம்பி மாருமக்கு அந்தரங்க மானால்
வாளோடும் வருந்தொழிலை நாளோடும் நிறுத்தும்
நிறுத்துமொரு கட்டியலை யெடுத்துவரச் சொல்லும்
நிருபர் பெருமாளேயென்று யிருகை தொழுதுரைப்பார்
வெறுத்தகுல சேகரரும் நல்லதென வுரைத்தான்
வீர பாண்டியனுமந்த மந்திரியும் போனான்

## குலசேகரர் கட்டியலுண்டாக்கிவரப் பணித்தல்

போனார் மறுநாள் வந்தாரண்ணர் முகங்காண
பூட்டிய வாளழகன் சின்னப்பெருமாள் தன்னுடனே
ஊனமில்லா மன்னர்குல சேகரரை வணங்கி
ஒருபிறத்தி லேயொதுங்கி யிருபேரும் நின்றார்
நின்றதம்பிமார் முகத்தைக் குலசேகரர் நோக்கி
நீதியுள்ள மன்னவரே யேதுமறி யீரோ
வென்றிவடி வாளுடனே மூற்றவர்கள் இருக்க
மிக்கபெருங் கோவிற் காலுக்குள்ளே வரமுறையோ
முறையாலுங் கட்டியலுங் கையுமாய் வாரும்
முத்தவெளி கடந்தா லுங்களுக் கொத்தபடிசெய்யும்
அறிவாளர் நீங்களென்று குலசேகர ரனுப்ப
அண்ணரையுந் தொழுதுகொண்டு புலியூரில் வந்தார்

## அழகனும், தம்பியரும் கட்டியலுண்டாக்குதல்

வந்தா ரழகன்பெருமாள் கட்டிய லுண்டாக்கி[227]
வண்ணம் வழித்தெழுதி வைத்தார்நண்ணிய
கைபிடித்தார்
முந்துதம்பி சீவலவர் கட்டிய லுண்டாக்கி
முழுதும்வேளைக் குதவுகள்ள வாளுமதில் சேர்த்து
ஏற்றுங்கள்ள வாளிருக்குந் தோற்றமறி யாமல்
எழுதரிய சாதிலிங்க முழுதும்வழித் தெழுதி
மாற்றும் வலக்கை பிடித்தார் சின்னப்பெருமாள் தானும்
வடிவழகன் குலசேகரப் பெருமாள் மனமகிழ
மகிழ்வினுடன் வந்து சந்தித்தேகி வரும்நாளில்

## இராசகுலதேவன், வீரபாண்டியனின் கபட எண்ணமும், குலசேகரர் கண்டிப்பும்

மந்திரி ராசகுல தேவனெனும் பாவி
விகடிதமிடுங்[228] கொடிய கவடுபண்ண[229] நினைந்தே
வீரபாண்டிய னிடத்தில் மந்திரியுஞ் சென்றான்
சென்றுகுல சேகரர்முன் தெண்டனிட்டு வீழ்ந்தார்
காவலவ ரிருவரையு மெழுந்திடுங்கோ வென்று
கழுந்துலக்கை[230] போலவேதா னெழுந்துகிட்ட நின்றார்

வேறு

நின்றா ரிருவிழிநீர் சொரிகின்றா ரதுகண்டே
நெடுநீள மாமகள்புணர்[231] மாமுகில் குலசேகரர்
சொல்லுவார்
மன்றாடுவ தெனவே விழுகின்றீ ரழுகின்றீர்
வாய்வந்ததை யுரையீரென யெதிர்மந்திரி பணிவான்
பகர் சந்திரகுல புகவன் பகையென்பது மறிவீர்
எழுபாருந்[232] தனியாளும் பிலவானென்ப[233] தறிவீர்

தகரங்கமழ்[234] குழலாள் மதனழகன் பெருமாள்தன்
உயிர்த்தம்பி போர்மதத்தும்பி போல்வருந்தம்பி சீவல தேவர்
தேவ ராலையந் தோறுந் தொழுதாகிலு மவரை
செயங் கொண்டிட முடியாதெனப் பயங்கொண்டிட் டடியும்
தாழ்வானது வருனாளையில் மேலாடுவ தவரே
அன்று சங்கையாடிய வீரபாண்டியன் கெங்கை யாடியாய்ப் போவான்
போகாதவர் உயிரோடிருந்திடும் நாளெல்லா மவர்க்கே
இந்தப்புவி யாளவுங் கூடாதெனச் செவி யூரலாய்ச் சொன்னான்
தீதானசொல் செவியூரலாய்க் குலசேகரர் கேட்டு
இருசெவி போற்றியே முகத்தாமரை சவிகேட்டுள்ள[235] மயந்தார்
அயர்த்தேவிடுஞ் சொன்ன வார்த்தையை யுயிர்ச்சேதஞ் செய்திடுவேன்
வரவழைத்தேன் தம்பிமாரை யிதுநினைத்தா யிதுமுறையோ
உயிர்ச்சேதஞ் செய்திடுவேனென உரைத்தாயிது மொழியோ
என்று உலகாளு மன்னவர் கேசரி குலசேகரர் சொன்னார்
குலசேகரப் பெருமா னிதுசொல்லவே தலைகவிழ்ந்தே
ராசகுல தேவனும் போனானந்த வீரபாண்டிய னுடனே

## சூழ்ச்சியால் வெல்லக் கருதுதல்

நிலவேறிய மணிமாளிகை தனிலோரிடத்தி லிருந்தே
நேசமந்திரி ராசியஞ்[236] சொல்வான் வீரபாண்டிய னுடனே
தமக்காக்கு வதனைத் தாமிவர் பிறக்காக்கிட நினைந்தார்
அவர்தமைக் கேட்பதே னவர்க்காச்சினி நமக்காச்சினித் துணிவோம்
எமக்காக்கினை வந்தாலுமின் றுமக்காக்குவேன் சீமை
இதுநிச்செய மென்றிரு பேருமாய்ச் சத்தியமுஞ் செய்தார்
செய்யுங்காரிய மினிமேல்சொல்லுந் தம்பி சீவல்தேவன்
கையிற் சிலைவாங்கிடில் ரகுராமனும் நிலைவாங்கிடப் பொருவான்
கொய்யுங் காலுளை வெய்ய வாம்பரி தன்னி லேறிநடந்தே
கோபங்கொண்டு பொருத்தாலந்த நேமந்தனு[237] மலைப்பான்
மலைப்பா யிவருடனேநின்று வெளிப்போர்பொர மாட்டோம்
மறப்போரினி லிவரோ டெதிர் நிற்பா னபிவீமன்
சொல்லக் கேளுமோ ரறைக்கேதனி லடைத்தே கொல்லவேணும்
நின்று சுளிப்பா[238] யிவருடனே நின்று வெளிப்போர் பொரமாட்டோம்
மாட்டோ மெனவுரைத்தே யிருபேரும் போயினர் சிலநாள்

## இலங்கம் அமைத்தல்

*வாழ்ந்தார் பின்னுந் துணிந்தாரவர் சூழ்ந்த வினையாலே*
*காட்டானைக்குக் கொப்பம்[239] வெட்டினாப்போலே ஒரு இலங்கம்*
*கட்டினா ரிருட்டறை வீடொன்று கட்டினா ரதற்குள்ளே*
*உள்ளாகிய மல்லர் அறுபது பேரையு மழைத்தே*
*அவர்க்கூ ரும்பிளிக்கை பொன்னும் ரோகத்தினி லளித்தே*
*விள்ளாதையு மெனவே உண்மை பகர்ந்து விருந்திட்டார்*
*விட்டா ரிருட்டறையிலவர் கட்டாகவே யிருக்க*
*இருக்குமிடந் தெரியா தொருத்தருக்கு மெனயிருத்தி*
*நெஞ்சில் வீரமேது மில்லாத பாதகன் வீரபாண்டிய னிருக்க*

## அழகன், தம்பியரை அழைக்க இராசகுலதேவன் செல்லல்

*செருக்கு மன்னவர்தமைக் கூட்டிவந்திட மந்திரிதனியே*
*அன்றுதேடி யோடினன் புலியூரதில் காலதூதனைப் போலே*

விருத்தம்

*காலமூன் றுணரவல்ல காவலர்க் கிறுதி மூட்டி*
*மாலிமை யாகக்கூட்டி வருவேனென் றோடிச்செல்லும்*
*சாலமந்திரி தானேந்துந் தண்டையமுங் கயறுங் கையிற்*
*சூலமுந் துடர்ந்துகாலத் தூதுவன் போலே போனான்*

நடை

## திருத்தேவியுரைத்த தீக்கனவு

*காலதூதன் போலவே ராசகுல தேவன்*
*கன்ன னழகன் பெருமாள் மன்னன்திருத் தேவி*
*வேலனைய விழியாளோர் கனவுகண்டு நடுங்கி*
*மெய்பதறிக் கைபதறிக் கால்பதறி யெழுந்தாள்*
*எழுந்து தொழுதரசே யென்னுடல் பதறுதடியேன்*
*ஏதெனவு மறியே னிப்போதுகனாக் கண்டேன்*
*கொழுந்துவிட்டுப் படர்ந்தகொடி விழுந்துநிலம் புரள*
*குன்றி முறிந்திடக் கண்டே னின்றகொழு கொம்பு*
*கொம்புடைய மதையானை கெம்பீரமாய் நடந்தே*
*கொப்பத்தி னிடைவிழுந்து கூப்பிடவுங் கண்டேன்*
*வெம்புலி ரண்டுசென்று கூட்டிலகப் பட்டு*
*வீழ்ந்துகுத்திச் சேவுகர்கள் சூழ்ந்துநிற்கக் கண்டேன்*
*கண்டறியாக் காச்சியொரு தும்பிவந்த துடனே*
*கானவரி வண்டுரண்டு போனதற்பின் பிறகே*
*புண்டரீக[240] முவர்ந்த வண்டு ரண்டு மிருக்க*
*புரிந்துதும்பி பறகாமல் குவிந்துகொள்ளக் கண்டேன்*
*கொற்றுமணித்[241] தோரணமு மற்றுவிழக் கண்டேன்*
*அவிழ்ந்தே னதுகுழல்மாலை சரிந்துவிழக் கண்டேன்*

அல்லாம லின்னமொன்று சொல்லமறந் தேனே
சொல்ல மறந்தே னெனது முந்தாணி தனிலும்
துய்யமலர்க் கூந்தலிலுந் தீயெரியக் கண்டேன்
நல்லஉயிர்க் கழிவுவர வேணுமினி யரசே
நான்கண்ட கனாவென்றாள் தேன்கொண்ட மொழியாள்

### மன்னன் தேறுதலும் இராசகுலதேவன் வருகையும்

கண்டதுண்டோ உனைப்போலே மண்டலத்திலேழை
கனவுகண்டு மனநடுங்கி மனமெலிய லாமோ
ஒண்டொடியாற் குள்ளதொழிற் கனவுகண்ட உடனே
உடல்பதறு வாரெனவே வடிவழகன் மொழிந்தான்
மொழிந்தவாய் மூடுமுன்னே வந்துதலைப் பட்டான்
மோசம் விளைந்திடநினைந்த ராசகுல தேவன்
விழுந்துதெண்ட னாய்விழுந்து வாய்புதைத்து நிற்க
வேந்தனந்த மந்திரியை ஆய்ந்துசொல்லு மென்றான்

### திருத்தேவி மறுப்பும், இராசகுலதேவனின் வற்புறுத்தலும்

போந்ததுங்க ளண்ண ரிளமுறைக்கூறுங் கொடுத்து
பூதலமுங் கருகுலமும் பாதிதர நினைந்தார்
அந்தரங்க மாயிருக்கும் இலங்கைக்கட்டு தனிலே
அரசருங்க ளிருவரையு மழைத்துவரச் சொன்னார்
அழைத்துவரச் சொன்னாரென் றுரைத்தமொழி கேட்டு
அருகில்நின்ற தேவியந்த அரசன்முகம் நோக்கி
மழைத்தடங் கண் ணீர்சொரியக் கண்டகினாக் கொடிது
மன்னவனே யேதுவரு மென்னவும்நா னறிவேன்
அறியாதாள் சொன்னதெல்லாங் குறியாக நினையும்
ஆளத்தக்க தேசமெல்லாம் நாளைச்சென்று பகிரும்
நறைவீசுந் தார்மார்பா யெனவேநின் றிறைஞ்சி
நாவிகமழ்க்[242] கருங்கூந்தல் தேவிமுகம் நோக்கி
முகம்நோக்கி யுரையாம லீதுரைக்க லாமோ
மூத்தகுல சேகரரைப் பாத்திதுவுஞ் சொல்லுமோ
மகவாசை தீத்ததுவுந் தம்பியர்க ளல்லவோ
மன்னவருக் கிவருமிரு கண்ணின்மணி யல்லவோ
கண்ணின்மணி யாய்வளத்த அண்ணரென்று அறிந்து
கரிசனமாய் நினைத்ததென்ன அரசர்குலத் துதித்தும்
பெண்ணின்மதி போகாது யென்றகல நின்றான்
பின்னுமந்த ராசகுலன் மன்னர்முகம் நோக்கி
முகம்நோக்கி யண்ணரிடத் தெழுந்தருளுமென்ன
மூத்தகுல சேகரரைத் தேர்ந்துவழி நடக்க
அண்ணரிடத் தெழுந்தருளு மென்னவே யெழுந்து
அழகன் பெருமாள் நடந்து ஆசாரத்தில் வந்தான்

## பாவூர்க் கணியானின் கணிப்பும், மந்திரியின் அச்சுறுத்தலும்

வந்துதெண்டமாய் விழுந்து பாவூருக் கணியான்
மாதிடங்[243] கொண்டே மிகுந்த சோதிடங்கள் சொல்லுவானன்
முந்துதலைச் சூலமும்நீர் பிறந்தநாளு மின்று
முகிழ்த்தமதில் செவ்வாயுஞ் சூரியனு மிருந்தான்
செவ்வே வியாழமும்வந் தட்டமத்தி லிருந்தான்
திருந்துசனி சென்மத்தி லிருந்தது நன்றாமோ
இவ்வேளை யெழுந்தருளி லுயிர்ச்சேதம் வருங்காண்
இருவருக்கு மெனமொழிந்தான் பாவூருக் கணியான்
பாவூருக் கணியானை வைதுகோவித்துக் கண்சீறி
பார்த்துநின்ற ராசகுலன் வார்த்தைசொல்லத் துணிந்தான்
கோவித்துநீ சொன்னதெல்லாங் குலசேகர ரறிந்தால்
குற்றம்வரு மானைக்காலா லெத்திவிடப் போறார்
சொல்லா வார்த்தை சொன்னாய் பொல்லாத புலையா
சோதிடஞ்சொல் நாக்கையினிக் காதுடனே யறுப்பேன்
வல்லாளர் சிவிகையின்மேல் இப்போவரப் போறார்
வார்த்தை கத்த தலையாரி பாத்திருடா வென்றான்
பாத்ததுவு மின்றுமும்மைக் காத்ததுவு மின்று
பனிக்காலு மதிமுகத்தை யினிக்காண மாட்டேன்
கீர்த்திபெற்ற மன்னவன்றன் கோவிற்கால் புகுந்தால்
கேடுவருந் தம்பிவந்து வீடுபுக மாட்டார்
வீடுபுகும் பூனைகுறுக் கோடுவது பாரும்
மேவுங்கருங் காகமிடம் போவதும் பாரும்
கேடுவரு மென்றுசொன்ன வார்த்தைதனைச் சற்றும்
கெணியாம லேநடந்தார் கணியானும் நின்றான்

## தம்பியர் தடுத்தலும், மந்திரியின் உதாரண, உறுதிமொழிகளும்

நின்றதம்பி சீவலவர்சென்றுதொழு திறைஞ்சி
நீதிகத்த கணியான்றன் சோதிடம் பொய்த்திடுமோ
இன்றுசெல்லவும் வேண்டாஞ் சொம்பகிர வேண்டாம்
இளமுறைக் கூறுநமக்குத் தலைமுறைக்கும் வேண்டாம்
வேண்டா மென்றிடுங் கருமம் வேணுமென்று நினைந்தால்
மெத்தப்பழு தாகுமது புத்திப்பிழை கண்டீர்
தீண்டாத கற்புடையாள் தெய்வ மல்லவோதான்
திருத்தேவி தன்னுரையை மறுத்தேக லாமோ
மறுத்தேகி லவசம்வரு மண்ணாவி நமக்கு
மந்திரி சின்னப்பெருமாள் திருமுகத்தை நோக்கி
நிறுத்தே யிடைக்கிடை[244] பொன்கொடுத்தாலு மும்மைப்போலே
நீதியுள்ள மன்னவர்கள் நீசர்மொழி கேளார்
கேளார்கள் பெண்புத்தியை உலகாளு மன்னவர்கள்
கேட்டல்லவோ திசைதரனுந் தாட்டிமையை யிழந்தான்

வாழார் வேல்விழிச் சீதைவார்த்தை தனைக்கேட்டு
வனத்திலன்று ராமர்பட்ட சளத்தை அறியீரோ
அறிவுடைய பஞ்சவர்கள் துரோபதைசொல் கேட்டு
அலக்கழிந்து திரிந்ததனை அறியவில்லையோ கண்டீர்
குறையுனக்கே யல்லாமல் நினைக்கும் நினவெல்லாம்
குற்றம்வருங் குலசேகரர் மெத்தமனஞ் சலிப்பார்
சலியாம லெழுந்தருளு மன்னரிடத் தெனவே
சர்ப்பினைசெய் மந்திரிசொ லுற்பனமாய் நம்பி
சம்மதமா யந்தணனைச் சாய்மலையிற் கடந்தே
தந்ததுநான் உங்களுக்கு ரண்டுபண்ணு[245] வேனோ
நலியாம லெழுந்தருளும் நினைத்தபடி முடிக்க
நானொருத்த னிருக்கமன மேன்சலிக்க வேணும்
மலைக்குங் கடலுக்குமுங்க ளண்ணருட சீமை
ஊரு முமக்குச் சொம்பாதி யான்பகிர்ந்து தருவேன்
சொம்பாதி பகிர்ந்துதர வாருமென்று அழைத்தான்

## இலங்கக் கட்டுள் அகப்படல்

துணிந்தழகன் பெருமாளுஞ் சின்னப்பெருமாள் தானும்
கெம்பாம லேநடந்தார்[246] கேடுவருங் காலம்
கெடுமதிகண் தோத்தாதென் றிடுவசனம் பொய்யோ
பொய்யை மெய்யாகச்சொல்லு மந்திரிபின் செல்ல
போதுவார் கேடுகாலந் தூதுவர்முன் செல்லவே
கையிலே வாளுமன்றிக் கட்டியலுங் கையுமாய்
கலங்கிக் கிட்டினார்களந்த இல்ங்கைக்கட்டு தனிலே.

### விருத்தம்

இலங்கிள்ளை கனவுகண்ட இசைந்தது கணியான் சொல்லும்
விலங்கிட நடந்தான்யார்க்கும் விதிவழி மதிசொல் லாதே
துலங்கிய தோளுங்கண்ணும் புருவமுந் துடித்துக் காட்ட
வலங்கொளுஞ் சிலக்கை வீரர் வந்தன ரிலங்கைக் கட்டுள்

### வேறு

இலங்கைக்கட்டு வாசல்வந்த மன்னவரை நோக்கி
ஏதுசொல்வா னின்றுகொண்டு ராசகுல தேவன்
துலங்கக்கட்டி வைத்தசெம்பொன் வைப்புச்செப்பு முண்டு
சூதானத்தி வாரும்வர[247] லாகாதப்பால் நிறுத்தும்
நிறுத்துமடி யேனுமிந்த வீரபாண்டியனும்
நீங்களு மல்லாமல் வேறொருஆள் காகம் வேண்டாம்
புறத்தில் நிற்கச் சொல்லுமென்றா னெல்லாரையும் நிறுத்தி
போயிருந்தார் இலங்கைக்கட் டுபாயமறி யாமல்

உபாயமிட்டு மந்திரிமுன் வைத்தான்வைப்புச் செப்பும்
உடமைகொத்துச் சரப்பளிபொன் முடிப்பதைக்கஞ் சவடி
அபாயமிட்ட கைவளை ( க ) லாணிக் கொத்துக் கடுக்கன்
ஆணிமுத்து மாலையொக்கப் பூணும்வச்சிர வடமும்
வைச்சிருக்குஞ் சொம்பாதி சொட்சமறப்[248] பகுந்தே
வரப்பாத்துக் கொள்ளுமெனச் சின்னப்பெருமா
ளுரைப்பான்
குச்சுக்கட்ட வேணுமென்று மச்சுக்கட்டத் துடங்கி
கோபுரத்தி லேறிக்கொண்டு தீயெரிக்கத் துணிந்தாய்
பரிக்கு மிளமுறைக்கூறு தரச்சொல்லிக் கேட்டதற்கு
பண்டிருந்த வைப்புஞ்செப்புங் கொண்டுவந்து வைத்தாய்
செருக்கிலிந்தச் சொம்பாதி பகிரவந்தோ மில்லை
தேசத்தில் சொம்பாதி யென்றுகேட்க வந்தோமில்லை
பேசவந்தோம் நாங்கள்தலம் வாசம்பண்ணி இருந்து
பிழைக்கத்தக்க சீமைதந்து நடத்திக்கொள்ளு மென்றார்
காசிமன்னர் சின்னப்பெருமாள் பேசுவதைக் கேட்டு
கடக்கநின்ற ராசகுல னடுக்கவந்து சொல்வான்
அடுக்குமொழி சொன்னாலது குடுக்கவல்லோ வேணும்
ஆனாலு முங்களுக்குச் சீமைசொல்லக் கேளும்
வடக்குப் பிறப்பட்டதுங்கள் கருவைநல்லூர் சீமைமுதல்
வலையம்பட்டியாம் பனையூர் வன்னியனார் பட்டி
வன்னியனார் பட்டிமுதல் புலியூர் பெரும்பற்றும்
வாதவநல்லூ ருமக்குச் சேற்றூ ரெங்களுக்கு
சென்னல்விளை செண்டன்குள மானைக்குள முதலாய்
செல்லும்நரிக் குடியுமக்கு வில்லிபுத்தூ ரெமக்கு
வில்லிபுத்தூ ரிளவேந்தல் சிப்பிப்பாறை உமக்கு
வேம்பத்தூரும் வேம்பல்காடும் வீரையு மெங்களுக்கு
செல்லுங் கரிசல்குளமு மணலூ ருங்களுக்கு
சீராசை வீர சிகாமணியூ ரெங்களுக்கு
சிகாமணியூர் நீலிய நல்லூரு முங்களுக்கு
தென்மலையூ ருமக்குச் சாய்மலையூ ரெங்களுக்கு
சகம்பெருகு வளமேவும் ஏழாயிரம் பண்ணை
சாயல்ஊர் நள்ளியுட ஒடைப்பெட்டி சாற்றூர்
சாற்றூரு முறையூருங் கொல்லன்பட்டி முதலாய்
சனமிகுந்த கம்பளத்தார் களமிருந்த மட்டும்
வாய்த்தவெட்டு மாறனூர் வடமேற்கு உமக்கு
வரிசையுட னாண்டிருங்கோ யிருவரும்போ யென்றான்
மந்திரிதன் முகம்பார்த்துச் சின்னப்பெருமாள் சொல்வார்
தெரிவரிய கரிசல்கா டெங்களுக் காமோதான்
தென்காசி யுங்களுக்கு மெங்களுக்கும் பொதுக்காண்
பொதுவல்லோ யிலத்தூரு மிலஞ்சியும் பாவூரும்

புலியூரு மெங்கள் திருக்குத்தாலுமு மெமக்கு
சதிரேறு முங்களுக்குப் பனைப்புளி மேலகரம்
சாம்பவட கரையுடனே புளியறை செங்கோட்டை
செங்கோட்டை யூருடனே ஆரிய நல்லூரும்
சிட்டர்புக ழாரியங்கா மட்டுமுங்கள் சீமை
சங்கதமே விவ்வூர்க்கு வடக்குப் பிறப்பட்டால்
சாய்மலையும் வாதவ நல்லூரு மெங்களுக்கு
ஊரறிய வீரசிகாமணிக் கோட்டை துலுக்கன்குறிச்சி
உங்களுக்குத் தென்கருவை நல்லூ ரெங்களுக்கு
சேரும் வில்லிபுத்தூர் குண்டத்தூர் சாத்தனேரி
தெம்முடுக்கு நாடளவு மெம்முடைய சீமை
சீமைமெய்க்கும் பாடித் திருத்தங்கா லெங்களுக்கு
செயங்கொண்ட நல்லூரு முடன்தேவன் குறிச்சி
காமையக்கம் பட்டியுடன் கடையம்நல்லூ ருமக்கு
கள்ளிம்ஓம நல்லூர் பள்ளிகொண்டான் சீமை
சேத்தூரு மாத்தூரும் மயிலேறிய சேவகனார்
திருப்பரங் குன்றளவு மெங்கள் விருப்பமுள்ளசீமை
பூவலையம் புகழ்மதுரை எங்களுக்கு முங்களுக்கு
பொதுவாக வேயிருக்கு மதுபேச வேண்டாம்
பேசுவ தெல்லாமுமக்குச் சரிப்போ யிராது
பெரியவர்கள் தானல்லவே சிறுபிள்ளைகள் நாங்கள்
ஆசையில்லை யெங்களுக்குத் தேசமாண் டிருக்க
அண்ணர்சொன்ன படிசொல்லும் பின்னஞ்சொல்ல
வேண்டாம்
பின்னஞ்சொல்ல வேண்டாங்காண் என்றுசின்னப்
பெருமாள்
பேசுவங்காண் மந்திரியே இராசகுல தேவன்
என்னசொல்லப் போறானுங்க ளண்ணருட சீமை
எல்லாங்கட்டிக் கொள்ளுமினி வல்லபடி பேசி
பேசுவா ருங்களுக்கு நேசமுள்ள அண்ணர்
பேச்சுக்காமோ மரத்தின்முரண் வாச்சிக்கல்லோ[249] தீரும்
இன்று முடித்திடுவேனா னென்றுசொன்ன வார்த்தை
ஈசர்திரு வாணையிங்கே சத்துநேர மிருங்கோ
அன்றுமக்குச் சொன்னபடி கொண்டுவந்து வைத்தேன்
ஆளுந்திட மாயிருக்கு மீளவிட வேண்டாம்
என்றிவர்க்குச் சொல்வதுபோல் மல்லருக்குச் சொல்லி
எழுந்திருந்தான் ராசகுல தேவன்தப்பிப் போக
தப்பிப்போக வேதுணிந்தான் ராசகுல தேவன்
ஒக்கவீர பாண்டியனைக் கூடவாரு மென்றான்
ஒப்பிவெளி போந்தவர்கள் கதவையிழுத் தடைத்து
ஒட்டுமுன்னே சங்கிலியு மிட்டுப்பூட்டு மிட்டான்
இட்டுப்போட்டு வேறுமொரு சூதானத்தி லிருந்தார்
ஒட்டுக்குள்ளே பட்டுநின்ற சிட்டுப்போ லிருந்தார்
உளவறிந்து சின்னப்பெருமாள் சளமும்வந்து தென்றான்

**விருத்தம்**

அகப்பட்டதறிந்த அழகனுந் தம்பியும் வருந்துதல்

சளமிது வந்துதென்னத் தந்தைதாய் தமைக்கொன் றோமோ
வளர்மனை தீயிட்டோமோ மறையவர் தமைக்கொன் றோமோ
குளமொடு கூவல்தூர்த்துக்[250] கொடிய பாதகஞ் செய்தோமோ
இளமுறை யல்லோ கேட்டோ மிதுசளம் வந்துதென்றான்

**நடை**

சளமல்லவோ நமக்கெப்போது மந்திரி வார்த்தை
முற்றுஞ் சர்ப்பினையென் றெண்ணாம லிப்போதுவந் தகப்பட்டோம்
கிளையுடன் மந்திரி தன்னையுங் கொல்லத் துணிந்தான்
அன்று கேட்டீரோ சாய்மலைவீட்டி லகப்பட்டுப் போனோம்
இளையவ னானாலு மென்புத்தி கேளாமல் போச்சே
நமக்கிப்படிச் சாக விதித்தவிதி செய்த மாயம்
வளையும்படி விட்டேன் வல்லமைபாராமல் போனான்
சும்மாமன்னன் குலசேகரனல்லோ காட்டிக் கொடுத்தான்
அந்தக் காலனைப்போல் வந்தான் ராசகுல தேவன்வார்த்தை
ஓட்டம் நடையுமாய்க் கூட்டிவா யின்னேர மென்றான்
எனக்குள் மந்திரமாய்க் குலசேகரர் சொன்னா ரென்றார்
தேட்டிலே[251] கோடி திரவியமுள்ளது பாதி
பின்னுஞ் சீனப் பதைக்கஞ் சரப்பளி பட்டாடை பாதி
நாட்டிலே பாதி பகிருவேனா னுள்ளபோதே யென்றான்
நம்பிக்கை யென்றல்லோ சொம்பகிர்ந்து கொள்ளவந்தோம்
( நடுத் ) தானோ ராசகுல தேவன்வார்த்தை - நானும்
நம்பிக்கை யென்றல்லோ சொம்பகிர்ந்து கொள்ள வந்தோம்
தடுத்தானேதம்பி சளம்வருமென்று முன்னே - நானும்
சத்தியஞ் செய்வேன் சர்ப்பினை செய்யா னென்றே
அடுத்து வணங்கி யிளமுறைக் கூறல்லோ கேட்டேன்
அதுக்கறைக்கு ளடைத்தெமைக் கொல்லவு மாண்பிள்ளை தானோ
ஆணல்ல வென்று அழகன்சொல் தம்பியுஞ் சொல்வான்
வீணிலாட்டைத் துடர்ந்தபுலிபோ லகப்பட்டோ மைய்யா
பூணுந் திரவியம் வேணதுதேடிக் கொள்ளலாம்
உயிர்போனால் திரும்பாது வீணிலகப்பட்டோ மய்யா
சாண்காட்டுக்குள்ளே முழக்கம்பு வெட்டுவான் பாவி - அவன்

சர்ப்பினை செய்வானென் றப்போதே சொன்னேனே அய்யா
வீணுக் குயிரையிழக்கத் துணிந்தோமே அய்யா
விசந்தோன் றினாப் போலே தோன் றினான் மந்திரி நாட்டில்
நாட்டுங் குலசேகரப்பெருமாள் மன்னர் நம்மை - அந்த
நட்பான தேவிமாரைக் கையிற்பிடித்துக் கொடுத்து
ஊட்டி வளத்தந்தத் தாட்டிமைகண்டவன் கொல்லான்
இதுக்கொப்பவன் தம்பியும் மந்திரியுமிட்ட சூட்சம்
பூட்டிய வாளுமென் கையிலிருந்தாக்கா லையா - உம்மைப்
பூலோக மாள அரசுக்கிருத்துவே னய்யா
காட்டிக் கொடுத்தது தெய்வம் நமக்கில்லை அய்யா
கையிரிக் கட்டியலுக் குள்ளிருக்குது கள்ளவா ளென் றான்
என் றுங் கையில் வாளெடாமல் தடுத்தார்க ளென்றே
இளையவன் கையில் வாளெறிட் டழகன்கை கொடுத்தான்
கன் றாமல் மந்திரி சர்ப்பினை செய்தா னென் றார் - வீட்டுக்
கதவை அடைத்து நாராங்கியிட்டதுங்[252] கொல்ல

உடைவாளின்மையின் உளம் வருந்துதல்

கொல்லென்ற சத்த மறுபது மல்லருங் கேட்டு - அந்தக்
கூட்டைத்திறந்த புலிபோலே வெளியிலே வந்தார்
நில்லடா மல்லரே நாயெனை வெட்டியா ளும்மை - இன் று
நிட்டூர மாகவே விட்டவனார் சொல்லீர்
வெல்லவே சொல்லி விருந்திட்டுச் சந்தனம்பூசி - ஊரும்

விட்டும்மைக் கொல்லவே விட்டவன் மந்திரியென் றான்
அல்லாமல் கட்டியலென்ன செய்யு மென் றடந்தார் - அந்த
அழகன்பெருமாள் கையில் கள்ளவாள் கண்டஞ்சிநின் றார்
நின் ற இருபேரும் ராமனுந்தம்பியு மென் றார் - வாளை
நெட்டூரன் மந்திரி கட்டியலென் றானே யென் றார்
என்றென்று சொல்லி அறுபதுமல்லரும் நின் றார் - தம்பி
இந்தமதிலை இடிக்கிறேன் போமென் று சொல்வான்
வென் றின் று போக விருந்துண்ட மல்லரையெல்லாம் - இனி
வெட்டுவன் பாரென் றழகன்சொல் தம்பியுஞ் சொல்வான்
இன் றிவ னேவின மல்ல ரறுபது பேரும் - வந்து
எதிர்த்துப் பொரும்போதி லெப்படிநெஞ்சு தரிப்போம்
தரித்தோ மொருத்தி வயத்தி லிருவர் பிறந்தோம் - அந்தத்
தன்னிழல்தன்னை விட்டப்புறம் போமோ சொல்லய்யா
கதிர்த்த சிலம்பமு மல்லடவு மிகக்கற்றோம் - நாமுங்
கையினில் வாளை யிழந்தபின் புத்தியு மத்தோம்
விதித்த விதியால் வெறுங்கையா லுள்ளேஅடைத்தே - இந்த

வீட்டையும் பூட்டி வினையையும் மூட்டிவிட்டானே
ஒருத்தன்தான் போதாதோ இத்தனைமல்லரைக் கொல்ல - இன்று
உமக்கும் நமக்கு முடைவா ளுதவாமல் போச்சே

வெண்பா

போச்சேபு கழோடும் புத்திகெட்ட மந்திரியால்
ஆச்சே அரசுக் கவகீர்த்தி - ஏச்சான
தெங்கும் பரந்தோங்கி யெவ்வுலகு முட்டியதே
தங்குமோசர்ப் பினைசெய்தக் கால்

நடை

## மல்லருடன் நடந்த போர்

சர்ப்பினைசெய் தொருமித்தவன் விடுமல்லர்
தட்டினர் துடைகளைத் தட்டினர் முறைமுறை
தந்திர முடனே யெதிர்த்திடு மெனவே
சக்கர நிகரென வட்டனை புரிவார்
பிறப்பட் டொருபதம் வைத்திரு கரமும்
சுத்துவர் முடுகுவர் மிதித்திடு முடலை
வளைத்தான் சிலரை உதைத்தனர் காலால்
எயிறு கடித்தனர் குலிலி முழக்குடன்
இருகண்ணாற் பொறி சிதற விழித்தான்
இருவ ருயிர்ப்பெலி நமனுண்ண வெட்டி
முதலோர் களப்பெலி யிடுவோ மெனச்சொல்லி
தயிரு மத்தென நிலைகுலையத் திரிவார்
இறுதி விளைத்திட யிடியின் முழக்கொடு
தறுகண்[253] மதப்புலி அழகனும் வெத்திகொள்ள
மல்லரை விட்டுக் கொல்ல நினைந்தே
நல்ல தெனப்பல் லிதழது கடித்தே
மந்திரி வந்திலனெனவே சிந்தை கொதித்தான்
ஒல்லையி லெழுந்தான் சின்னப் பெருமாளும்
நல்லுயித் தடம்புயத் திடை புடைத்தே
உருக்கிளர் வரைபோல் வரு மல்லரையே
முடுக்கின னந்த மல்லரு மெதிர்த்தார்
எதிர்த்திடு மல்லர் சினத்தொடு வரவே

## சின்னப்பெருமாளிட்ட போர்

கொதித்தனன் றம்பி சின்னப் பெருமாளும்
இவர்க்கிறுதியை விளைப்பேனென் றிதழையு முறுக்கி
எனச்சொல்லி நடந்தவர் தமக்கெதிர் நடந்தார்
விதிர்த்திடு மல்லர். கதிர்த்தொழில் பகவார்
மற்போர் விளைத்தனர் இளைத்தனர் சிலபெயர்
மிதித்தன ரொருத்தனைக் குடலது சரிய
எதிர்கொள்ளு மொருத்தனைப் படவடித்தான்

அடித்தங்கொடு துவைத்திட மடிவார்
அடித்த குடல்சரிய இரத்தமோ டுருளுவார்
அடித்தே ஒருத்தனைப் பிடித்தோர் பிடியால்
அடிக்கழுத்தொடு முறித்தெடுத் தெறிவார்
பிடித்தே யொருத்தனை நிலத்தொடு மறைவார்
ஒருத்தனைச் சிரம் நெறித்தயல் விடுவார்
பிலத்திடு[254] மல்லர் குடலது சரிய
கலக்கினர் தம்பி சின்னப் பெருமாளும்

சின்னப்பெருமாளின் மரணம்

சினத்துரமே விளைத்துட லுளைவார்
திடுக்கிடு வார்க ளடுக்கவும் வாரார்
பயப்படுவார் மல்லர் பல்கடித் தெதிர்த்தே
கடித்திடு மல்வ ரறுபது பேரில்
வதைத்தன ரிருபது பேரொரு களத்திடை படவே
இருபது பேர்பின்னுந் திடுக்கிட நடந்தார்
வளைத்தனர் தம்பி சின்னப் பெருமாளும்
வளைத்தனர் மல்ல ரொருத்தன் கைதனிலே
சின்னப் பெருமாளுடன் முடி யகப்படவே
மதப்புலி அழகன் கள்ள வாளாலே
பிடித்திடு மல்லன் உயிர்குடித் திடவே
களைப்பொடு சினவான் சின்னப் பெருமாளும்
பிடித்தடி நாவுற் கரமெடுத்து
கதிப்புடனே[255] வலித்துயிர்[256] மடிந்தான்
அதைக் கடைக்கண்ணாலே அழகனுங் கண்டான்
அடுத்தடுத் தெதிர்பிடித்திடு மல்லரை
முடுக்கி[257] வெட்டினான் சிறுகள்ள வாளாலே
மதித்திடு மல்லர் குடற்குறை படுவார்[258]
மணிக்குட லத்திடச் சிலர் விழுவார்
அடித்து... ை.. காலறச் சிலர் விழுவார்
அறுத்திட மல்லரை நெருக்குவர் சிலபெயர்
உடற்குறை களையெடுத் தெறிவார் சிலபெயர்
உயிர்ச்சிரத் துடைகர மற்று விழுவார்
அடித்திரு மென முழக்குவர் சிலசிலர்
அடித்துடைகளை யெடுத்தெறிவார் சிலபெயர்
அறுபது கருமலை நிகரென மல்லர்
அறுத்தன ரொரு களத்திடை மடிந்தார்

அழகன்பெருமாள் புலம்பலும் அடைந்த மரணமும்

ஒளித்தா னுயிர் பிணக்குகை தனிலே
ஒளித்திடு மல்ல னொருத்தனும் பிழைத்தான்
பிழைத்தொரு மல்லன் கிடப்பதை யறியான்
புவிக்கொரு கடலனை யவனழகன்
பின்பிறந்தா னிறந்தா னெனவே
பெருந் துன்பமுத் துளைவானாம்
உளைவா னழுவா னிலநீதனில் விழுவான்

எழுவான் மதகரி போலே திரிவான்
தழைத்திடு முயிர்த் தம்பியை யெடுப்பான்
முகத்தோ டணைப்பான் கரத்தோ டணைப்பான்
பொருப்புப்[259] புயத்தடம் புயத்தோ டணைப்பான்
நெருப்புப் புரள விழிப்பா னவனும்
நெருப்புறு புழுப்போல் துடிப்பா னவனும்
முருக்கிதழ்[260] கடித்தே யெயிறுகள் கடிப்பான்
நிலவெளித் தம்பி தன்னுடனே
செல்வே னென்பான் செல்வ னழகன்
பொருப்பென விழுவான் வலம்வருவான்
பொரு மதகரிபோல் நிலத்திடை விழுவான்
பூண்டான் பழி குலசேகரன் புவியாண்டான்
ஆண்டகை யெம்மை நினைத்தே மீண்டுதான்
எங்களை வரவழைத்தா னென்பான்
அடுத்திடு மவனுயிர் குடித்திடுவேன் கைநொடிக்கு
முன்னென்பான்
தீண்டாதவன் தீண்டாதவன் தீண்டின முடியென
மாண்டா னுயிர்த்தம்பி யென்றுளைவான்
திகைப்பா னுயிர்த்தம்பியை யெடுப்பான்
முகத்தோ டணைப்பான் கரத்தோ டெடுத்தே
அணைப்பான் சின்னத் தம்பியை வளத்தோம்
மணக்கோலம் கண்டே னில்லை யென்பான்
துணைப்பூங் குழல் மங்கைய ரினிமேல்
சிணப்போது யிற்தரியா தென்பான்
சோர்வான் வலம் வருவா னவனும்
பெருகுங் கண்ணால் கண்ணீர் சொரிய
நின்று வாழ்கில் மன்னர் வாழ்வும்
கனவாகி முடிந்தது என்பான்
நாட்டில் கணியான் சோதிடங் கெட்டிக்கார னென்பான்
வினையானது சூழ்ந்திடி லொன்றையும் நினையாது
நினையாது மனந்தனி லென்பான்
வெல்வதுந் தோற்பதும் விதிவருகில்
விலக்கினும் நில்லா தென்பான்
நில்லென ஒருசெங்கை குவித்தே
வல்லையி[261] லொரு கணியான் விலகவும்
நின்றே னில்லை தம்பியைக் கொன்றே னென்பான்
வல்லமை யுள்ள தம்பி பகர்ந்திடும்
சொல்லையுங் கெணியாது நடந்தேன்
மனையாள் சொன்ன வார்த்தையுங் கடந்தேன்
வினைதா னென்பான்
தானே சாய்மலை தனில் மந்திரி
மேனாள் வந்தான் வினையா னென்பான்
அவனுயி ருண்ணத் தம்பி துணிந்தான்
அதை விலகின தென்ன பிழையென் றழுதான்

மானாகரன் குலசேகரன் சொல்ல
தானா பதியாய் வந்த மந்திரி
மறையோர் மேலாணை மறந்தது
முறையோ யென்பான்
முறைகேடு செய்தவ னுயிரைக்
களைவே னென்பான்
மூத்தவன் இளையவன் திருமுகத்தைப்
பாத்து நின்றயர்வான்
உறைவோமென வஞ்சக மில்லை
இளமுறை யானதுந் தந்தாரில்லை
இனி யூராள்கிலோ மெனவே
இறந்தீர் தம்பி நீரென்பான்
நீராவியில்சூழ் வீர சிகாமணி
ஊர்தனிலே நீர்செய்த வல்லமை
நெஞ்சினில் வைத்தல்லோ செய்தார்
வஞ்சக மென்பார்
நாராசமுங் கதலியு மறவெட்டும்
போர்வாள் புலியிறந்தா னென்பான்
நலந்திரு யிலங்கத்தி லடைத்தே
நமக்கிது வரமுறையோ முறையோ
என்று புலம்பிடுவான்
புலம்பிடுவான் புலம்பிடுவான்
நிலங்குலுங்கிட விழுவான்
பூட்டியமந்திரி யல்லவோ பழிமூட்டின தென்பான்
துங்கிய திருமுகத் தொளி மழுங்கிடும்
மெலிந்திடு நயன மயர்ந்திடும் வேர்க்கும்
சோர்ந்திடு முயிர் வீழ்ந்திடுந் தம்பியை
நொந்து நின்றி ளைக்கும்
நானழைத்திடத் தம்பி நீர்முகம் பார்க்கில்
பிழைத்தன னுயிர்த்துணைவா யென்பான்
அந்த விதியோ நில்லே நில்லேன்
வந்தே னென்பான் மன்ன னவனழகன்
தழைத்திடு வானை யவனோடு செல்ல
நினைப்பவ னினி யுரைப்பதே னெனவே
சிறுவாள் தன்னைப் புவியிடை நிறுத்தினன்
அழகனு மனத்துயர் கெடவிழுந் ததில்மடிந்தான்

**விருத்தம்**

## அண்ணன், தம்பி, மல்லர் இறந்ததை இராசகுலதேவன் காணுதல்

*மடிந்தனரே சின்னப்பெருமாள் மணிநாக்கை வேருடனே*
*பிடிங்கினரே வாள்முனையில் வீழந்தழக னுயிரிழந்தான்*
*கடுந்தேவர் புடைசூழக் கன்னியர்கள் மாலையிட*
*நெடுஞ்சோலைக் கற்பகத்தி னிளவரசு வீற்றிருந்தார்*

**நடை**

*வாழத் துணிந்த மன்னர் தாழ்வுற் றுயிரிழந்து போனார்*
*எ.. ன வாசல் தனைத்திறந்து ராசகுலனும் வந்து*
*பாத்தான்*
*வேழப் பிணங்களென்னச் சூழக்கிடந்த மல்லர்நடுவே*
*பட்ட மீனக்கொடி மன்னவர் மேனிக்கொரு வடுவுங்*
*காணார்*
*காணத் தகுவதெல்லா மாணுக்கழகன் கள்ளவாளால்*
*மல்லர் காலற் ( றது ) மிரு தோளத்ததுவு மிகக் கண்டார்*
*நாணித் தலைகவிழ்ந்து காணக்கிடந்த சின்னப்பெருமாள்*
*மணிநாவைப் பிடிங்கியதுங் கோவித்திறந்ததுவும்*
*பாத்தான்*
*பார்த்தா னழகன் முனைகூர்த்த கள்ளவாளில் வீழ்ந்தான்*
*எதிர்ப்பட்ட படுகளமுங் கிட்டி யருகுநின்று பார்த்தான்*

## இராசகுலதேவன், வீரபாண்டியனின் உரையாடல்

*இரத்தக் குருதிநெடு நிற்புறமிசை கிடந்த மல்லன்*
*கொன்றதில்லை யிவரையென நின்றுநிலை தளன்று[262]*
*சொல்வான்*
*சொல்வான் மந்திரியும் வீரபாண்டியனும் வந்தான்*
*நல்லகூட்சி நினைந்திருகண் காட்சி கொடுத்தனையே*
*யென்றான்*
*வீரரிவரை வெல்ல ஆருமொருத்த ரில்லையென்பான்*
*எதிர்வெம்பு புலியல்லவோ தம்பிசீவலவ ரென்பார்*
*என்பா லிடர்விளைத்த வன்பா லுயிரிழந்தா ரென்பார்*
*சற்றும் இணங்கினார்க ளில்லை பிணங்கினார்க*
*ளிவரென்பார்*
*அன்பா லிவன்மனதில் வம்புசிறிது மில்லையென்பார்*
*ஆணி லழகனிவன் வீணி லுயிரிழந்தா னென்பார்*
*பான்ற பொறியிலிரு கான்றபொறி புகுந்தாப்போலே*
*அகப்பட்டா ரிவரிலங்கைக் கட்டிலென்று நின்றுநகைத்தார்*
*சேனைக் கடலுழக்கி யானைத்திரள் பிடித்தவீரர்*

அவிசேகத் தலைவரிந்தச் சாகத்துடி துடித்தாரென்றான்
என்று மந்திரியும் வீரபாண்டியனும் நின்றான்

### ஒளித்திருந்த மல்லன் கூறியவை

எல்லைதனி லொளித்தமல்ல னொருவனையுங் கண்டான்
மன்றல்மாலை புனை வென்றியழகன் கள்ள வாளால்
அன்றுமடிந்த பிணத்தினி லடைகிடந்த மல்லனன்
றெழுந்தான்
எழுந்தமல்ல னெதிர்விழுந்து தெண்டனிட்டு வணங்கி
அந்த ராசகுலனுடனே பேசுவா னடந்தசெய்தி
அழிந்து சமரிலுயிர் பிழிந்து குடித்திடுவோ மெனவே
மல்லரடர்ந்தா ரிருவரையுந் துடர்ந்தார் மனதிலே
நொந்து- வெம்பி
வெம்பு புலிபோலந்த தம்பிசீவலவர் சீறி
எதிர்விட்ட மல்லரெதிர் பட்டாரிருபது பேர்மடிந்தார்
தம்பிதன்னை (மற்) றத்தும்பி போலெதிர்த்த மல்லர்
இடசாரி திரிந்து வலசாரி திரிந்துமெல்லப் பிடித்தார்
பிடித்தான் சீவலவன் முடித்த சிகையை யொருமல்லன்
கண்டான் பெட்டியு மூடியும்போல் வெட்டினா
னவனையழகன்
பிடித்த மல்லனுயிர் குடித்தானழகன் கள்ளவாளால்
கையால் நாக்கை வாங்கவுயிர் போக்கினா னழகன்தம்பி
தம்பிபட்டா னென்று சம்பியிட்டா[263] னில்லையழகன்
எதிர்கண்ட மல்லர்களைத் துண்டமாக வெட்டிவிட்டான்
செம்புக் கட்டியலைக் கம்புக்கட்டி லென்றிருந்தோம்
அதில்திருத்துங் கள்ளவாளென் றொருத்ததறியார்களே
அய்யா
ஒருதரத்து மல்லர் அறுபதுபேரு மொக்க
உள்பட்டனர்க ளினி அவர்கள் பட்டாரில்லை அய்யா
பருத்த மல்லர்களி லொருத்தரில்லை யுயிர்மடிந்தார்
எதிர்படர்ந்த பிணத்திடையே கிடந்தென்னுயிர்
பிழைத்தே னய்யா

அய்யா மல்லரெல்லா மெய்யாய் மடிந்ததற்பின் னரசன்
அம்புரத முகத்தம்பி சீவலவர் தம்மை
மெய்யோ டெடுத்தணைத்துக் கையோடுறத்
தழுவிக்கொண்டான்
அந்தவேந்த னழகன் கள்ளவாளில் வீழ்ந்திடவுங் கண்டேன்
கண்டே னிவர்க்குநிகர் மண்டலாதிபர்க் குள்ளில்லை
என்றுகண்டு நின்றேனிப்போ மண்டலத்தில் மன்னரில்லை

### இறந்தாரைப் புதைத்தல்

புண்டரீக முக மண்டலீகர் பட்டதெல்லாம்
ஒருபூத ரறியொண்ணாது நீயறிந்த செய்தியெல்லாம்

என்று மல்லனுட னின்றுவாய்மை பலபேசி
பின்னும் ராசகுல னுரைப்பான் காசிமன்ன ரறியால்
கொன்ற மன்னவரைப் பின்னுஞ் சூதானத்தி லடக்கி
மிகக்கூறு மென்றுநின்ற வீரபாண்டியனோ டுரைப்பான்
உரைத்தபடி முடித்த துரைக்குந் தானாபதி நீயே
உனக்கொத்தபடி செய்யென்றான் பொத்தை மல்லனை முன்னழைத்தான்
அருத்தி லகத்தில் மண்ணில் இருத்தக் குழிசெய் யென்றுரைத்தான்
அந்த... புலிகளைச் சூதானத்திலே யிருத்தியே விடுத்தான்
விடுத்த மல்லர்களை யடுத்த குழிதனிலே புதைத்தான்

## மந்திரியும், வீரபாண்டியனும் மனை திரும்புதல்

வெளிவிட் டிலங்கைக் கட்டுவாசல் தனைத் திறந்துவந்தான்
எடுத்த பகைமுடிக்கத் தொடுத்த ராசகுல தேவன்
உனக்கின்று காசிதந்தே னென்றான் வீர பாண்டியனும்
வீர பாண்டியனும் பார மந்திரியை நோக்கி
நல்லவெட்டு வாச்சுதென்றே யிட்டகூட்சி நல்லதென்றான்
ஆர்நகை யுடையமார்பன் ராசகுல தேவன்
அய்யா அன்று கறுப்பெடுத்தே னின்று வெறுப்பெடுத் தேனென்றான்
கறுத்த காலனை முன்னுதைத்த நாயகர் குற்றாலர்
கண்ணிற் காட்டுவார் வினையை மூட்டுவார்க் கிறுதி யென்றான்
வெறுத்த பகைமுடித்து நிறுத்து மனமகிழ்ச்சியுடனே
அந்தவேந்தர் இருவரும்போய் வாய்ந்த மனைதனில் வீத்திருந்தார்

## விருத்தம்

வீத்திருந்த மந்திரியும் வீரபாண்டியனு முயிர்
தோத்தழிந்த மன்னவரைச் சூதானஞ் செய்தகன்றார்
நேற்றிருந்தா ரின்றிருக்க நிட்செயமோ[264] என்பதெல்லாம்
மாற்றலர் கேசரியான் மன்னவர்பா லறிந்தோமே.

## வேறு

## சாய்மலை சென்று ஒட்டன் உண்மையுரைத்தல்

அறியார் குலசேகரப் பெருமாள்
அழகனையுந் தம்பியுங் கொடுபோய்
குறியாக குவாரிலங்கத்தி லடைத்தே
கொன்றதுவு மந்திரி புதைத்ததுவும்

புதைத்தன ரதை மறைத்தனர் போனார்
புதைத்ததையு மோரோட்ட னறிந்து
இதைச்சொல்லு வேனெனக் கடிந்தோடினான்
இமைக்குமுன் சாய்மலை தனில்வந்தான்
வந்தான் குடியான பேருடனே
மன்னவ னழகன் பெருமாளையும்
சந்திரகுல சின்னப் பெருமாளையும்
சதித்தன ரிலங்கத்தி[265] னுள்ளே
உள்ளே மல்லர்தன்னை விட்டுக் கொன்றார்
ஒருவரு மறியாதே புதைத்தான்
விள்ளாமலே[266] வீர பாண்டியனும்
இராசகுல தேவனு மென்றான்

## செய்தியறிந்த வெட்டுமாறனும் சாய்மலை நாட்டாரும் தென்காசி வரல்

என்றவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு
இமைக்குமுன் வெட்டு மாறனு மறிய
சென்றுசொல்லு மென்றா ரோலையுமாளும்
சீக்கரத்தி லனுப்பினா ருடனே
உடனே வெட்டுமாறனும் படையும்
ஓடினார் தென்காசியை நாடி
திடமுள்ள சாய்மலை நாட்டாரும்
சென்றனர் மறுநாள் விடியுமுன்னே

## குலசேகரர் அறிந்ததும், கூறியதும்

முன்னேஒரு தூதனைச் சொல்லவிட்டார்
முடுகியே குலசேகரர்க் குரைப்பான்
மன்னாவந்தச் சாய்மலை நாட்டாரும்
மவுலியும் வெட்டு மாறனும் படைவாரான்
படுமத களிற்றானையும் படையும்
பாய்பரிகளு மொருபுடை நெருங்கவே
நடையோட்டமா யோடியே வந்தார்
நயினா ரிடைக்காலிலே யென்றுரைத்தார்
உரைத்தான் குலசேகரர்க் குரைப்பான்
ஒருகோடி படைகூட்டி வந்தாராம்
பரி யானையுஞ் சாய்மலை யாரும்
பகைத்தே வெட்டுமாறனும் வாரான்
வாரா னென்முன் மாவுலியென்றான்
வந்தா லென்ன சந்துகள்[267] பேர்ப்பேன்[268]
நூறாயிரம் படை கோடி வரினும்
நொடிக்குமுன் கொன்று குவிப்பே னென்றான்
குவிப்பே னவர்தலை யொருமலை போல
குவித்தே விடுவேன் ஆடுகள் பெலியிடுவேன்
கவிப்பொன் மணிமுடி யொருநொடியில்
கயற்றாறினி யழகனுக் கல்லவோ

அழகாய்வரு மருவலர் காவலன்
அல்லவோ தம்பி சீவலதேவர்
ஏ... யெதிர்வரு படையும்
இவர்கள் கரங்களா லடபட மடியும்
அதிசெய முள்ள சின்னப் பெருமாளும்
அழகனும் படைவரப் பொறுப்பார்களோ
மதிகுல மன்னவ ரிருபேரையும்
மந்திரியைக் கடிதா யழையென்றான்

## தம்பியர் முடிவறிந்த குலசேகரர் புலம்பல்

என்றுரைசெய்யு மளவினில் தூதன்
இனிமேலொரு பிறவியில் வருவார்
கொன்றானிவன் குழிதனில் புதைத்தான்
குழிதனைத் திறந் தெடுத்திடு மென்றான்
எடுத்திடு மென்றா னரசனு மயர்ந்தான்
இராசகுல தேவனை நோக்கி
கெடுத்தனையே அழகனை யெனவே
கிளந்திரு முகத்தினி லறைவான்
அறைந்தான் திருமுகம் வேர்த்தான்
அயர்ந்தான் நெடுமூச்சு வந்திடவே
வெறுங் கூடென வுயிர்வலம் வருவான்
விழுவானடி முறிந்திடு மரம்போல்
மரமென யிருந்தேன் இதை யறியேன்
வழிவழி யிதுபழி சுமந்திடுமே
இருவரு மொருகளத்திடை யிறந்தனரோ
இவர்களுக்கிது வரமுறையோ
மதியுடையவர் தம்பி யல்லவோ
மறுத்தல்லவோ கெடுத்தே னென்பான்
புரவலர் மருவல ரெதிர்சீறும்
புலிதனை இவர்சதி செய்தா ரென்பார்
சதிருட னிவர்தமை வளத்தேனே
சதித்தன ரிவர்சதி செய்தறியேன்
போதுவர்மன்னவர் பழியும் போமோ
பூவலைய மிவர்தாமு மாளுவாரோ
வாளெடுத்தவர் வரிலிது வருமோ
மறுத்தல்லோ கெடுத்தே னென்பான்
நாளடுத்திது மந்திரி தனையும்
நரபெலி யிடுவே னென்பான்

## இராசகுலதேவனின் மறுப்பு

என்றுசொல்லு மரசனை நோக்கி
இராசகுல தேவ னுரைப்பான்
நன்றா யவரைத் தம்பிமா ரென்றீர்
நடத்திய கவட மொருத்தரு மறியார்
ஒருத்தரு மறியாமல் நடந்தார்
உமக்காக முன்னழைத்திடப் போனோம்

கருத்துடனே வந்து புகுந்து
கள்ளவெட்டாய் வெட்டின தறிவீர்
அறிந்திருந்து பகையை வளத்தீர்
அவராலுயி ரிறந்திட யிருந்தீர்
சிறந்ததம்பி வீர பாண்டியனார்
செருத்தாரது[269] புத்திதா னென்றார்

### இராசகுலதேவன் இறப்பு

என்றெதிர் சொல்லி நின்ற மந்திரியை
என்ன சொன்னாயென்று மன்னவனும்
வென்றி வடி வாளுறை கழத்தி
வெட்டினா னிரு கூறாய் விழுந்தான்
விழுந்தான் மந்திரி யுயிர் மடிந்தான்

### குலசேகரர் முடிவு

வேந்தனும் நொந்தே யருகுநின்ற
அழிந்திடுமே புத்தி வீர பாண்டியனார்
அரசாளவோ துணிந்து நினைந்தாய்
நினைந்தா யினிநீ வாழ்ந்திடுநாள்
நில்லெனத்தம்பி மாருடன் செல்வேன்
முனிந்தாவதே னுன்னையு மெனவே
மொழிந்தானிலம் விழுந்தெழுந் திருந்தான்
இருந்தாவதென் துணைவரை யிழந்தேன்
என்பான்வெகு துன்பமுத் துழல்வான்
பொருந்தார் நன்னகர் ( புகழ் ) ந்திட வாழ்ந்தேன்
பொல்லாதவ னல்லவோ யென்பான்
அல்லாம லுலகங்கைக் கொள்ளுமோ
அரனே பரனே சுரனே என்பான்
வில்லாளரை வீண்குலை[270] புரிந்தார்
விடுமோ பழவினை யென்னையும் விடுமோ
விடுவே னுயிரென்று துணிந்தான்
அந்தவேந்தன் போனதை யொருவருங்காணார்

### வீரபாண்டியன் நாடுவிட்டுப் புறப்படல்

காணான் றம்பி வீரபாண்டியனும்
கருத்தாய் நெஞ்சுணர்வுட னாய்ந்து
நானே யிந்தப் பழியுடன் பாவமும்
நன்றாகவே கைக்கொண்டே னெனவே
கொண்டே னின்று பழியுடன் பாவமும்
கோதாபுரித் தீர்த்தங்க ளாட
சென்றே யின்று சிவாலயந் தொழுது
சிவபதம் பெறலா மென்று நினைந்து
தென்காசிக்கு மன்னவ னான
செகவீர பாண்டியன் றானும்
நன்காசிக்கு வழிதனைத் தேடி

நடந்தான்விதி துடந்தி[271] யெனவே
போனான் றம்பி வீர பாண்டியனும்
புரவலன் வெட்டுமாறனும் படையும்
குவிந்திடும் படையுடன் வெட்டுமாறன்
கொண்டா னுடனே தென்காசி நாட்டில்

வெண்பா

முற்பகை செய்தான் பிறர்சூடுந் தன்கேடும்
பிற்பகைகாண் பேனென்னும் பெத்திபோல்[272]-புற்புடைய
மன்னவர்க்கு இறுதிவைத்த மந்திரியும் பிற்பகைகாண்
பின்னா ளிறந்தான் பெரிது

நடை
வேறு

சின்னத்தம்பி விளையாடப் புறப்படல்

பெரிய மன்னவர் வரச்சொன்னா ரென்றுமுன்
பேசுமந்திரி பின்சென்ற மன்னவர்
எண்ணமத்தங்[273] கிருந்தனர் தேவிமார்
இருவர் செய்தி ஒருவருங் கேட்கிலார்
தேவிமா ருடனே சின்னத் தம்பியும்
சென்ற மன்னவரும் வழிநாடியே
ஆவலோ டிருந்த சின்னத்தம்பிதான்
அண்ணர் பட்டிடுஞ் செய்தி யறிந்திலான்
அறிவாளன் சின்னத்தம்பி விளையாட
ஆயுதப்பட் டொருமித்துச் செல்வனாம்

சின்னத்தம்பியை அணி செய்தல்

சறுகாத முனைவாங்கி இறுக்கியே
தாதிமாரட்டுக் கச்சையுங் கட்டினார்
கட்டினா ரொட்டியாண மிலங்கவே
காலுக்கு விருதண்டை யணிந்தனன்
இட்டதண்டைக் கிணங்கச் சதங்கையும்
ஏத்தசெம்பொற் சிலம்பு மணிந்தனர்
அணியு முப்புரி நூலணி மார்பிலே
ஆணிமுத்து மணிவடஞ் சாத்தினார்
அணியாத பதைக்கப் புலியுகிர்
தாலியும் படையோதப் புனைந்தனர்
புனைந்துசீனச் சரப்பளி பூட்டினார்
பொட்டு நெத்தியில் பட்டமுங் கட்டினார்
வளர்ந்த நீளக் குடிமீ திருத்தியே
வாங்கிச் செம்பொற் சிகைதாடுங் கட்டினார்
சுத்தநீலச் சிகைதனைக் கட்டியே

துய்ய சந்திர காவி யுருமாலை
மாலையிட்ட மணிமார்பன் கையிலே
வச்சிரப்பொற் கடையமு மிட்டனர்
கட்டழக னெனுஞ் சின்னத் தம்பிக்கு
காதுக்குக் கொத்துக் கடுக்கனு மிட்டனர்

## கம்புளிக் கிடாயை அணி செய்தல்

கொட்ட மிட்டுவருஞ் சின்னத் தம்பிக்கு
கொண்டுவா கம்புளிக்கிடா யென்றனர்
கம்புளிக்கிடாய் கொம்புக் கிணங்கவே
காரிரும்பு மலுக்குங் கிலுங்கவே
செம்பொற் பட்டமும் நெத்திக்குக் கட்டினார்
சீனப்பட்டு முகவெட்டுங் கட்டினார்
கட்டினார்கள் கழுத்துக் கிணங்கவே
கவடி பூட்டிய வீர சதங்கையும்
இட்டவீர சதங்கைக் கிணங்கவே
இரட்டினக் கடிவாளமும் பூட்டினார்
சென்றுதான் சின்னத்தம்பி யிருக்கவே
செம்பொற் சேணமுங் கல்லணையும் வைத்தார்
கொற்றத் தங்க வடிவு மிலங்கவே
கொத்துச் சல்லி இருபிறங் கட்டினார்
கட்டினார் கம்புளிக் கிடாய் முந்திய
கால்கள் நாலுக்கும் பொற்றண்டையு மிட்டனர்
இட்டுங் கம்புளி கிடாய்தன் முன்னே
ஏறு மென்று கொடுவந்து விட்டனர்

## சின்னத்தம்பி வீதி உலா

விட்டகம்பளிக் கிடாய்தனி லேறியே
வீரனாஞ் சின்னத்தம்பிப் பெருமாளும்
ஏறினான் கையிலுடைவாள் பிடித்துக் கொண்டு
எட்டுத் திக்கிலுஞ் செல்ல விடுவானாம்
செல்லப் பிள்ளையெனுஞ் சின்னத் தம்பிக்கு
சின்னச் சேவகர் வெஞ்சாமரம் வீச
பல்லக்குத் துரைமக்க முன்செல்லவே
பரிசை தன்னைப் பிடித்தொருவன் வர
பிடித்தவ னோடரசன் மகன்செல்ல
பின்னுமுன்னும் விரைந்தோட்டன் செல்லவே
கொடிப்பிரம்பு பிடித்தொரு கட்டியம்
கூறிக் கட்டியக்காரன் முன் செல்லவே
செல்லு வீதியில் செந்தூ ளெழும்பவே
தெருவெல்லாஞ் சென்றுலாவித் திரிவனாம்
செல்லுவான் சின்னத்தம்பி தெருவெல்லாம்
விளையாடித் திரியிற வேளையில்

## வெட்டுமாறன், சாய்மலை நாட்டார் வருந்துதல்

வேளைபோலுஞ் சின்னப் பெருமாளையும்
வேந்த னழகன் பெருமாளையும்
வாழைபோல் மந்திரி கொன்ற கூடத்தில்
வந்தார்கள் வெட்டுமாறனுஞ் சேனையும்
வெட்டு மாறனுஞ் சாய்மலை நாட்டாரும்
மேவுந் தும்பிச்சி மாவெலியுங் கா....ட
கட்டிலங்கத்தில் கொன்று புதைத்திடும்
காவலர்க்கு வியாகுலப் பட்டனர்
கட்டடி நால்பேருங் கூடி யழுதார்கள்
கண்கொள் ளாத கரைநீர் புரண்டனர்
வேந்தன் சீவல தேவ ரழகனை
வெட்டத் தாக்கவு மாளுமுண் டாச்சுதோ
வாளிழந் தல்லோ புத்தியு மற்றார்கள்
மன்னர்தன் கைவசம் வந்தகப் பட்டார்கள்
வந்தடித் தனையுமென் றெண்ணினார்
இந்தச் செய்தி அறிந்தோமே ஆனாக்கால்
இருவரும் வெட்டிப்போய்ப் பிழைப்பார்களோ

## மன்னவர் பட்டதைத் தேவிமார் அறிதல்

வியாகுலப் பட்டுச் சூதானத்தை விட்டு
வேந்தர் தம்மையும் பல்லக்கி லேத்தியே
மியான பூமிக்குச் செல்ல நினைந்துதான்
மன்னர் தேவிமார் முன்னே கொடுவந்தார்
வந்த மன்னவர் செய்தியெல்லாஞ் சொல்ல
மன்னர் தேவிமார் வாய்விட் டலறியே
சிந்தை நொந்து கலங்கிக் கலங்கியே
தேவி மார்கள் புலம்பத் துடங்கினார்.

விருத்தம்

## தேவிமார் புலம்புதல்

துடங்கிநீர் சொம்பகிரச் சொன்ன தெல்லாம் தீங்கெனவே
நடங்கினீ ரில்லை மன்னர் அரசாள்வ திப்படியோ
மடங்கலே றனையார்கள் வாய்திறவீ ரென மடவார்
நெடுங்கண்ணீர் முகம் சோர நின்றலறத் துடங்கினரே.

வேறு

நின்றரத்து மடியேனோ டொன்றெடுத்து முரையாத
நெட்டூரம் விட்டுரை செய்தருளீர்

நல்லதுன் றிரும்பு நாராசமென்று நட்டவாழை
வெட்டுமந்தத்
தோள்வலியும் வாள்வலியும் போச்சோ
செய்ய குன்றெடுத்த வாள்வேந்தர்க் கீன்றெடுத்த
வகையேது
கோமடுப் புலியைப் புல்வாய் கொன்றிடுமோ
வீரர் வென்றிபெத்த மதையானை வென்றெடுத்த
வாள்வேந்தர்
வெண்குடைக்கீ ழிங்குவரக் காணோம்
காணோமே யரமகளிர் பூணுலவு மாலையிட
கற்பகத்தி விழலிருக்கப்[275] போனீரோ
வியறை வாளேறும் விழியார்கள் வீணே மசங்குமுங்கள்
வடிவழகும் நடையுமென்று காண்போம்
துய்யபூணூலு மணிமார்புந் தூணான தடம்புயமும்
பொற்பழகுங் கற்புமினி யெப்பொருளுங் காண்போம்
சென்றுசேணாடர் புகழாசை வீணே விதைத்தவர்கள்
தென்காசி மண்காசி யாமே
காசிநக ராளுங் குலசேகரர் தாமேது செய்வார்
சர்ப்பினை கல்லைப் பிளக்குமே யென்பார்
செய்ய மாசுடைய மந்திரி செ(ச)ம் பூசவிடக்
கொல்லுமிந்த
மன்னர் பழியென்னாம் போமோ - எங்கும்
தேசுகாண்ட குறும்பலவில் பூசைகொண்ட குற்றாலர்
திருவுளமு மிவ்வளவாய்ப் போச்சோ
சொல்லியேங்கி நிற்கு மாதர்களுங் கூசி நின்று
சலியாமல் இறந்து விடுவோமென்று மனந் துணிந்தார்

வேறு

துணிந்து விட்டார்க ளிணங்குகஸ்தூரி மணங்கள் பூசுவார்
இன்னிசையாகப் பண்ணிசைபாடி மன்னரைச் சூழுவார்
குணங்களைப் பேசி வணங்கி நிற்பார்கள் துணங்கையிட்
டாடுவார்
கருங்கொண்டலைப் போலுங் கொண்டையைக் கோதி
விண்டபூச் சூடுவார்
விண்டபூச் சூடிக்கொண்டு நிற்பார்கள் மண்டலத்தோர்
முன்னே
ஒருமெய்ப்பூவைத் தேடித் தப்பிவிட்டார்கள் கைப்பிடித்தா
ரென்பார்
செண்டு கைக்கொண்டே அண்டிநிற்பார்கள்
தண்டியொப்பார்கள் முன்னே
சென்று விட்டாரை யெடுத்தே மடியில் வைத்து
முற்றமிடுவார்
முத்தணி பூண்டுவைத்த கண்ணாடி கைத்தல மேந்துவார்
மண்முங்கிய தோளில் செங்கையாற் குங்குமம் பூசுவார்

செற்றவரோ டொருமித்து விட்டார்கள் சித்திரம்
போலுருவார்
அய்யா தேவரீர் பொன்கா வருகேயான் வந்துவிட்டோ
மென்பார்
உன்னிய காதலுக் குன்னடியார்க ளேதுசெய்வோ
மென்பார்
நாங்கள்பிந்தி விட்டோமே யிருந்திளைப்பார் பந்தவிட்டா
ரென்பார்
மன்னவர்வேறு கன்னியராசை உன்னுவாரோ யென்பார்
தெய்வ மங்கை ( யர் ) இனியுங்களை மேவவுஞ்
சங்கையல்ல வென்பார்
சந்தனச் சேறு வந்திரைப்பாரவர் சுந்தரத் தோள்களிலே
வெகு சஞ்சலத்தோடுங் குறுஞ்சிரிப்பாகவே மஞ்சளைப்
பூசுவார்
பங்கயக் கையால் பந்துகலச்சி சங்கைவிட் டாடுவார்
எதிர்பச்சம்[277] பிடித்தொரு பச்சம்பிடித் திலுமிச்சம்பழம்
பிடிப்பார்
சங்கை யுள்ளார்கள் தங்கள் பொன்மாட மெங்கு
முலாவுவார்
இனித்தஞ்ச மில்லாதொரு மஞ்சளில்லாதது கொஞ்ச
மல்லோ வென்பார்
அங்குள்ள தேவர் மங்கையர் போலு மிங்குள்ள தேவிமார்
மனத்தஞ்சந் தவிர்த்தொரு பச்சம்பிடித் திலுமிச்சம்
பழம்பிடிப்பார்
பாரரசாள வூர்பகி ராத காரிய மேதென்பார்
முன் பண்டுள்ள பாடு கொண்டினி யாள்வ தண்டர்பொன்
னாடென்பார்
தாரணி யாளநீ... வீர்பின்னா ரறிவா ரைய்யா
தெய்வச் சங்கீதம் பாடலுடன் களித்தாட லெங்களுக்கோ
வென்பார்
எங்களைப் போலே உங்களுக்குக் காரினி வங்கணத்தோ
ரென்பார்
நீங்க ளெங்கிருப்பீர் சொல்லு மங்கிருப்போம் பின்னை
யிங்கிருப்ப தேனென்பார்
விங்களித்த தாலிவ னெங்கிருப்பான் தினமுங்களைத்
தேடுவான்
மனம்வெம்பி நிற்பான் மனஞ்சம்பி நிற்பான் சின்னத்
தம்பியு மேதென்பான்

விருத்தம்

பட்டதைச் சின்னத்தம்பி அறிதல்

தம்பி வளர்கிடாய் தானேறி வீதிதோறும்
பம்பியொரு வையாளி பாச்சிவிளை யாடுவான்
வெம்பியமு மாவுலி வெட்டுமாறனும் படையும்

கொம்பனையார் தாமழுத குரற்றொலியுங் கேட்டனர்.

கேட்டு மனமுங் கெடிகலங்கி[278] மெய்பதறி
மீட்டுவளர் கிடாய் விட்டிறங்கி யோடிவந்தே
ஊட்டி வளர்த்த உறவுடைய அண்ணமார்
தாட்டிணையில்[279] வீழ்ந்து சின்னத்தம்பி புலம்புவானாம்.

நடை
வேறு

## சின்னத்தம்பி அடைந்த துயர்

புலம்பிப் புலம்பியே சின்னத்தம்பி
பொருமிப் பொருமியே நின்றழுவான்
இலங்கக் கட்டுக்குள்ளே புகுந்தீ ரென்னை
மறந்தீரே அண்ண ரென்பான்
மனந்தா னினைந்தானே குலசேகரன்
மனது துணிந்தானோ கொல்ல வென்பான்
நிறைந்த விழிபுனல் சொரிந்திடுவான்
நெடுமூச் செறிவான் தள்ளாடிடுவான்
அறைந்து நிலந்தன்னில் வீழ்ந்தழுவான்
அண்ணர் பாதத்தில் புரண்டழுவான்
விழுவா னெழுவான் றன்முகத் தறைவான்
மெய்யில் வேர்வைகள் சிந்திடவே
அயர்வான் மதிமுகந் தனிலறைவான்
அண்ணர் தேவிமார் முன்விழுவான்
விழுவா னெழுவான் தள்ளாடிடுவான்
வேந்தர் தேவிமார் முகத்தைப் பார்ப்பான்
கன்று கதறினால் போலழுது
கையால் முகந்தனிலே யறைவான்
சென்று அழகன்றன் தேவிமுன்னே
திடுக்கிட்டே விழுந்தே யழுவான்
வீழ்ந்திடுஞ் சின்னத்தம்பி தன்னை
வேந்த னழகன் பெருமாள் தேவி
தாங்கி யெடுத்தங்கே முகத்தணைத்து
தையல் நல்லாளு மேது சொல்வாள்
உங்க ளண்ணர் பூலோக மாளப்போனார்
யாங்க ளவருடன் போய்வாரோம்
மன்னவன் வெட்டு மாறனுடன்
மன்னா யினிதாக வாழு மென்றார்
என்ற பொழுதிலே மனம்நடுங்கி
இடிக ளிடித்தாப் போல்விழுந்தான்
பெத்த மாதாவை நானறியேன்
பேணி மன்னனாக வளத்தீரே
உத்த மாதாவே நீங்கள் போக
உயிர்தான் தரிப்பேனோ யெனவிழுந்தான்

அண்ணர் தேவிமார் முகத்தைப் பார்த்து
அய்யோ விதியோ தானென அழுவான்
கையால் மதிமுகந் தனிலறைவான்
காற்றாடி போலத் தள்ளாடிடுவான்
வெட்டு மாறனு மாவுலியும்
மேவுந் தும்பிச்சி ராசாக்களும்
கட்டி யழுத குரலோசை
கானம் வானமு மெய்த்திடுமாம்
தெய்வ லோகமுங் கேட்டிடவே
தெய்வற் றிறிக்களும்[280] நின்றிலங்க
என்னை மறந்தீரோ அண்ணரென்பான்
எனக்கு மதியேது சொல்லு மென்பான்
மின்னுந் திருமுகம் வேர்த்திடுவோன்
வெட்டு மாறனைக் கட்டிக் கொள்வான்
கட்டுவான் வெட்டு மாறனுடன்
காணெனிச் சொல்லு மன்னரெங்கே என்பான்
இட்டமுட னின்ற மாவுலியை
இருகை யாரவே தழுவிக்கொண்டான்
தழுவி யழும்புறங் காட்டாப்புலி
தன்னைப் பார்த்துக் கண்ணீர் சொரிவான்
அண்ணர் தனைவிட்டும் இருப்பதில்லை
ஆவி விடுவேனென்றே துணிந்தான்
என்னுமன்னர் கடன் கழித்தால்
என்காரியமும் பின்பார்ப்பே னென்றான்

## தேவிமார் உடன்கட்டை ஏறுதல்

பார்த்துரை வெட்டு மாறனுந்தான்
பாத்துப் பின்னிருப்ப தென்னவென்று
ஆர முலையாரை மன்னருடன்
அடக்க வேணுமென்றே துணிந்தான்
துணிந்த மடவாரை மன்னருடன்
சுவடித்திருந்த[281] பல்லக்கில் வைத்தான்
பரிந்த துரைமக்கள் சூழ்ந்துவர
பரியுங் கரியு முன்னே நெருங்க
நெருக்கும் படை புடைசூழ்ந்து வர
நீல விழியார் சாமரை யிரட்ட
வெருண்ட யிடியேறு போல் முழங்கி
மேள வாச்சியந் தான்முழங்க
சனங்கள் குடிகளெல்லா மிரங்க
சடிதிக் கரையாற்றிலே கொடுபோய்
அழுந்தும் புழுகொழுகும் புயத்தான்
அழகன் பெருமாளுந் தேவியரும்
தென்னர் குலத்து வங்கிசத்தார்கள்[282]

தெய்வேந் திரனைப்போல் வீற்றிருக்க
வெய்ய மதிமுகம் போல்முகத்தான்
மீண்டுஞ் சின்னப் பெருமாளுடனே
தன்னை நிகரான தேவியருஞ்
சந்தனக் கட்டை மீதிலேற்றி
என்னை வளத்திடு மன்னருக்கு
இதுவோ பலனென்று வலமும்வந்து
வந்த மறையவருக்கும் ரொக்கம்
வாரித் தானமுந் தான்கொடுத்து
முந்து தீக்கடனுங் கழித்து
முழங்கிக் கனலையு மூட்டிவிட்டார்

### சின்னத்தம்பியின் இறுதி முடிவு

மூட்டுஞ் சிறுவாளை உறைகழத்தி
முந்த நிலத்திலே தானிறுத்தி
பாட்டில் விழுந்ததை ஒருவர் காணார்
பட்டானே சின்னத் தம்பியென்றார்

### பிறரின் முடிவு

என்று சொல்லக்கேட்ட அரசன்மகன்
இலங்கு சமுதாட்டில் பாய்ந்திறந்தான்
ஒன்றி யகலநின்ற ஒட்டக் காரன்
ஊட்டி தெறிக்கவே பாய்ந்திறந்தான்
இறையும் பிறையுங் கட்டியக்காரன்
ஏற்றுஞ் சமுதாட்டில் பாய்ந்திறந்தான்
முறையா யிறந்தார்க ளெல்லாரும்
மூற்ற[283] அழகனார் தம்முடனே
தம்பி சின்னப் பெருமாளுடனே
தையலா ரரசன் மகனும்
வெம்பு மோட்டன் கட்டியக்காரன்
மேவுஞ் சிவலோகம் வீற்றிருந்தார்

### சின்னத்தம்பியை நல்லடக்கஞ் செய்தல்

இருந்த வெட்டு மாறனுந்தான்
எங்கே சின்னத்தம்பி யென்றான்
பொருந்து முடையதோர் வாளில் பாய்ந்து
போனான் சின்னத் தம்பியென்றான்
அரசு முடிந்திது தென்காசியூர்
அழியு மினியென்று விழுந்தழுதான்
திருமார் பழுந்தவே வெட்டு மாறன்
சின்னத் தம்பியைத் தானெடுத்து
அணைத்துக் கண்ணீர் மஞ்சனமாட்டி
அரசர் முறையால் நல்லடக்கஞ் செய்து
பணைத்தபுயன்[284] வெட்டுமாறன் மன்னன்
படையோ டிருந்தான் தென்காசிதன்னில்

## மாவுலிக்குப் பட்டம் கட்டுதல்

காசிப் பதியாள மாவுலியை
கட்டினான் பட்டம் வெட்டு மாறன்
தூசிப் படையோடே தானடந்து
சூழ்ந்த கயற்றாற்றில் வீற்றிருந்தான்

## வாழி

இருந்தா ரிவர்க ளெல்லோரும் வாழி
பரிவான சின்னப்பெருமாள் சின்னத்தம்பி வாழி
ஏற்றுங் கதை ( படி ) த் தே ( ார் ) கள் வாழி
திருந்தச் செ ( கந்த ) னிற் கேட்டோர் வாழி
தேச முழுதுந்தான் வாழியதே

## விருத்தம்

பார்வாழி அழகன் பெருமாள் வாழி
    பரிவான சினனப்பெருமாள் சின்னத்தம்பி வாழி
கார்வாழி அந்தணர்க ளரசர் வாழி
    கவிராசர் வாழிமிகுந்த புவிராசர் வாழி
ஏர்வாழி படைத்தலங்க ளெல்லாம் வாழி
    இயல்வான காராளர் வங்கிசமும் வாழி
சீர்வாழி கதைபடித்தோர் கேட்போர் வாழி
    செழிப்பாக யென்னாளும் வாழி தானே

அழகன் பெருமாள் கதை முகிந்தது முற்றும்.

* * *

# சொல் விளக்கக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | அழகம்பெருமாள் | - அழகன் பெருமாள், பேச்சுவழக்கில் அழகம் பெருமாள் என ஆனது. |
| 2. | சரசோதி | - சரசுவதி. பேச்சு வழக்கில் சரசோதி என ஆனது. |
| 3. | செஞ்சடையார் | - சிவந்த சடையுடையவராகிய சிவபெருமான் |
| 4. | குலவரை மடந்தை | - பார்வதவர்த்தினியாகிய பார்வதி |
| 5. | நால்வாய் | - தொங்குகின்ற வாயாகிய தும்பிக்கை |
| 6. | வாகைமுகில் தன்னை விலங்கிட்டோன் | - ஒரு பழைய பாண்டிய மன்னன் |
| 7. | மகரக்கொடியை பேரின் மிசை வைத்தோன் | - மகரத்துவச பாண்டியன் |
| 8. | நீபமலர் | - கடம்ப மலர் |
| 9. | பூதந்தன்னை முந்துபணி கொண்டோன் | - பழைய பாண்டிய மன்னன் செய்ததாகச் சின்னமனூர்ச் சிறிய, பெரிய செப்பேடும் கூறும். வரி (10-11, 98-99). |
| 10. | அங்கயக்கண் ணம்மை யொரு பங்கிலுறை பெம்மான் | - உமையொரு பாகனாகிய சிவபெருமான் |
| 11. | வந்திதரும் பிட்டுக்கு மண் சுமந்திட்டோன் | - அரிமர்த்தன பாண்டியன் ஆட்சிக் காலத்தில் வந்தி என்ற முதிய வளுக்காக அவள் தந்த பிட்டுணவை உண்டு, உடைப் பெடுத்த வைகையை அடைக்க மண் சுமந்த சிவபிரான். 64 திருவிளையாடல்களில் ஒன்று. |
| 12. | தொடித்தலைகொண் டிந்திரன் முடித்தலை புடைத்தோன் | - உக்ரகுமார பாண்டியன் |
| 13. | நாவிலோகம் | - நாவலந் தீவு |
| 14. | இளமுறைக் கூறு | - இளையவர்கள் ஆட்சி செலுத்துவதற்கான நாட்டுப் பகுதிகள் |
| 15. | சர்ப்பினை | - சர்ப்பனை, வஞ்சனை. |
| 16. | உற்பனம் | - உத்தமம், உயர்வு. |
| 17. | பின்னம் | - மாறுபாடு |
| 18. | பேய்க்குதிரை | - வெறி கொண்ட குதிரை |
| 19. | இருப்பு நாராசமற | - இரும்புக்கம்பி அற்று விழுமாறு |
| 20. | நிருபர் | - அரசர் |
| 21. | முனிந்து | - கோபமுற்று |

| | | |
|---|---|---|
| 22. பட்டது | - | இறந்தது |
| 23. பட்ட மன்னர் | - | இறந்த மன்னர் |
| 24. அட்டதிசை | - | எட்டுத்திசை |
| 25. வேத்திமைகள் | - | வேற்றுமைகள் |
| 26. அகப்பொரின் | - | அகப்பொருள் |
| 27. பிறப்பொருள் | - | புறப்பொருள் |
| 28. தெண்டி | - | தண்டியாசிரியர் |
| 29. மறி | - | மான் |
| 30. பொறி | - | புள்ளி |
| 31. பூநாகம் | - | பூவிலிருக்கும் விஷப்புழு வகை, நாகப்பூச்சி. |
| 32. நாண்மலர் | - | நாள்மலர், அன்று பூத்த மலர். |
| 33. கயம் | - | குளம் |
| 34. கஞ்ச மலர் | - | தாமரை மலர் |
| 35. புயல் | - | நீர்மேகம் |
| 36. மாறியாட | - | கால் மாற்றியாட |
| 37. வழுதி | - | பாண்டிய மன்னன் |
| 38. குட்டை | - | சிறுதுணி |
| 39. சிற்பரனை யன்றுமொரு கைப்பிரம்பா லடித்தோன் | - | அரிமர்த்தன பாண்டியன் |
| 40. தமிழ்ப்பாடல் புவிக் கணியான் வகுத்தோன் | - | வங்கிய சேகர பாண்டியன் |
| 41. சங்கப் பலகைதனி லிருந்தோன் | - | பாண்டியர் பரம்பரையில் வந்த ஒரு மன்னன் |
| 42. கதவைத் தெறித்தவிரல் தறித்தோன் | - | பொற்கைப் பாண்டியன் |
| 43. செங்கனக முடியொடு பிறந்தோன் | - | பழைய பாண்டிய மன்னன் ஒருவன் |
| 44. தாளில் வடிவம்பலம் நின்றோன் | - | வடிவலம்ப நின்ற பாண்டியன் |
| 45. சங்கரனைக் கண்டோன் | - | வரகுண பாண்டியன் |
| 46. கொலை | - | குலை |
| 47. பூவரி | - | பூவிரி, பாளை. |
| 48. சாய்மரை | - | சாமரை, சாமரம், பெரியவிசிறி. |
| 49. பொங்கர் | - | சோலை |
| 50. தன்மன் | - | தருமன் |
| 51. பணிக்கர் | - | படைக்கலம் பயிற்றுவோன் |
| 52. ஏமம் | - | காவல் |
| 53. ஆழி | - | மோதிரம் |
| 54. முடிச் சாற்று | - | முடிச்சாத்து, தலைப்பாகை. |
| 55. வங்கு | - | வங்கி, ஒருவகைத் தோளணி. |

| | | |
|---|---|---|
| 56. வலையம் | - | வலயம், கை வளையம். |
| 57. சரப்பளி | - | சரப்பணி, பொன்னாலியன்ற, வயிரமழுத்தின கழுத்தணி வகை. |
| 58. பதைக்கம் | - | பதக்கம், சரடு முதலியவற்றிற் கோர்க்கப்படும் கல்விழைத்த தொங்கற் கழுத்தணி. |
| 59. காசினி | - | பூமி |
| 60. புண்டரீகம் | - | புண்டரிகம், தாமரை. |
| 61. இடுக்கம் | - | துன்பம் |
| 62. ராசியமாய் | - | ரகசியமாய் |
| 63. சுமித்திரியாய் | - | திறம்பட (பேச்சுவழக்குச் சொல்) தசரதனின் மனைவியும் சுமர்த்தர்களான இலக்குமண, சத்துருக்கனரின் தாயுமான சுமித்திரையினின்று பிறந்த சொல் வழக்கு? |
| 64. சொம் | - | சொத்து |
| 65. மகோதரன் | - | இராவணனின் மந்திரி |
| 66. இற்றவர் | - | இத்தன்மையர் |
| 67. துறட்டு | - | அபாயம், சிக்கல். |
| 68. கருவேலம் | - | கருவூலம், பொக்கிஷம். |
| 69. காஞ்சூரை | - | காஞ்சொறி பூடுவகை காட்டுச் சுரைக்காய்? |
| 70. சனு | - | தயை |
| 71. வெருக்குள்வார் | - | வெருக்கொள்வார், பயங்கொள்வார். |
| 72. உத்திரம் | - | உத்தரம், எதிர்வாதம். |
| 73. சதிக்க | - | அழிக்க, வஞ்சிக்க. |
| 74. உத்தி | - | தந்திரம் |
| 75. முகிழ்த்தம் | - | முகூர்த்தம், நல்வேளை |
| 76. அறக்குலை | - | அறக்கொலை, கொலைப்படல். |
| 77. பரிகலம் | - | சேனை |
| 78. சிங்காடி வில் | - | சிங்காணி வில், உண்டை வைத்து அடிக்கும் ஒருவகை வில். |
| 79. மருவலர் | - | மருவார், பகைவர். |
| 80. மினவ | - | வினவ, கேட்க. |
| 81. இரைத்தமொழி | - | இரைச்ச மொழி, இரைச்சல், சப்தம். |
| 82. உலுப்பை | - | அதிகாரமுள்ளோருக்கு மரியாதையுடன் அனுப்பும் உணவுப் பண்டங்கள் |
| 83. ஊருக் கரையாளர் | - | கிராமக்கரைப் பங்குக்கு உரியவர் |
| 84. பின்னம் | - | மாறுபாடு, பிளவு. |
| 85. விடையம் | - | தேசம் |
| 86. பரிவிழைக்க | - | அழிவிழைக்க |
| 87. தீபரமாய் | - | தீவிரமாய் |

| | | |
|---|---|---|
| 88. நின்னயம் | - | நிர்ணயம், உறுதி. |
| 89. கன்மம் | - | கர்மம், கருமம், வினைப்பயன். |
| 90. உற்பனம் | - | நிமித்தம் |
| 91. குண்டையங் கோட்டு மறவர் | - | கொண்டையங் கோட்டை மறவர். கொண்டை கட்டி மறவர், மறவர் வகை |
| 92. தம்பட்டம் | - | தோற்கருவி வகை, தற்காலத்தில் தப்பட்டை, தப்பு என வழங்கப் படுகிறது. 'தப்தப்' என ஒலிப்பதால் 'தப்பு' எனப்பெயர் பெற்றுள்ளது. கோயில் திருவிழா, திருமணம், இறப்புச் சடங்குகளில் பயன்படுத்தப் படுகிறது. |
| 93. டம்மானம் | - | டமாரம், டம்மாரம் என்று வழங்கப் பெறும் தோற்கருவி வகை. வளைவான, நேரான இருவகைப்பட்ட குச்சி களால் அடித்து ஒலி எழுப்பப்படுவது. |
| 94. டமிக்கு | - | தமுக்கு ஆகலாம். தோற்கருவி, பறை வகை, கிண்ண வடிவானது, குச்சிகளாலோ, கையாலோ அடித்து முழக்குவர். |
| 95. மேளம் | - | இரு முகம் கொண்ட தோற்கருவி. தவில் வாத்தியம் என்றும் கூறப் பெறும். வலப்பக்கம் கையாலும், இடப்பக்கம் குச்சியாலும் அடித்து வாசிக்கப்பெறுவது. நாகசுரம், ஒத்து, தவில், தாளம் ஆகிய இசைக்கருவிகள் இணைந்துள்ள தொகுதியும் மேளம் எனப்படும். |
| 96. கிடிபிடி | - | கிடுபிடி, வட்டவடிவமான ஒருவகை வாத்தியம். |
| 97. திண்டிமம் | - | ஒருவகைப்பறை. தோற்கருவி வகை. |
| 98. படகம் | - | பரந்த வாயையும் ஒரு முகத்தினையும் உடைய தோற்கருவி. பறை வகையைச் சார்ந்தது. ஒற்றை விரலால் தெறித்தும், ஐந்து விரல்களையும் கூட்டிப் புடைத்தும் முழக்குவர். சமக்கருவி, தலைக்கருவி, அக முழவு என இசைநூல் இக்கருவியை வகைப்படுத்திக் கூறும். தஞ்சை- மாயூரம்-திருவாவடு துறை - கோமுக்தீஸ்வரர் |

கோயிலிலுள்ள இரண்டாம் ஆதித்தியனுடைய கல்வெட்டில் இக்கருவி தாரணி படகம் என்று குறிக்கப் பெற்றுள்ளது. "இதன் தெற்கடையத் திருஉவச்சகளுக்குத் தாரணிப் படகத்துக் காணும்" என்பதே அத்தொடர்.

99. துடி - தோற்கருவி வகையினது. துடி இடி போன்று ஒலித்து, அச்சத்தை உண்டாக்க வல்லது. இது பாலைப் பறையாகும். இசைநூல், துடியை வன்மைக்கருவி, இடைக் கருவி, புற முழவு, காலை முழவு என வெவ்வேறு வகையில் முறைப்படுத்திக் கூறும்.

100. மல்லாரி - இசைக் கருவி வகையினது

101. பேரி - போர்ப்பறை. பேரிகை எனப்படும். இராமாயணம் போன்ற இதிகாச நூல்களில் குறிப்பிடப் பெறும் பழமை வாய்ந்தது. இரணபேரி என்பது போர்க்களத்தில் பயன்படுத்தப்பட்ட போர்ப்பறை. ஜெயபேரி என்பது வெற்றிப் பறையாகும். வன்மைக் கருவி, தலைக்கருவி, அகமுழவு என இப்பேரியை இசை நூல் வகைப்படுத்தும். இக்கருவி குரவமரத்தால் செய்யப்படும். வளைந்த குச்சிகளால் தாக்கி முழக்கப்படுவது இக்கருவி.

102. தடாரி - தடாரிப்பறை. தோற்கருவி வகையினது. படம் விரிந்த பாம்பினது பொறி, யானையின் அடிச்சுவடு, முழுமதி, ஆமை போன்ற வடிவ ஒப்புமை உடையது. உடுக்கை, கிணைப்பறை என்றும் அழைக்கப் பெறும். இசைநூல் இதனை மென்மைக் கருவி, இடைக்கருவி, புற முழவு வகையில் அடக்கியுள்ளது.

103. முரசு - தோற்கருவி வகையினது. வன்மைக் கருவி, வீரக் கருவி, பன்மை முழவு (பண்ணமை முழவு) என இசைநூல் முரசை வகைப்படுத்தும். சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் மூவர்க்கும் உரியது. பெரிய கண்ணை உடையது. ஒலிக்கும் இடம் அகன்றது. உரல் போன்று வட்ட வடிவமான வாயை உடையது. மயிர் சீவாது போர்த்தப்பட்ட கண்ணை உடையது. குறுந்தடியால் தாக்கிப் புடைத்து ஒலிக்கப்படும் இழுமெனும் ஓசையுடையது.

104. தவில் - பீப்பாய் வடிவான தோற்கருவி. கோயில் மேள வாத்தியங்களில் ஒன்று. திருமணம், பண்டிகை முதலிய சடங்குகளிலும் நாகசுரம், ஒத்து, தாளம் என்னும் கருவி களுடன் கொட்டப்படுவது. தவிலின் உடல் பலாமரத்தால் செய்யப் படுவது. தவிலை முழக்கும் குறுந்தடி புரசை மரத்தால் ஆனது.

105. வீரணம் - வீராணம் என்றும் அழைக்கப் பெறும். இசைக்கருவி வகையினது.

106. தொண்டகம் - தோற்கருவி. தொண்டகச் சிறு பறை எனப்படும். திரிகைக் கல்லை ஒத்ததான வட்டமான வாயுடையது. கோலால் தலைப் பகுதியில் அடித்து முழக்குவர். இக்கருவி முருகியம் என்ற வெறியாட்டுப் பறையுடனும் துடியுடனும் முழக்கப்படுவது.

107. திமிரி - இசைக்கருவி வகையினது.

108. பம்பை - தோற்கருவி வகை. நீள் உருளை வடிவமுள்ள இரு பறைகள் ஒவ்வொன்றும் ஓரடி நீளமுள்ளவை. ஒன்றன்மேல் ஒன்றாக இணைத்து இரட்டையாகக் கட்டப்பட்டிருக்கும். துடி, முரசம், சங்கம் முதலிய பிற இசைக்கருவிகளுடன் சேர்த்து முழக்கப்படுவது.

| | | |
|---|---|---|
| 109. பூரிகை, நாகசுரம், சங்கு, முடுகுசின்னம், நவுரி, கொம்பெக்காளம் | - | ஊதும் இசைக்கருவி வகைகள் |
| 110. உண்டை | - | வில்லுண்டை, வில்லுருண்டை. |
| 111. பரிசை | - | கேடயம் |
| 112. குந்தம் | - | எறிகோல் |
| 113. கட்டாரி | - | குத்துவாள் |
| 114. வல்லயக்காரர் | - | ஈட்டிப் படையினர் |
| 115. பாளையம் | - | படை |
| 116. பாளையஞ் செய்திருந்தார் | - | படையுடன் தங்குதல் |
| 117. கலை | - | ஆண்மான் |
| 118. துடந்தார் | - | தொடர்ந்தார் |
| 119. மெய் | - | உடல் |
| 120. சளம் | - | துன்பம் |
| 121. படி | - | தினசரிச் செலவுக்காகக் கொடுக்கும் பொருள் |
| 122. கணியான் | - | சோதிடன் |
| 123. பரிகலம் | - | மேலானோர் உண்ணும் பாத்திரம் |
| 124. ஓட்டன் | - | ஓடி வந்து செய்தி சொல்பவன் (Runner) |
| 125. ஒருமிக்கப் பட | - | அனைவரும் இறக்க |
| 126. வாவுபரி | - | தாண்டும் குதிரை |
| 127. வல்லத்தானோ | - | வல்லமை உடையானோ |
| 128. மட்டித்தார் | - | நிச்சயித்தார் |
| 129. விசாரம் | - | கவலை |
| 130. தீபரமாய் | - | தீவிரமாய் |
| 131. பத்தும் | - | பற்றும், பிடிக்கும். |
| 132. கிந்திகிந்தி | - | நொண்டிநொண்டி |
| 133. வலம் | - | வலது பக்கம் |
| 134. சிறங்கை | - | கைந்நிறையளவு |
| 135. கோடி | - | கோணி |
| 136. வீறு | - | அழகு, பொலிவு. |
| 137. பரங்கிப்புண் | - | மேகநோய் |
| 138. ஒடுவாய் | - | விரைவாய் |
| 139. நெட்டூரி | - | நிஷ்டூரி, கொடுமையானவள். |
| 140. பயல் | - | பையன் |
| 141. கொட்டு | - | மேளம் |
| 142. நடை | - | நடைவாசல், முன்வாசல். |
| 143. மசக்குது | - | மயக்குகிறது |
| 144. சந்தம் | - | சுகம் |
| 145. மல் | - | மற்போர் |

146. வங்கணக்காரர் - உற்ற நண்பர்
147. கிளியாந்தட்டு - தரையில் கோடு கிழித்துத் தாண்டி விளையாடும் விளையாட்டு வகை
148. சூட்சி - சூழ்ச்சி
149. சிட்டர் - சான்றோர்
150. முத்தும் - முற்றும்
151. பற்றலர் - பகைவர்
152. கொத்த - கொற்ற (கொற்றம்-வெற்றி).
153. அவசம் - தன்வசப்படாமை, தோல்வி.
154. பிரிசமுடன் - பிரியமுடன், விருப்பமுடன்.
155. பூப்பரிசம் - பூப்பொரிச்சம், பூப்பொருத்தம், பூக்கட்டிப் பார்த்தல்.
156. திருவரை - திரு+அரை, அழகிய இடுப்பு.
157. சுரிகை - உடைவாள்
158. குசை - குதிரையின் வாய்க் கருவியில் கோத்து முடியுங் கயிறு.
159. கொய்யுளை - குதிரைப் பிடரிமயிர்
160. சேணம் - மெத்தை
161. கல்லணை - கலணை, புரவி செலுத்தி.
162. சோடு - காற் கவசம்
163. பலகறை - சோகி
164. சிங்காடி - சிங்காணி, அலங்காரவில்.
165. தூசிப்படை - கொடிப்படை
166. பணையாமல் - தவறாமல்
167. பதிக்கி - ஒளித்து
168. கதித்த - ஒலித்த, கோபித்த.
169. குப்பம் - கூட்டம்
170. நேரிசம் - எறிபடை
171. குலிலி - குலவை, நாவாற் குழறியிடும் ஒலி.
172. குட்டியச் சுவர் - குட்டிச்சுவர், இடிந்த சிறு சுவர்.
173. கொண்டையங் கோட்டை மறவர் - மறவர் சாதிப் பிரிவு வகை.
174. தொண்டு - தேங்காய் முதலியவற்றின் மேற்றொலி
175. உறக்கப் பிராந்து - தூக்க மயக்கம்
176. இண்டஞ்செடி - கொடிவகை
177. சத்தும் - சற்றும்
178. கொத்தக்குடை - கொற்றக்குடை
179. காளாஞ்சி - தாம்பூலந் துப்பும் கலம்
180. கருவேலம் - கருவூலம்
181. சாளிகை - பணப்பை

182. நவுரி - நமரி, நீண்ட எக்காள வகை.
183. சல்லரி - தோற்கருவி. உள்ளங்கை நுனி விரலால் தாக்கி, முழக்கி ஒலிப்பர். பறைப்பொது, திமிலைப் பறை என்றும் அழைக்கப் பெறும்.
184. வீடினார் - இறந்தார்
185. ஒலுங்கு - பெருங்கொசு வகை
186. கழுது - வண்டு
187. சோமம் - ஆடை
188. பட்சம் - அன்பு
189. புல்வாய் - கலைமான்
190. உத்திரன் - உருத்திரன், சிவன்.
191. பாசுபதம் - சிவாஸ்திரம் சிவனால் அர்ச்சுனனுக்கு அளிக்கப்பட்டது. நிகரற்றது. அனைத்துப் பிராணிகளுக்கும் அச்சத்தைத் தருவது.
192. மகோதரன் - இராவணனின் முதல் மந்திரி. மகா மாயாவி. சீதையை விடாதிருக்க இராவணனுக்குப் புத்தி கூறியவன். இராம, இராவண யுத்தத்துக்குக் காரணமானவன்.
193. ஏமன் - எமன்
194. செய்ய முகம் - சிவந்த முகம்
195. மறலி - எமன்
196. பாற்றனையோ - பார்த்தனையோ
197. ரண்டு - இரண்டகம், துரோகம்.
198. நேரிசம் - எறிபடை, அம்புவகை.
199. இவடம் - இவ்விடம், இந்த இடம் (மலையாள வழக்கு).
200. தெத்து - ஏமாற்று
201. பவிஞ்சு - ஒழுங்கு
202. சாணி - குதிரை பழக்குவோன்
203. சூடு - வைக்கோற்போர்
204. கன்னச்சல்லி - குதிரையின் இரு கன்னப் புறத்திலும் அணிவிக்கப்படும் அமைப்பு.
205. தாப்பணிவார் - கலனைக் கச்சை
206. சேற்றான் - சேர்த்தான்
207. கல்லணை - கலனை, சேணம்.
208. கவடி - பலகறை, சோகி.
209. சன்னாகம் - போர்க் கவசம்

| | | |
|---|---|---|
| 210. வாசி | - | குதிரை |
| 211. கொஞ்சி | - | இனிதாய் ஒலித்து |
| 212. குசை | - | குதிரையின் வாய்க்கருவியிற் கோத்து முடியுங் கயிறு, கடிவாளம். |
| 213. கெதி | - | கதி, நடை. |
| 214. மயூக் கெதி | - | மயூர்க் கெதி, மயில் நடை. |
| 215. சாலகம் | - | ஜாலம் |
| 216. குனித்திடும் | - | வளைத்திடும் |
| 217. அதக்கி | - | வாயுள் அடக்கி |
| 218. பிற்று | - | பித்து |
| 219. அண்டம் | - | பீசம், அண்டவிதை |
| 220. கார் | - | கறுப்பு |
| 221. கலை | - | ஆடை |
| 222. துடந்தயல் | - | தொடர்ந்து அருகில் |
| 223. தேவர்தரு | - | கற்பக விருட்சம் |
| 224. கரிசம் | - | வெறுப்பு |
| 225. விடையமிட்டு | - | பெருங்கோபங் கொண்டு |
| 226. பிலம் | - | பலம் |
| 227. கட்டியல் | - | அழகிய வேலைப்பாடு மிக்க ஓர் ஆயுத வகை |
| 228. விகடிதம் | - | கபடம் |
| 229. கவடு | - | கபடு |
| 230. கழுந்துலக்கை | - | திரண்ட நுனியுடைய உலக்கை |
| 231. மாமகள் | - | திருமகள் |
| 232. எழுபாரும் | - | ஏழு உலகும் |
| 233. பிலவான் | - | பலவான், பலசாலி. |
| 234. தகரம் | - | வாசனை |
| 235. சவி | - | சபி (சாபமிடுதல்). |
| 236. ராசியம் | - | ரகசியம் |
| 237. நேமந்தன் | - | நேமியாகிய சக்கராயுதத்தைக் கையில் கொண்டிருக்கும் திருமால். |
| 238. சுளிப்பு | - | சுளுவு, சுலபம். |
| 239. கொப்பம் | - | யானையைப் பிடிப்பதற்காக வெட்டும் பெருங்குழி |
| 240. புண்டரீகம் | - | தாமரை |
| 241. கொற்றுமணி | - | கொத்துமணி |
| 242. நாவி | - | புழுகு |
| 243. சொம் | - | சொத்து |
| 244. இடைக்கிடை | - | எடைக்கு எடை |
| 245. ரண்டு பண்ண | - | இரண்டு பண்ண, துரோகம் செய்ய. |
| 246. கெம்பாமலே | - | கொந்தளிப்பின்றி |

| | | |
|---|---|---|
| 247. சூதானத்தில் | - | பத்திரமாயிருத்தல் |
| 248. சொட்சமற | - | மீதமில்லாமல் |
| 249. வாச்சி | - | வாச்சாத்து, மரம் பிளக்கப் பயன் படுவது. |
| 250. கூவல் | - | கிணறு |
| 251. தேட்டிலே | - | சேகரிக்கப்பட்ட பொருளிலே |
| 252. நாராங்கி | - | நாதாங்கி, பூட்டு, தாழ்ப்பாள், சங்கிலி இவை மாட்ட உதவும் கதவுநிலையுறுப்பு. |
| 253. தறுகண் | - | அஞ்சாமையாகிய வீரம் |
| 254. பிலம் | - | பாதாளம் |
| 255. கதிப்புடனே | - | இறுக்கமுடனே |
| 256. வலித்து | - | இழுத்து |
| 257. முடுக்கி | - | விரைந்து |
| 258. குடற்குறைபடுவார் | - | குடல் அறுபடுவார் |
| 259. பொருப்பு | - | மலை |
| 260. முருக்கிதழ் | - | சிவந்த உதடு |
| 261. வல்லை | - | வருத்தம் |
| 262. தளன்று | - | தளர்ந்து |
| 263. சம்பி | - | வருந்தி |
| 264. நிட்செயம் | - | நிச்சயம் |
| 265. கதித்தனர் | - | சினந்தனர் |
| 266. விள்ளாமல் | - | சொல்லாமல் |
| 267. சந்து | - | கை, கால் மூட்டுகள் |
| 268. பேர்ப்பேன் | - | பெயர்ப்பேன் |
| 269. செருத்தார் | - | தடுத்தார் (மலையாள வழக்கு). |
| 270. வீண்குலை | - | வீண்கொலை |
| 271. துடந்தி | - | தொடர்ந்து |
| 272. பெத்தி | - | பெற்றி, தன்மை. |
| 273. எண்ணமத்து | - | எண்ணமற்று |
| 274. குடிமீ | - | குடுமி |
| 275. கற்பகத்திலிழல் | - | கற்பகத்தினிழல் |
| 276. செற்றவர் | - | செத்தவர் |
| 277. பச்சம் | - | பட்சம், பக்கம். |
| 278. கெடிகலங்கி | - | கெதி கலங்கி, கதிகலங்கி. |
| 279. தாட்டிணையில் | - | தாளிணையில், பாதத்தில். |
| 280. தெய்வற்றிறிக்களும் | - | தெய்வ ரிசிகளும் (முனிவர்கள்). |
| 281. சுவடித்திருந்த | - | சோடித்திருந்த, அலங்கரித்திருந்த. |
| 282. வங்கிசத்தார் | - | வம்சத்தார் |
| 283. மூற்ற | - | மூத்த |
| 284. பணைத்த புயன் | - | பருத்த புயங்களை உடையவன். |

# துணை நூற் பட்டியல்


1. அச்சும் பதிப்பும், மா.சு. சம்பந்தன், தமிழர் பதிப்பகம், சென்னை, 1980.
2. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம். மது.ச. விமலானந்தம், ஐந்திணைப் பதிப்பகம், 1987.
3. The Wandering Voice, Ed. R. Nirmala Devi, ஆசியவியல் ஆய்வு நிறுவன வெளியீடு, 1987.
4. கோபல்லபுரத்து மக்கள், கி, ராஜநாராயணன், அன்னம் வெளியீடு, மே, 1990.
5. ஐவர் ராசாக்கள் கதை, பதி. நா. வானமாமலை, மதுரைப் பல்கலைக்கழகம், ஜன, 1974.
6. பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,1999.
7. ஊரும் பேரும், ரா.பி. சேதுப்பிள்ளை, சென்னை, 1946.
8. தென்னிந்தியக் கல்வெட்டுகள்
9. இராமப்பய்யன் அம்மானை ஓர் ஆராய்ச்சி, க.சி. கமலையா, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1980.
10. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், தி. ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸஸ், 2ம் பதிப்பு, 1982.
11. வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல், பதி. நா.வானமாமலை, மதுரைப்பல்கலைக் கழகம், மதுரை, அக், 1971.
12. கட்டபொம்மு கூத்து, பதி. நா. வானமாமலை, மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1972.
13. தமிழ் அகராதிகள்
14. திருக்குறள் தெளிவுரை, மு. வரதராசனார், கழக வெளியீடு, சென்னை, 1967.
15. இடைச்சி செல்லி கதை, கேரளப்பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடி, எண்-8016.
16. வீணாதி வீணன் கதை, பதி. நா. வானமாமலை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1964.
17. பாண்டியர் வரலாறு, கே.வி. இராமன், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1977.

18. காமன் கதைப்பாடல் - ஓர் ஆய்வு, கோவி, இராசகோபால், மாருதி பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை - 14, டிசம்பர், 1985.

19. பாண்டியர் வரலாறு, T.V. சதாசிவ பண்டாரத்தார், மூன்றாம் பதிப்பு, 1956.

20. பறை, முனைவர் மு. வளர்மதி, திருமகள் நிலையம், சென்னை - 17, 1999.

21. சிதம்பர நாடார் கதை, பதிப்பு. சு. தங்கதுரை, மே, 1982, ஸ்ரீ பரந்தாமன் பிரிண்டர்ஸ், நாகர்கோவில்.

# சிறப்புச் சொல்லகராதி

## எண் - பக்க எண்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| சங்க இலக்கிய ஆய்வுகள் | 30.00 |
| தொல்காப்பிய ஆய்வுகள் | 20.00 |
| Indian Epistemology | 125.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| உ.வே.சா. நூல்களில் சொல்லும் சுவையயும் | 18.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-3 | 50.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-2 | 70.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-1 | 75.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-2 | 65.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-1 | 70.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| தமிழர் சமூகவியல் | 35.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| TRANSLATION - Theory & Application | 35.00 |

Pub.No. 394 **அழகன் பெருமாள் கதை** 45.00